# இஸ்லாத்தின் பார்வையில் மத்ஹபுகள்

ஆசிரியர். P.ஜைனுல் ஆபிதீன்

## முன்னுரை

நான்கு மத்ஹபுகளில் ஒன்றைப் பின்பற்றுவது தான் இஸ்லாம் என்று இந்திய முஸ்லிம்களில் அதிகமானவர்கள் நம்புகிறார்கள்.

நான்கு மத்ஹபுகளில் ஒன்றைப் பின்பற்றாதவர்கள் பள்ளிவாசலுக்கு வரக்கூடாது என்று தமிழகத்தின் பல பள்ளிவாசல்களில் அறிவிப்பு பலகைகள் வைக்கப்பட்டுள்ளன.

இஸ்லாத்தின் அடிப்படைக் கொள்கையான லாயிலாஹ இல்லல்லாஹ், முஹம்மதுர் ரஸூலுல்லாஹ் என்ற கலிமாவின் பொருளைத் தக்க முறையில் ஒருவர் அறிந்து கொண்டால் மத்ஹபுக்கும், இஸ்லாத்துக்கும் சம்மந்தமில்லை என்ற முடிவுக்கு வந்து விடுவார்.

லாயிலாஹ இல்லல்லாஹ் என்றால் வணக்கத்துக்கு உரியவன் அல்லாஹ்வைத் தவிர யாரும் இல்லை என்பது பொருள். இதை ஏற்பவர், அல்லாஹ் தான் அனைவருக்கும் எஜமான்; அனைவரும் அவனது அடிமைகள் என்று வாக்கு மூலம் தருகிறார்.

ஒன்றைக் கூடும் என்று சட்டமியற்றவோ, கூடாது என்று தடை விதிக்கவோ அதிகாரம் படைத்தவன் அல்லாஹ் மட்டுமே. இறைவனல்லாத வேறு யாரும் இந்த அதிகாரத்தைப் பெற்றிருக்கிறார்கள் என்று எவர் நம்பினாலும் அவர் இந்த உறுதிமொழியை மீறியவராகிறார்.

அவர்கள் அல்லாஹ்வையன்றி தமது மத போதகர்களையும், பாதிரிகளையும், மர்யமின் மகன் மஸீஹையும் கடவுள்களாக்கினர். ஒரே கடவுளை வணங்குமாறு தான் அவர்கள் கட்டளையிடப்பட்டனர். அவனைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாருமில்லை. அவர்கள் இணை கற்பிப்பவற்றை விட்டும் அவன் தூயவன்.

திருக்குர்ஆன் 9:31

பெரிய மேதைகளும், மகான்களும், வேத விற்பன்னர்களும், இமாம்களும் அல்லாஹ்வின் அடிமைகளே! அல்லாஹ் இடும் கட்டளைகளுக்குக்

கட்டுப்படவும் அதைப் பிறருக்கு எடுத்துச் சொல்லவும் அவர்கள் கடமைப்பட்டிருக்கிறார்கள். சுயமாக இறைவனின் வேத ஆதாரமின்றி, இறைத்தூதரின் வழிகாட்டலின்றி எந்த ஒன்றையும் மார்க்கத்தில் கூட்டவோ, குறைக்கவோ எந்த அதிகாரமும் எவருக்கும் இல்லை என்ற கருத்தும் லாயிலாஹ இல்லல்லாஹ்வுக்குள் அடங்கியுள்ளது.

இதற்கு மாறாக நடப்பவர்கள், மறுமையில் சந்திக்கும் விளைவை வல்ல அல்லாஹ் தெளிவாக நமக்கு அறிவிக்கிறான்.

அவர்களின் முகங்கள் நரகில் புரட்டப்படும் நாளில் நாங்கள் அல்லாஹ்வுக்குக் கட்டுப்பட்டிருக்கக் கூடாதா? இத்தூதருக்குக் கட்டுப்பட்டிருக்கக் கூடாதா?" எனக் கூறுவார்கள். எங்கள் இறைவா! எங்கள் தலைவர்களுக்கும், எங்கள் பெரியார்களுக்கும் நாங்கள் கட்டுப்பட்டோம். அவர்கள் எங்களை வழி கெடுத்து விட்டனர்" எனவும் கூறுவார்கள். எங்கள் இறைவா! அவர்களுக்கு இருமடங்கு வேதனையை அளிப்பாயாக! அவர்களை மிகப் பெரிய அளவுக்குச் சபிப்பாயாக!" (எனவும் கூறுவார்கள்.)

திருக்குர்ஆன் 33:66,67,68

கண்ணை மூடிக் கொண்டு பெரியார்கள், இமாம்கள் கூறுவதை நம்பியவர்கள் மறுமையில் படும்பாட்டை இங்கே அல்லாஹ் எடுத்துக் காட்டுகிறான்.

வணக்க வழிபாடுகளாகட்டும்! அரசியலாகட்டும்! இல்லற நெறிகளாகட்டும்! இன்ன பிற துறைகளாகட்டும்! அனைத்துமே அல்லாஹ் காட்டித் தந்த வழியில் தான் நடக்க வேண்டும். இதை நிர்ணயிக்கின்ற உரிமையை அல்லாஹ் எவரது கையிலும் ஒப்படைக்கவில்லை என்பதை உணர வேண்டும்.

முஹம்மதுர் ரசூலுல்லாஹ் என்பதன் பொருள் என்ன? முஹம்மது நபி அல்லாஹ்வின் தூதர் என்பது இதன் நேரடிப் பொருளாகும்.

## இதனுள் அடங்கியுள்ள கருத்துக்கள் என்ன?

முஹம்மது நபி அல்லாஹ்வின் தூதர் என்பதால் அவர்கள் மார்க்கத்தின் பெயரால் எதைச் சொன்னாலும் அது அவர்களாக உருவாக்கிச் சொன்னது அல்ல. அல்லாஹ்விடமிருந்து பெற்றுச் சொன்னதாகும் என்பது அவர்கள் அல்லாஹ்வின் தூதர் என்பதன் கருத்தாகும்.

இந்தச் சமுதாயத்துக்கு அவர்கள் தான் அல்லாஹ்வின் தூதர் என்பதால் அவர்களைத் தவிர எவர் கூறுவதும் மார்க்கமாக ஆகாது. ஏனெனில் எவருக்கும் இறைச் செய்தி வராது என்பதும் இதன் கருத்தாகும்.

இமாம்கள் சொன்னார்கள் என்பதற்காக ஒரு விஷயத்தை மார்க்கம் என்று நாம் எடுத்துக் கொண்டால் இந்த உறுதிமொழியை நாம் மீறியவர்களாவோம். அல்லாஹ்வுக்கு மட்டுமே உரிய சட்டமியற்றும் அதிகாரம் அந்த இமாமுக்கும் உள்ளது என்ற கருத்து இதனால் ஏற்படும். அல்லாஹ்விடமிருந்து பெற்று அந்த இமாம்கள் கூறினார்கள் என்று கருதினால் அவர்களை அல்லாஹ்வின் தூதர்களாகக் கருதுகிறோம் என்ற கருத்து இதனால் ஏற்படும்.

எனவே இமாம்களையும், மத்ஹபுகளையும் ஒருவர் பின்பற்றினால் அவர் லாயிலாஹ இல்லல்லாஹ் என்பதையும், முஹம்மதுர் ரசூலுல்லாஹ் என்பதையும் மறுத்தவராவார்.

உண்மை இவ்வளவு தெளிவாக இருந்தும் மத்ஹபுகள்தான் மார்க்கம் என்று மக்கள் நம்புகிறார்கள். இவர்களுக்கு விழிப்புணர்வு ஏற்படுத்துவதற்காகவே இந்நூலை வெளியிடுகிறோம். மத்ஹபுச் சட்டங்கள் கேலிக்கூத்தாகவும், மடமையின் தொகுப்பாகவும், அர்த்தமற்ற உளறல்களாகவும், அருவருக்குத் தக்க ஆபாசமாகவும், சமுதாயத்துக்குப் பெரும் கேடு விளைவிப்பதாகவும், ஒழுக்கக்கேடுகளைப் பரப்பக் கூடியதாகவும் உள்ளன என்பதை மத்ஹபு சட்டங்களை அதன் அரபு மூலத்துடன் இந்நூலில் நாம் எடுத்துக் காட்டியுள்ளோம்.

இந்தச் சட்டங்களைப் பார்த்த பின்னர் அறிவு நாணயம் உள்ள எவராலும் மத்ஹபில் இருக்க முடியாது.

இந்தச் சட்டங்களைப் பார்த்து, சமுதாயம் விழிப்படைந்து அல்லாஹ்வின் பக்கமும், அவனது தூதர் முஹம்மது (ஸல்) அவர்களின் பக்கமும் வர வேண்டும் என்பதே இந்நூலின் நோக்கமாகும்.

இந்த நோக்கம் நிறைவேற எல்லாம் வல்ல இறைவன் துணை செய்வானாக!

## நான்கு இமாம்கள் ஓர் அறிமுகம்

இஸ்லாமிய வரலாற்றில் எண்ணற்ற அறிஞர்கள் தோன்றி மார்க்கப்பணிகள் செய்துள்ளனர். நபித்தோழர்களில் மார்க்க அறிவு பெற்றவர்கள் அவர்களில் சிறந்தவர்களாவர்.

அபூபக்ர் (ரலி), உமர் (ரலி), உஸ்மான் (ரலி), அலீ (ரலி) உள்ளிட்ட எண்ணற்ற நபித்தோழர்கள் மார்க்க அறிஞர்களாக இருந்தும் அவர்கள் பெயரால் மத்ஹபுகள் உருவாக்கப்படவில்லை. தாபியீன்களில் ஏராளமான மார்க்க அறிஞர்கள் இருந்துள்ளனர். அவர்கள் பெயராலும் மத்ஹபுகள் உருவாக்கப்படவில்லை. அவர்களுக்கு அடுத்த தலைமுறையில் ஏராளமான அறிஞர்கள் இருந்துள்ளனர். அவர்கள் அனைவரையும் ஒதுக்கி விட்டு அவர்களில் நான்கு இமாம்களின் பெயரால் மட்டும் மத்ஹபுகள் உருவாக்கப்பட்டுள்ளன.

இதற்குக் காரணம் அவர்கள் அன்றைக்குப் பெற்றிருந்த அரசியல் செல்வாக்குதானே தவிர நபித்தோழர்களையும், தாபியீன்களையும் விட இவர்கள் மாமேதைகள் என்பது காரணம் அல்ல.

இவர்களை மதிக்கக் கூடியவர்கள் எவ்வளவு காலம் ஆட்சிக்கட்டிலில் இருந்தார்களோ அதற்கேற்ற அளவு அந்த மத்ஹபுகள் மக்களிடம் பரவியது என்பது தான் உண்மையாகும்.

## நான்கு இமாம்களுக்கும், மத்ஹபுகளுக்கும் எந்தச் சம்மந்தமும் இல்லை

நான்கு இமாம்களின் பெயரால் மத்ஹபுகள் குறிப்பிடப்பட்டாலும் அந்த மத்ஹபுகளுக்கும், இமாம்களுக்கும் எந்தச் சம்மந்தமும் இல்லை. இமாம்கள் பெயரைப் பயன்படுத்தி பிற்காலத்தில் வந்தவர்கள் தமது இஷ்டத்துக்கு எழுதிவைத்தவை தான் மத்ஹபுகளாகும்.

ஹனஃபி மத்ஹபின் நிறுவன இமாம் என அறியப்படும் அபூ ஹனீஃபா அவர்கள் ஹிஜ்ரி 80 ல் பிறந்து 150ல் மரணித்தார்கள்.

ஷாஃபி மத்ஹபின் நிறுவன இமாம் என அறியப்படும் ஷாஃபி அவர்கள் ஹிஜ்ரி 150 ல் பிறந்து 204ல் மரணித்தார்கள்.

மாலிக் மத்ஹபின் நிறுவன இமாம் என அறியப்படும் மாலிக் அவர்கள் ஹிஜ்ரி 93ல் பிறந்து 179ல் மரணித்தார்கள்.

ஹம்பலி மத்ஹபின் நிறுவன இமாமாக அறியப்படும் அஹ்மது பின் ஹம்பல் அவர்கள் ஹிஜ்ரி 164ல் பிறந்து ஹிஜ்ரி 241ல் மரணித்தார்கள்.

நமது நாட்டில் ஹம்பலி, மாலிக் மத்ஹபுகள் இல்லை. அதிகமாக ஹனஃபி மத்ஹபும், குறைவாக ஷாஃபி மத்ஹபும் உள்ளன.

எனவே இவ்விரு மத்ஹபுகளை மட்டும் இங்கே ஆய்வுக்கு எடுத்துக் கொண்டிருக்கிறோம்.

ஹனஃபி மத்ஹப் என்பது அபூ ஹனீஃபா அவர்களின் பெயரால் பரப்பப்பட்டாலும் ஹனஃபி மத்ஹபுக்கும், அபூ ஹனீஃபா அவர்களுக்கும் சம்மந்தம் உள்ளதா என்று பார்ப்போம்.

அபூஹனீஃபாவின் மத்ஹப் என்று சொல்வதாக இருந்தால் அந்த மத்ஹபு சட்டங்கள் அனைத்தும் அபூஹனீபா அவர்களால் உருவாக்கப்பட்டிருக்க வேண்டும். அபூஹனீஃபா எழுதிய நூல்களை அந்த மத்ஹபின் சட்ட நூல்களாக வைத்திருக்க வேண்டும். அவரது நூல்களில் உள்ள சட்டத்தை எடுத்துக் காட்டி ஃபத்வா எனும் மார்க்கத் தீர்ப்பு வழங்க வேண்டும்.

ஆனால் ஹனஃபி மத்ஹபின் சட்ட நூல்களாக அபுஹனீஃபாவின் நூல்களை ஹனஃபி மத்ஹபினர் வைத்திருக்கவில்லை. அபூஹனீஃபா எழுதிய நூல்கள் எங்கே என்று நாம் மத்ஹப்வாதிகளைக் கேட்டால் அவர் எழுதிய நூல்களை எதிரிகள் அழித்து விட்டார்கள். அவரது நூல்கள் எதுவும் தற்போது உலகில் இல்லை என்கிறார்கள். தமிழ்நாடு ஜமாஅத்துல் உலமாவின் தலைவராக இருந்த கலீல் ரஹ்மான் ரியாஜி அவர்கள் ரஹ்மத் என்ற தனது மாத இதழில் இந்தப் பதிலை அளித்து இருந்தார்.

அபூஹனீஃபாவின் ஒரு நூல் கூட உலகில் இல்லை என்றால் ஹனஃபி மத்ஹப் என்பது யார் வகுத்த சட்டம்? இக்கேள்விக்கு நேர்மையான பதில் மத்ஹப்வாதிகளிடம் இல்லை.

அபூஹனீஃபா அவர்கள் ஹிஜ்ரி 150ல் மரணித்து விட்டார்கள் என்பதை முன்னர் நாம் குறிப்பிட்டுள்ளோம். ஹிஜ்ரி 150க்கு உட்பட்ட காலத்திலோ, அல்லது ஹிஜ்ரி இருநூறு வரை உள்ள காலத்திலோ எழுதப்பட்ட நூல்களை ஹனஃபி மத்ஹபினர் சட்ட நூல்களாக வைத்திருந்தால் அபூஹனீஃபாவுக்கு காலத்தில் நெருக்கமான நூல்கள் என்பதால் அதை ஏற்கலாம். ஆனால் ஹனஃபி மத்ஹபின் சட்ட நூல்களின் காலம் என்ன என்று பாருங்கள்!

ஹனஃபி மத்ஹபின் முக்கியமான சட்ட நூலாகிய துர்ருல் முக்தார் என்ற நூலின் ஆசிரியர் முஹம்மத் அலி பின் முஹம்மத் என்பார் ஹிஜ்ரி 1088ல் மரணித்தார். அபீஹனீஃபாவின் காலத்துக்கு ஒன்பது நூற்றாண்டுகளுக்குப் பின் எழுதப்பட்ட இந்த நூலுக்கும், அபூஹனீஃபாவுக்கும் என்ன சம்மந்தம் இருக்க முடியும்?

கன்ஸுத் தகாயிக் எனும் ஹனஃபி மத்ஹப் சட்டநூலை எழுதிய அபுல் பரகாத் அப்துல்லாஹ் பின் அஹ்மத் அன்னஸஃபீ என்பார் ஹிஜ்ரி 710ல் மரணித்தார். அபூஹனீஃபா மரணித்து ஐநூறு ஆண்டுகளுக்குப் பின்னால் எழுதப்பட்ட இந்த நூலுக்கும், அபூஹனீஃபாவுக்கும் என்ன சம்மந்தம்?

ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய ஹிதாயா எனும் நூலாசிரியர் அலீ பின் அபீபக்ர் என்பாரின் மரணம் ஹிஜ்ரி 593 ஆகும். அதன் விரிவுரையான இனாயா

என்ற நூலாசிரியர் முஹம்மத் பின் முஹம்மத் என்பாரின் மரணம் ஹிஜ்ரி 786 ஆகும். மராகில் ஃபலாஹ் எனும் நூலாசிரியர் ஹஸன் பின் அம்மார் என்பாரின் மரணம் ஹிஜ்ரி 1069 ஆகும். பதாயிவுஸ் ஸனாயிவு எனும் நூலாசிரியர் அபூபக்ர் பின் மஸ்வூத் என்பாரின் மரணம் ஹிஜ்ரி 587 ஆகும். பஹ்ருர் ராயிக் எனும் நூலாசிரியர் ஜைனுத்தீன் பின் இப்ராஹீம் என்பாரின் மரணம் ஹிஜ்ரி 970 ஆகும்.

அல்லுபாப் ஆசிரியர் அப்துல்கனி பின் தாலிப் 686ல் மரணம். முல்தகல் அப்ஹுர் ஆசிரியர் இப்ராஹீம் பின் முஹம்மத் 956ல் மரணம். லிசானுல் ஹுக்காம் ஆசிரியர் அஹ்மத் பின் முஹம்மத் 882ல் மரணம். துஹ்ஃபதுல் முலூக் ஆசிரியர் ஜைனுத்தீன் அபூ அப்துல்லாஹ் 666ல் மரணம். பிதாயதுல் முப்ததீ ஆசிரியர் அலீ பின் அபீபக்ர் 593ல் மரணம்.

அல்ஜவ்ஹரதுன் நய்யிரா ஆசிரியர் அபூபக்ர் பின் அலீ 800ல் மரணம். தப்யீனுல் ஹகாயிக் ஆசிரியர் உஸ்மான் பின் அலீ 743ல் மரணம். அன்னுகத் ஆசிரியர் அஹ்மத் பின் முஹம்மத் 586ல் மரணம். மஜ்மவுல் அன்ஹர் ஆசிரியர் அப்துர்ரஹ்மான் பின் முஹம்மத் 1078ல் மரணம். அல்முஹீத் ஆசிரியர் மஹ்மூத் பின் அஹ்மத் 616ல் மரணம். துரருல் ஹுக்காம் ஆசிரியர் முஹம்மத் பின் ஃபராமூஸ் 885ல் மரணம். ஹாஷியா தஹ்தாவி ஆசிரியர் அஹ்மத் பின் முஹம்மத் 1231ல் மரணம். நூருல் ஈலாஹ் ஆசிரியர் ஹஸன் பின் அம்மார் 1069ல் மரணம். அன்னஹ்ருல் ஃபாயிக் ஆசிரியர் உமர் பின் இப்ரஹீம் 1055ல் மரணம். உயூனுல் மஸாயில் ஆசிரியர் நஸ்ர் பின் முஹம்மத் 373ல் மரணம். குதூரி ஆசிரியர் அஹ்மத் பின் முஹம்மத் 428ல் மரணம்.

ஹனஃபி மத்ஹபின் சட்ட நூல்களை எழுதியவர்களுக்கும், அபூஹனீஃபா அவர்களுக்கும் நீண்டகால இடைவெளி உள்ளதைக் கவனியுங்கள்!

ஒரு மனிதர் மரணித்து ஐனூறு அல்லது ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின்னர் அவர் பெயரால் எழுதப்படும் நூலை அறிவுடைய மக்கள் அவருடன் சம்மந்தப்படுத்த மாட்டார்கள். அவர் பெயரால் இட்டுக்கட்டப்பட்டதாகவே கருதுவார்கள்.

ஹனஃபி மத்ஹபைச் சேர்ந்த ஷைபானி என்பார் எழுதிய மப்சூத் எனும் நூல் 189ல் எழுதப்பட்டதாகும். இவர் அபூஹனீஃபா வழியாக கிடைத்த சட்டங்களை எழுதியுள்ளார். இவர் அபூஹனீஃபாவின் மாணவர் என்பதால் இதை அபூஹனீஃபாவுடன் சம்மந்தப்படுத்துவதை நாம் ஓரளவுக்கு நம்பலாம்.

அபூஹனீஃபா சொன்னதாக இவர் எழுதிய சட்டங்கள் அனைத்தும் நாற்பது பக்கத்தில் அடங்கிவிடும். உதாரணமாக முதல் பாடமாகிய உளூ என்ற பாடத்தில் அபூ ஹனீஃபா சொன்னதாக ஒரே ஒரு சட்டத்தைத் தான் இவர் எழுதியுள்ளார்.

أَبُو سُلَيْمَان عَن مُحَمَّد عَن أبي حنيفَة قَالَ إِذا أَرَادَ الرجل الصَّلَاة فَلْيَتَوَضَّأ وَالْوُضُوء أَن يبْدَأ فَيغسل يَدَيْهِ ثَلَاثًا ثمَّ يمضمض فَاه ثَلَاثًا ثمَّ يستنشق ثَلَاثًا ثمَّ يغسل وَجهه ثَلَاثًا ثمَّ يغسل ذِرَاعَيْهِ ثَلَاثًا ثَلَاثًا ثمَّ يمسح بِرَأْسِهِ وَأُذُنَيْهِ مرّة وَاحِدَة ثمَّ يغسل رجلَيْهِ ثَلَاثًا ثَلَاثًا قلت أَرَأَيْت إِن تَوَضَّأ مثنى مثنى قَالَ يجْزِيه قلت فان تَوَضَّأ وَاحِدَة سابغة قَالَ يجْزِيه الأصل المعروف بالمبسوط للشيباني

உளூச் செய்யும் போது இரு கைகளையும் மூன்று தடவை கழுவ வேண்டும். பின்னர் வாயை மூன்று முறை கொப்புளிக்க வேண்டும். பின்னர் மூன்று முறை மூக்கைச் சிந்த வேண்டும். பின்னர் மூன்று முறை முகத்தைக் கழுவ வேண்டும். பின்னர் கைகளை மூன்று தடவை கழுவ வேண்டும். பின்னர் தலைக்கும், காதுகளுக்கும் சேர்த்து ஒருதடவை மஸஹ் செய்ய வேண்டும். பின்னர் கால்களை மூன்று தடவைகள் கழுவ வேண்டும் என்று அபூஹனீஃபா சொன்னார்கள். இரண்டு தடவை கழுவினால் போதுமா என்று கேட்டேன். அதற்கவர்கள் அதுவும் போதுமானது தான் என்றார்கள். ஒரு தடவை நிறைவாக செய்தால் போதுமா என்று நான் கேட்டேன். அதற்கவர்கள் அதுவும் போதுமானதே என்றார்கள்.

உளூ பற்றி இந்த ஒரு சட்டத்தை மட்டும் தான் அபூஹனீஃபா சொன்னதாக இவர் எழுதியுள்ளார். அடுத்து தொழுகையில் நுழைதல் என்ற பாடத்துக்குப் போய்விடுகிறார்.

ஆனால் மேலே நாம் எடுத்துக் காட்டிய ஹனஃபி மத்ஹபின் சட்ட நூல்களில் உளூ பற்றிய சட்டங்களை வால்யூம் கணக்கில் எழுதி வைத்துள்ளனர். இவை யாவும் அபூஹனீஃபா சொல்லாமல் இவர்களாக இட்டுக்கட்டி எழுதியவை என்று இதன் மூலம் அறியலாம்.

ஹனஃபி மத்ஹபின் சட்டங்கள் என்று இந்த நூல்களில் எழுதப்பட்டவைகளில் ஓரிரு சதவிகிதம் அளவுக்குத் தான் அபூஹனீஃபா சொன்னதாக மேற்கோள் காட்டி எழுதியுள்ளனர். மற்ற சட்டங்களை அபூஹனீஃபா கூறியதாக அந்த நூல்களில் கூறப்படவில்லை. அந்த அறிஞர் கூறினார்; இந்த அறிஞர் கூறினார் என்றுதான் குறிப்பிட்டுள்ளனர்.

அபூஹனீஃபாவுக்கும், ஹனஃபி மத்ஹப் நூல்களுக்கும் எந்தச் சம்மந்தமும் இல்லை என்பதை இது மேலும் உறுதிப்படுத்துகிறது.

இது போல் ஷாஃபி இமாம் பெயருடன் சேர்த்து ஷாஃபி மத்ஹப் என்று சொல்வதாக இருந்தால் ஷாஃபி இமாம் எழுதிய நூல்களை சட்டநூலாக வைத்திருந்தால் தான் அதை ஷாஃபி இமாம் பெயருடன் சேர்ப்பதில் நியாயம் இருக்கும்.

ஆனால் ஷாஃபி இமாம் அவர்கள் சில நூல்களை எழுதி இருந்தும் அவற்றைத் தூக்கி பரணில் போட்டு விட்டு பிற்காலத்தில் இட்டுக்கட்டி எழுதிய நூல்களை அந்த இமாமின் சட்டம் எனக் கூறி மக்களை ஷாஃபி மத்ஹபினரும் ஏமாற்றி வருகிறார்கள்.

ஷாஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய இஆனா எனும் நூலை எழுதிய உஸ்மான் பின் முஹம்மத் என்பார் ஹிஜ்ரி 1310ல் மரணித்தார். ஹாஷியா புஜைரமி எனும் நூலை எழுதிய சுலைமான் பின் முஹம்மத் என்பார் ஹிஜ்ரி 1221ல் மரணித்தார். மஹல்லி எனும் நூலை எழுதிய அஹ்மத் என்பார் ஹிஜ்ரி 1069ல் மரணித்தார். முக்னி எனும் நூலை எழுதிய முஹம்மத் பின் அஹ்மத் என்பார் ஹிஜ்ரி 977ல் மரணித்தார். மின்ஹாஜ் எனும் நூலை எழுதிய இப்னுஹஜர் ஹைத்தமி என்பார் ஹிஜ்ரி 974ல் மரணித்தார். துஹ்ஃபா எனும் நூலை எழுதிய இப்னு ஹஜர் ஹைத்தமி என்பார் ஹிஜ்ரி 974ல் மரணித்தார். பத்ஹுல் முயீன் எனும் நூலை எழுதிய ஜைனுத்தீன் மலபாரி என்பார் ஹிஜ்ரி 987ல் மரணித்தார். ரவ்லா எனும் நூலை எழுதிய நவவி அவர்கள் ஹிஜ்ரி 676ல் மரணித்தார். மஜ்மூவு எனும் நூலை எழுதிய நவவி அவர்கள் ஹிஜ்ரி 676ல் மரணித்தார். வசீத் எனும் நூலை எழுதிய முஹம்மத் பின் முஹம்மத் கஸ்ஸாலி என்பார் ஹிஜ்ரி 505ல் மரணித்தார்.

நிஹாயா எனும் நூலை எழுதிய முஹம்மத் பின் அபில் அப்பாஸ் என்பார் ஹிஜ்ரி 478ல் மரணித்தார். முஹத்தப் எனும் நூலை எழுதிய இப்ராஹீம் பின் அலி என்பார் ஹிஜ்ரி 476ல் மரணித்தார்.

ஷாஃபி இமாம் மரணித்து முன்னூறு முதல் ஆயிரம் ஆண்டுகள் கழித்து வந்தவர்கள் எழுதிய நூல்களைத் தான் ஷாஃபி மத்ஹபின் சட்ட நூல்களாக வைத்துள்ளனர். இவை எப்படி ஷாஃபி இமாம் சம்மந்தப்பட்டதாக ஆகும்?

மேலும் மேற்கண்ட ஷாஃபி மத்ஹபின் சட்ட நூல்களில் எழுதப்பட்ட ஒவ்வொரு சட்டத்தையும் ஷாஃபி இமாம் கூறினார் என்று இந்நூல்களில் குறிப்பிடப்படவில்லை. இரண்டு, மூன்று சதவிகிதச் சட்டங்கள் தான் ஷாஃபி இமாம் சொன்னதாக எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. மற்றவை அவர் சொன்னார்; இவர் சொன்னார் என்றுதான் மேற்கண்ட நூல்களில் குறிப்பிடப்பட்டுள்ளது.

ஷாஃபி இமாமுக்கும், ஷாஃபி மத்ஹப் சட்ட நூல்களுக்கும் எந்தச் சம்மந்தமும் இல்லை என்பதை இது மேலும் உறுதிப்படுத்துகிறது.

## மத்ஹபுகளை நான்கு இமாம்கள் உருவாக்கவில்லை

எங்கள் பெயரில் மத்ஹபுகளை உருவாக்காதீர்கள். நாங்கள் ஆய்வு செய்து சட்டங்களைக் கூறுகிறோம். அவை திருக்குர்ஆனுக்கும், நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் வழிகாட்டுதலுக்கும் ஏற்ப இருந்தால் அதை ஏற்றுக் கொள்ளுங்கள். அவ்வாறு இல்லாவிட்டால் எங்கள் கூற்றைத் தூக்கி எறிந்து விட்டு திருக்குர்ஆனையும், நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் வழிகாட்டுதலையும் பின்பற்றுங்கள் என்பது தான் நான்கு இமாம்களும் கூறிய அறிவுரையாகும்.

அபூஹனீஃபா அவர்கள் கூறியதைக் கேளுங்கள்!

صَحَّ عَنْ الْإِمَامِ أَنَّهُ قَالَ : إذَا صَحَّ الْحَدِيثُ فَهُوَ مَذْهَبِي - رد المحتار

ஹதீஸ் ஆதாரப்பூர்வமாக இருக்கும் போது அதுதான் எனது மத்ஹப் என்று அபூஹனீஃபா கூறியுள்ளது ஆதாரப்பூர்வமான செய்தியாகும்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

وذكر في الخزانة عن الروضة الزندويسية سئل أبو حنيفة إذا قلت قولا وكتاب الله يخالفه قال اتركوا قولي لكتاب الله فقيل إذا كان خبر الرسول صلى الله عليه وسلم يخالفه قال اتركوا قولي لخبر رسول الله صلى الله عليه وسلم - إيقاظ الهمم

நீங்கள் கூறிய கருத்து அல்லாஹ்வின் வேதத்திற்கு மாற்றமாக இருந்தால் என்ன செய்ய வேண்டும்? என அபூ ஹனீஃபாவிடம் கேட்கப்பட்டது. அதற்கவர்கள் அல்லாஹ்வின் வேதத்திற்காக என்னுடைய கருத்தை விட்டுவிடுங்கள் எனக் கூறினார்கள். அல்லாஹ்வின் தூதருடைய கருத்திற்கு மாற்றமாக உங்கள் கருத்து இருந்தால் என்ன? என்று கேட்கப்பட்டது. அதற்கவர்கள் அல்லாஹ்வின் தூதருடைய செய்திக்காக என்னுடைய கருத்தை விட்டுவிடுங்கள் எனக் கூறினார்கள்

நூல் : ஈகாளுல் ஹிமம்

وذكر في المثانة عن الروضة الزندويسية عن كل من أبي حنيفة ومحمد أنه قال إذا قلت قولا يخالف كتاب الله وخبر الرسول صلى الله عليه وسلم فاتركوا قولي - يقاظ الهمم -

அல்லாஹ்வின் வேதத்திற்கோ, இறைத்தூதரின் செய்திக்கோ மாற்றமாக ஏதேனும் ஒரு கருத்தை நான் கூறியிருந்தால் என்னுடைய கருத்தை விட்டுவிடுங்கள் என்று அபூஹனீஃபாவும் அவரது மாணவர் முஹம்மதும் கூறியுள்ளனர்.

நூல் : ஈகாளுல் ஹிமம்

فإن أبا حنيفة وأبا يوسف رحمه الله قالا لا يحل لأحد أن يأخذ بقولنا مالم يعلم من أين أخذناه - إيقاظ الهمم

நாங்கள் எந்த ஆதாரத்தின் அடிப்படையில் எடுத்தோம் என்பதை அறியாமல் எங்கள் கருத்தை ஏற்பது யாருக்கும் ஹலால் இல்லை என்று அபூஹனீஃபாவும், அவரது மாணவர் அபூ யூஸுஃபும் கூறியுள்ளனர்.

நூல் :ஈகாளுல் ஹிமம்

மாலிக் இமாம் கூறுவதைக் கேளுங்கள்!

وقال الإمام مالك رحمه الله إنما أنا بشر أخطيء وأصيب فانظروا في رأيي، فكل ما وافق الكتاب والسنة فخذوه، وكل ما لم يوافق الكتاب والسنة فاتركوه - مواهب الجليل في شرح مختصر الشيخ خليل

நான் தவறாகவும், சரியாகவும் கூறக்கூடிய ஒரு மனிதன் தான். எனவே என்னுடைய கருத்தை ஆய்வுசெய்து பாருங்கள்! குர்ஆனுக்கும் நபிவழிக்கும், ஏற்ப அது அமைந்திருந்தால் அதை எடுத்துக் கொள்ளுங்கள். குர்ஆனுக்கும் நபிவழிக்கும் ஏற்ப அது அமையாவிட்டால் அதை விட்டுவிடுங்கள் என்று மாலிக் இமாம் கூறினார்கள்.

நூல் : மவாஹிபுல் ஜலீல்

قال الإمام مالك والإمام أحمد: ليس أحد بعد النبي صلى الله عليه وسلم إلا ويؤخذ من قوله ويترك إلا النبي صلى الله عليه وسلم - الحجج السلفية في الرد على آراء ابن فرحان المالكي البدعية

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைத் தவிர எவருடைய கூற்றாக இருந்தாலும் அவற்றில் எடுத்துக் கொள்ள வேண்டியவையும், விட்டுவிட வேண்டியவையும் உள்ளன என்று மாலிக் இமாம் கூறினார்கள்.

நூல் : அல் ஹுஜஜ் ஸலஃபிய்யா

அஹ்மத் இமாம் கூறுவதைக் கேளுங்கள்!

سمعت أحمد بن حنبل يقول رأي الأوزاعي ورأي مالك ورأي أبي حنيفة كله رأي وهو عندي سواء وإنما الحجة في الآثار- جامع بيان العلم وفضله

அவ்ஸாயீயின் கருத்து, மாலிக்கின் கருத்து, அபூ ஹனீஃபாவின் கருத்து எல்லாமே அவர்களின் கருத்துதான். என்னிடத்தில் அனைத்தும் சமம்தான். ஆதாரம் என்பது ஹதீஸ்களில்தான் இருக்கிறது என்று அஹ்மத் இமாம் கூறினார்கள்.

நூல் : ஜாமிவு பயானில் இல்ம்

لا تقلدني ولا تقلد مالكا ولا الثوري ولا الأوزاعي وخذ من حيث أخذوا -إعلام الموقعين عن رب العالمين

என்னைப் பின்பற்றாதே. மாலிக்கையும் பின்பற்றாதே. ஸவ்ரியையும் பின்பற்றாதே. அவ்ஸாயியையும் பின்பற்றாதே. அவர்கள் எங்கிருந்து எடுத்தார்களோ அங்கிருந்தே நீயும் எடு என்று இமாம் அஹ்மத் கூறினார்கள்.

நூல் இஃலாமுல் முவக்கிஈன்

ஷாஃபி இமாம் கூறுவதைக் கேளுங்கள்!

وقد قال الشافعي إذا صح الحديث فهو مذهبي -المجموع

ஹதீஸ் ஆதாரப்பூர்வமாக இருக்கும் போது அதுதான் எனது மத்ஹப் என்று ஷாஃபி அவர்கள் கூறியுள்ளார்கள்.

நூல் : அல்மஜ்மூவு

وفي رواية روى حديثا فقال له قائل أتأخذ به فقال له أتراني مشركا أو ترى في وسطي زنارا أو تراني خارجا من كنيسة نعم آخذ به آخذ به آخذ به وذلك الفرض على كل مسلم -مختصر المؤمل

ஷாஃபி அவர்கள் ஒரு ஹதீஸை அறிவித்தார்கள். அப்போது ஒருவர் ஷாஃபி அவர்களிடம் நீங்கள் இதனை ஆதாரமாக எடுப்பீர்களா? என்று கேட்டார். அதற்கு இமாம் அவர்கள் "நீ என்னை இணைவைப்பாளன் என்று நினைக்கிறாயா? அல்லது என்னுடைய இடுப்பில் (நெருப்பு வணங்கிகளுக்குரிய) இடுப்பு வாரைப் பார்க்கிறாயா? அல்லது தேவாலாயத்தில் வழிபாடு செய்துவிட்டு வெளியே வந்தவன் என்று நினைக்கிறாயா? என்று கேட்டு விட்டு ஆம். நான் அதைப் பற்றிப் பிடிப்பேன். அதைப் பற்றிப் பிடிப்பேன். அதைப் பற்றிப் பிடிப்பேன். இது அனைத்து முஸ்லிம்களின் மீதும் கட்டாயக் கடமையாகும் என்று கூறினார்கள்.

நூல் : முக்தஸர் அல் முஅம்மல்

قال وسمعت الشافعي يقول وروى حديثا قال له رجل تأخذ بهذا يا أبا عبد الله فقال ومتى رويت عن رسول الله صلى الله عليه وسلم حديثا صحيحا فلم آخذ به فأشهدكم أن عقلي قد ذهب وأشار بيده إلى رأسه -مختصر المؤمل

ஷாஃபி அவர்கள் ஒரு ஹதீஸை அறிவித்தார்கள். அப்போது ஒருவர் ஷாஃபி அவர்களிடம் நீங்கள் இதனை ஆதாரமாக எடுப்பீர்களா? என்று கேட்டார். அதற்கு இமாம் ஷாஃபி அவர்கள் "எப்போது நபி (ஸல்) அவர்களிடமிருந்து ஒரு ஹதீஸ் அறிவிக்கப்பட்டு நான் அதை பற்றிப் பிடிக்கவில்லையோ (அப்போது) என்னுடைய அறிவு மழுங்கிவிட்டது என்று நான் உங்களிடம் சான்று பகர்கிறேன்" என்று கூறி தன்னுடைய கரத்தால் தம்முடைய தலையை நோக்கி சுட்டிக் காட்டினார்கள்.

நூல் : முக்தஸர் அல் முஅம்மல்

إذا وجدتم عن رسول الله صلى الله عليه وسلم سنة خلاف قولي فخذوا السنة ودعوا قولي فإني أقول بها - مختصر المؤمل

"என்னுடைய சொல்லுக்கு மாற்றமாக நீங்கள் நபியின் வழிகாட்டுதலைக் கண்டால் நபியவர்களின் வழிகாட்டுதலை எடுத்துக் கொள்ளுங்கள். என்னுடைய சொல்லை விட்டு விடுங்கள். நிச்சயமாக நான் நபியுடைய வழிகாட்டுதலைக் கொண்டு கூறுபவன்தான்.

நூல் : முக்தஸர் அல் முஅம்மல்

كل مسألة تكلمت فيها بخلاف السنة فأنا راجع عنها في حياتي وبعد مماتي -مختصر المؤمل

நபிவழிக்கு மாற்றமாக நான் கூறிய ஒவ்வொரு சட்டத்திலிருந்தும் நான் வாழும் போதும், என் மரணத்திற்குப் பின்பும் நான் விலகிக் கொண்டேன் என்று ஷாஃபி இமாம் கூறினார்கள்.

நூல் : முக்தஸர் அல் முஅம்மல்

قال الشافعي كل ما قلت وكان قول رسول الله صلى الله عليه وسلم خلاف قولي مما يصح فحديث النبي صلى الله عليه وسلم أولى فلا تقلدوني -مختصر المؤمل

நான் கூறியதற்கு மாற்றமாக ஆதாரப்பூர்வமான ஹதீஸ் இருந்தால் நபியவர்களுடைய ஹதீஸ்தான் ஏற்கத் தக்கதாகும். என்னைப் பின்பற்றாதீர்கள் என்று ஷாஃபி இமாம் கூறினார்கள்.

நூல் : முக்தஸர் அல் முஅம்மல்

قال البويطي سمعت الشافعي يقول لقد ألفت هذه الكتب ولم آل جهدا ولا بد أن يوجد فيها الخطأ لأن الله تعالى يقول وَلَوْ كَانَ مِنْ عِنْدِ غَيْرِ اللَّهِ لَوَجَدُوا فِيهِ اخْتِلَافًا كَثِيرًا فما وجدتم في كتبي هذه مما يخالف الكتاب والسنة فقد رجعت عنه - مختصر المؤمل

என் உழைப்பில் குறை வைக்காமல் நான் இந்த நூல்களை இயற்றியுள்ளேன். ஆனால் இதில் கட்டாயம் தவறுகள் இருந்தாக வேண்டும். ஏனென்றால் திருக்குர்ஆன் அல்லாஹ் அல்லாதவரிடமிருந்து வந்திருந்தால் அதில் அதிகமான முரண்பாடுகளைக் கண்டிருப்பார்கள் என்று அல்லாஹ் கூறுகிறான். எனவே என்னுடைய இந்த நூல்களில் திருக்குஆனுக்கும், நபிவழிக்கும் மாற்றமானதை நீங்கள் கண்டால் நிச்சயமாக நான் அதை நான் திரும்பப் பெற்றுவிட்டேன் என்று ஷாஃபி இமாம் கூறினார்கள்.

நூல் : முக்தஸர் அல் முஅம்மல்

وقال الشافعي: أجمع الناس على أن من استبانت له سنة عن رسول الله صلى الله عليه وسلم لم يكن له أن يدعها لقول أحد من الناس - إعلام الموقعين عن رب العالمين

நபியவர்களின் வழிமுறை ஒருவருக்குத் தெரிந்து விட்டால் எந்த மனிதரின் சொல்லுக்காகவும் அதை விடக் கூடாது என்று ஷாஃபி இமாம் கூறினார்கள்.

நூல் : இஃலாமுல் முவக்கிஈன்

## வஹீ மட்டுமே இஸ்லாத்தின் ஆதாரம்!

இஸ்லாம் மார்க்கம் அல்லாஹ்விடமிருந்து இறைத்தூதர்கள் வழியாக மனித குலத்துக்கு வழங்கப்பட்ட மார்க்கமாகும். இந்த மார்க்கத்திற்குச் சொந்தக்காரன் அல்லாஹ் மட்டுமே.

அறிந்து கொள்க! இந்தத் தூய மார்க்கம் அல்லாஹ்வுக்கே உரியது.

திருக்குர்ஆன் 39:3

இஸ்லாத்தின் பெயரால் எதைச் சொல்வதாக இருந்தாலும், செய்வதாக இருந்தாலும் அதை அல்லாஹ் கூறியிருக்க வேண்டும். அல்லது அல்லாஹ்விடமிருந்து வஹீயைப் பெற்ற நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியிருக்க வேண்டும். இம்மார்க்கத்தின் அதிபதி அல்லாஹ் தான் என்பதன் அர்த்தம் இதுதான்.

இந்த அடிப்படையை விளங்கிக் கொண்டால் அல்லாஹ்விடமிருந்து வஹீயைப் பெறாத நான்கு இமாம்கள் உள்ளிட்ட எந்த இமாமின் கருத்தும் மார்க்க ஆதாரமாக ஆகாது என்பது தெளிவாகிவிடும்.

இம்மார்க்கம் தனக்கே உரியது என்ற அதிகாரத்தை அல்லாஹ் எந்த அடியாருக்கும் வழங்கவே இல்லை. தனது தூதர்களுக்கும் கூட வழங்கவில்லை.

முதல் மனிதராகிய ஆதம் (அலை) அவர்களுக்கு அல்லாஹ் எல்லாவிதமான ஞானங்களையும் கற்றுக் கொடுத்தான். ஆதம் (அலை) அவர்களுக்கு அனைத்துப் பொருட்களின் பெயர்களையும் கற்றுக் கொடுத்ததாக அல்லாஹ் திருக்குர்ஆனில் கூறுகிறான். அப்படி இருந்தும் அவர்களைப் பூமிக்கு அனுப்பும்போது தன்னுடைய வஹீ செய்தியை மட்டுமே பின்பற்ற வேண்டும் என கட்டளை பிறப்பித்தே அனுப்பினான்.

இங்கிருந்து அனைவரும் இறங்கி விடுங்கள்! என்னிடமிருந்து உங்களுக்கு நேர்வழி வரும்போது எனது நேர்வழியைப் பின்பற்றுவோருக்கு எந்த அச்சமும் இல்லை. அவர்கள் கவலைப்படவும் மாட்டார்கள்" என்று கூறினோம்.

திருக்குர்ஆன் 2 : 38

இருவரும் ஒட்டுமொத்தமாக இங்கிருந்து இறங்குங்கள்! உங்களில் சிலர் மற்றும் சிலருக்குப் பகைவர்களாவீர்கள். என்னிடமிருந்து உங்களுக்கு நேர்வழி வருமானால் எனது நேர்வழியைப் பின்பற்றுபவர் வழிதவற மாட்டார். துர்பாக்கியசாலியாகவும் மாட்டார்.

திருக்குர்ஆன் 2 : 123

என்னிடமிருந்து நேர்வழி வரும்; அதைத் தான் பின்பற்ற வேண்டும் என்பதுதான் இம்மண்ணுலகுக்கு அல்லாஹ் வழங்கிய முதல் கட்டளையாகும்.

மிகப்பெரிய மேதையான ஆதம் (அலை) அவர்கள் கூட தமது அறிவுத்திறனை மார்க்க ஆதாரமாக்கக் கூடாது என்றால் மத்ஹபு இமாம்கள் ஆதம் (அலை) அவர்களை விடப் பெரியவர்களா? என்று சிந்தித்தால் மத்ஹபு என்பது வழிகேடு என்பது தெளிவாகும்.

இதுபோன்ற கட்டளையைத் தான் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கும் அல்லாஹ் பிறப்பித்தான்.

உண்மையை உள்ளடக்கிய வேதத்தை உமக்கு அருளினோம். அது தனக்கு முன் சென்ற வேதத்தை உண்மைப்படுத்துவதாகவும், அதைப் பாதுகாப்பதாகவும் இருக்கிறது. எனவே அல்லாஹ் அருளியதன் அடிப்படையில் அவர்களிடையே தீர்ப்பளிப்பீராக! உம்மிடம் வந்துள்ள உண்மையை அலட்சியம் செய்து அவர்களின் மனோஇச்சைகளைப் பின்பற்றாதீர்! உங்களில் ஒவ்வொருவருக்கும் வாழ்க்கைத் திட்டத்தையும், வழியையும் ஏற் படுத்தியுள்ளோம்.

திருக்குர்ஆன் 5 : 48

(முஹம்மதே!) உமது இறைவனிடமிருந்து உமக்கு அறிவிக்கப்படுவதை நீர் பின்பற்றுவீராக! அவனைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாருமில்லை. இணை கற்பிப்போரைப் புறக்கணிப்பீராக!

திருக்குர்ஆன் 6 : 106

(முஹம்மதே!) உமது இறைவனின் வேதத்திலிருந்து உமக்கு அறிவிக்கப்படுவதைக் கூறுவீராக! அவனது வார்த்தைகளை மாற்றுபவன் இல்லை. அவனன்றி எந்தப் புகலிடத்தையும் நீர் காண மாட்டீர்!

திருக்குர்ஆன் 18:27

இது அகிலத்தாரின் இறைவனிடமிருந்து அருளப்பட்டது. சில சொற்களை இவர் (முஹம்மது) நம்மீது இட்டுக் கட்டியிருந்தால் இவரை வலது கையால் தண்டித்திருப்போம். பின்னர் அவரது நாடி நரம்பைத் துண்டித்திருப்போம். உங்களில் எவரும் அவனைத் தடுப்பவர் அல்லர். இது (இறைவனை) அஞ்சியோருக்கு அறிவுரை.

திருக்குர்ஆன் 70 : 43-48

அவர்களுக்கு நமது தெளிவான வசனங்கள் கூறப்பட்டால் "இது அல்லாத வேறு குர்ஆனைக் கொண்டு வருவீராக! அல்லது இதை மாற்றியமைப்பீராக!" என நமது சந்திப்பை நம்பாதோர் கூறுகின்றனர். நானாக இதை மாற்றியமைத்திட எனக்கு அதிகாரம் இல்லை. எனக்கு அறிவிக்கப்படுவதைத் தவிர வேறு எதையும் நான் பின்பற்றுவதில்லை. என் இறைவனுக்கு நான் மாறுசெய்து விட்டால் மகத்தான நாளின் வேதனையை அஞ்சுகிறேன்" என (முஹம்மதே!) கூறுவீராக!

திருக்குர்ஆன் 10 : 15

உமக்கு அறிவிக்கப்படுவதைப் பற்றிக் கொள்வீராக! நீர் நேரான பாதையில் இருக்கிறீர். இது உமக்கும், உமது சமுதாயத்துக்கும் அறிவுரை. பின்னர் விசாரிக்கப்படுவீர்கள்.

திருக்குர்ஆன் 43 : 43, 44

அல்லாஹ் அருளியதன் அடிப்படையில் அவர்களிடையே தீர்ப்பளிப்பீராக! அவர்களின் மனோ இச்சைகளைப் பின்பற்றாதீர்! அல்லாஹ் உமக்கு அருளியதில் சிலவற்றை விட்டும் அவர்கள் உம்மைக் குழப்புவார்கள் என்பதில் கவனமாக இருப்பீராக! அவர்கள் புறக்கணித்தால் அவர்களின் சில பாவங்கள் காரணமாக

அவர்களைத் தண்டிப்பதையே அல்லாஹ் நாடுகிறான் என்பதை அறிந்து கொள்வீராக! மனிதர்களில் அதிகமானோர் குற்றம் புரிவோராகவுள்ளனர்.

திருக்குர்ஆன் 5: 49

அல்லாஹ்விடமிருந்து கிடைத்த செய்திகளைத் தான் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தாமும் கடைப்பிடித்து மற்றவர்களுக்கும் கூறவேண்டும். இம்மார்க்கத்தில் அவர்கள் தமது சுய விருப்பத்தின்படி எதையும் கூறக் கூடாது என்றும், அது கடுமையான குற்றம் என்றும் இவ்வசனங்களில் அல்லாஹ் எச்சரிக்கிறான்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கே வழங்கப்படாத அதிகாரம் மத்ஹபு இமாம்களுக்கு வழங்கப்பட்டிருக்குமா என்று சிந்திப்பவர்கள் ஒருபோதும் மத்ஹபை ஏற்கமாட்டார்கள்.

நபியவர்கள் தமது சுயவிருப்பப்படி தேன் குடிப்பதை தம்மீது ஹராமாக ஆக்கினார்கள். அல்லாஹ் ஹலாலாக ஆக்கியதை தம்மளவில் அவர்கள் ஹராமாக ஆக்கியதை அல்லாஹ் எப்படி கண்டிக்கிறான் என்று பாருங்கள்!

நபியே! உமக்கு அல்லாஹ் அனுமதித்ததை உமது மனைவியரின் திருப்தியை நாடி ஏன் ஹராமாக்கிக் கொள்கிறீர்? அல்லாஹ் மன்னிப்பவன்; நிகரற்ற அன்புடையோன்.

திருக்குர்ஆன் 66 : 1

சில நேரங்களில் அல்லாஹ்வின் வஹீயை எதிர்பார்க்காமல் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் முடிவு செய்தபோது அல்லாஹ் கண்டித்த நிகழ்வுகள் பல உள்ளன.

ஆதம் (அலை) அவர்களுக்கும், நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கும் பிறப்பித்த அதே கட்டளையைத் தான் ஒட்டுமொத்த முஸ்லிம்களுக்கும் அல்லாஹ் பிறப்பித்துள்ளான்.

உங்கள் இறைவனிடமிருந்து உங்களுக்கு அருளப்பட்டதையே பின்பற்றுங்கள்! அவனை விடுத்து (மற்றவர்களை) பொறுப்பாளர்களாக்கிப் பின்பற்றாதீர்கள்! குறைவாகவே படிப்பினை பெறுகிறீர்கள்.

திருக்குர்ஆன் 7 : 3

மனிதர்களுக்கு அஞ்சாதீர்கள்! எனக்கே அஞ்சுங்கள்! எனது வசனங்களை அற்ப விலைக்கு விற்று விடாதீர்கள்! அல்லாஹ் அருளியதன் அடிப்படையில் தீர்ப்பளிக்காதோர் (ஏக இறைவனை) மறுப்பவர்கள்.

திருக்குர்ஆன் 5 : 44

அல்லாஹ் அருளியதன் அடிப்படையில் தீர்ப்பளிக்காதோர் அநீதி இழைத்தவர்கள்.

திருக்குர்ஆன் 5 : 45

அல்லாஹ் அருளியதன் அடிப்படையில் தீர்ப்பளிக்காதோரே குற்றவாளிகள்.

திருக்குர்ஆன் 5 : 47

இவ்வசனங்கள் யாவும் மத்ஹபுகள் வழிகேடு என்பதற்கு தெளிவான சான்றுகளாக உள்ளன.

அல்லாஹ் கூறுவதையும், நபிகள் நாயகத்தின் வழிகாட்டுதலையும் மட்டுமே பின்பற்ற வேண்டும் என்று அல்லாஹ் பல வசனங்களில் கட்டளையிடுகிறான். அவற்றில் சில வசனங்களைப் பாருங்கள்!

மக்களுக்கு அருளப்பட்டதை நீர் அவர்களுக்கு விளக்க வேண்டும் என்பதற்காகவும், அவர்கள் சிந்திக்க வேண்டும் என்பதற்காகவும் இந்தப் போதனையை உமக்கு அருளினோம்.

திருக்குர்ஆன் 16:44

அல்லாஹ்வின் விருப்பப்படி மக்கள் கட்டுப்பட வேண்டுமென்பதற்காகவே தவிர எந்தத் தூதரையும் அனுப்புவதில்லை.

திருக்குர்ஆன் 4 : 64

இத்தூதருக்கு கட்டுப்பட்டவர் அல்லாஹ்வுக்குக் கட்டுப்பட்டார். யாரேனும் புறக்கணித்தால் உம்மை அவர்களின் காப்பாளராக நாம் அனுப்பவில்லை.

திருக்குர்ஆன் 4 : 808

"நீங்கள் அல்லாஹ்வை விரும்பினால் என்னைப் பின்பற்றுங்கள்! அல்லாஹ் உங்களை விரும்புவான். உங்கள் பாவங்களை மன்னிப்பான். அல்லாஹ் மன்னிப்பவன்; நிகரற்ற அன்புடையோன்" என்று கூறுவீராக!

திருக்குர்ஆன் 3 : 311

அல்லாஹ்வுக்கும், அவனது தூதருக்கும் கட்டுப்படுபவர் மகத்தான வெற்றி பெற்று விட்டார்.

திருக்குர்ஆன் 33 : 71

அல்லாஹ்வுக்கும், அவனது தூதருக்கும் கட்டுப்பட்டு, அல்லாஹ்வை அஞ்சி பயப்படுவோரே வெற்றி பெற்றோர்.

திருக்குர்ஆன் 24 : 52

அல்லாஹ்வுக்கும், இத்தூதருக்கும் கட்டுப்படுங்கள்! இதனால் அருள் செய்யப்படுவீர்கள்.

திருக்குர்ஆன் 3 : 132

அல்லாஹ்வுக்கும், இத்தூதருக்கும் கட்டுப்பட்டு நடப்போர், அல்லாஹ்வின் அருள் பெற்ற நபிமார்கள், உண்மையாளர்கள், உயிர்த் தியாகிகள், மற்றும் நல்லோருடன் இருப்பார்கள். அவர்களே மிகச் சிறந்த நண்பர்கள்.

திருக்குர்ஆன் 4 : 69

அல்லாஹ்வுக்கும், அவனது தூதருக்கும் யார் கட்டுப்படுகிறாரோ, அவரை சொர்க்கச் சோலைகளில் அவன் நுழையச் செய்வான். அவற்றின் கீழ்ப்பகுதியில் ஆறுகள் ஓடும். யார் புறக்கணிக்கிறாரோ அவருக்குத் துன்புறுத்தும் வேதனை அளிப்பான்.

திருக்குர்ஆன் 48 : 17

அல்லாஹ்வுக்கும், அவனது தூதருக்கும் நீங்கள் கட்டுப்பட்டால் உங்கள் செயல்களில் எதையும் அவன் குறைத்து விட மாட்டான். அல்லாஹ் மன்னிப்பவன்; நிகரற்ற அன்புடையோன்.

திருக்குர்ஆன் 49 : 14

மத்ஹபுகளை ஏற்றுக் கொள்பவர்கள் இவ்வசனங்களை மறுக்கிறார்கள் என்பதில் சந்தேகமில்லை.

அல்லாஹ்வும், அவனது தூதரும் காட்டிய வழியை விட்டு விலகி முன்னோர்களையும், மார்க்க அறிஞர்களையும், பெரியார்களையும், பெரும்பான்மையினரையும் பின்பற்றுவ்து வழிகேடு என்று பின்வரும் வசனங்களில் அல்லாஹ் எச்சரிக்கிறான்.

அல்லாஹ் அனுமதியளிக்காததை மார்க்கமாக ஆக்கும் தெய்வங்கள் அவர்களுக்கு உள்ளனரா? தீர்ப்பு பற்றிய கட்டளை இல்லாதிருந்தால் அவர்களுக்கிடையே முடிவு செய்யப்பட்டிருக்கும். அநீதி இழைத்தோருக்குத் துன்புறுத்தும் வேதனை இருக்கிறது.

திருக்குர்ஆன் 42 : 21

அவர்கள் அல்லாஹ்வையன்றி தமது மத போதகர்களையும், பாதிரிகளையும், மர்யமின் மகன் மஸீஹையும் கடவுள்களாக்கினர்.

திருக்குர்ஆன் 9 : 31

உங்கள் மார்க்கத்தை அல்லாஹ்வுக்குக் கற்றுக் கொடுக்கிறீர்களா? வானங்களிலும், பூமியிலும் உள்ளதை அல்லாஹ் அறிவான். அல்லாஹ் ஒவ்வொரு பொருளையும் அறிந்தவன் என்று கூறுவீராக!

திருக்குர்ஆன் 49 : 16

அல்லாஹ் அருளியதைப் பின்பற்றுங்கள்! என்று அவர்களிடம் கூறப்பட்டால் "எங்கள் முன்னோர்களை எதில் கண்டோமோ அதையே பின்பற்றுவோம்" என்று

கூறுகின்றனர். அவர்களின் முன்னோர்கள் எதையும் விளங்காமலும் நேர் வழி பெறாமலும் இருந்தாலுமா?

திருக்குர்ஆன் 2:170

அல்லாஹ் அருளியதை நோக்கியும், இத்தூதரை நோக்கியும் வாருங்கள்! என்று அவர்களிடம் கூறப்பட்டால் "எங்கள் முன்னோர்களை எதில் கண்டோமோ அதுவே எங்களுக்குப் போதும்" என்று கூறுகின்றனர். அவர்களின் முன்னோர்கள் எதையும் அறியாமலும், நேர் வழி பெறாமலும் இருந்தாலுமா?

திருக்குர்ஆன் 5:104

அவர்களின் முகங்கள் நரகில் புரட்டப்படும் நாளில் "நாங்கள் அல்லாஹ்வுக்குக் கட்டுப்பட்டிருக்கக் கூடாதா? இத்தூதருக்குக் கட்டுப்பட்டிருக்கக் கூடாதா?" எனக் கூறுவார்கள். "எங்கள் இறைவா! எங்கள் தலைவர்களுக்கும், எங்கள் பெரியார்களுக்கும் நாங்கள் கட்டுப்பட்டோம். அவர்கள் எங்களை வழி கெடுத்து விட்டனர்" எனவும் கூறுவார்கள். "எங்கள் இறைவா! அவர்களுக்கு இருமடங்கு வேதனையை அளிப்பாயாக! அவர்களை மிகப் பெரிய அளவுக்குச் சபிப்பாயாக!" எனவும் கூறுவார்கள்.

திருக்குர்ஆன் 33:66...68

பூமியில் உள்ளவர்களில் அதிகமானோருக்கு (முஹம்மதே!) நீர் கட்டுப்பட்டால் அவர்கள் உம்மை அல்லாஹ்வின் பாதையிலிருந்து வழி கெடுத்து விடுவார்கள். அவர்கள் ஊகத்தையே பின்பற்றுகின்றனர். அவர்கள் அனுமானம் செய்வோர் தவிர வேறு இல்லை.

திருக்குர்ஆன் 6:116

வஹீ அல்லாத மற்ற எதனையும், எவரையும் பின்பற்றினால் அதன் பரிசு நரகம் தான் என்று இவ்வசனங்கள் மூலம் அல்லாஹ் எச்சரிக்கிறான்.

## முழுமையாக்கப்பட்ட மார்க்கம்

இம்மார்க்கத்தை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் வாழும் காலத்திலேயே அல்லாஹ் முழுமைப்படுத்தி நமக்கு வழங்கி விட்டான். அதில் அல்லாஹ் எந்தக் குறையும் வைக்கவில்லை.

இதோ அல்லாஹ் கூறுவதைக் கேளுங்கள்!

இன்றைய தினம் உங்கள் மார்க்கத்தை உங்களுக்காக நிறைவு செய்து விட்டேன். எனது அருளை உங்களுக்கு முழுமைப்படுத்தி விட்டேன். இஸ்லாத்தை உங்களுக்கான வாழ்க்கை நெறியாக பொருந்திக் கொண்டேன்.

திருக்குர்ஆன் 5:3

நபிகள் நாயகத்தின் காலத்திலேயே இம்மார்க்கம் முழுமைப்படுத்தி வழங்கப்பட்டது என்றால் என்ன பொருள்? நபிகள் நாயகத்தின் காலத்துக்குப் பின்னால் உருவாக்கப்பட்டவை இஸ்லாம் அல்ல என்பது தான் இதன் பொருள்.

மத்ஹப்கள், நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் காலத்துக்குப் பின்னர் உருவாக்கப்பட்டவை என்பதால் அவற்றுக்கும், இஸ்லாத்துக்கும் சம்மந்தமில்லை என்பது உறுதி.

எனக்குப் பின்னால் உருவாக்கப்படும் அனைத்தும் வழிகேடு என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் எச்சரிக்கை செய்துள்ளனர். அவற்றில் மத்ஹபும் அடங்கும் என்பதில் சந்தேகமில்லை.

سنن النسائي 1578 - أَخْبَرَنَا عُتْبَةُ بْنُ عَبْدِ اللَّهِ، قَالَ: أَنْبَأَنَا ابْنُ الْمُبَارَكِ، عَنْ سُفْيَانَ، عَنْ جَعْفَرِ بْنِ مُحَمَّدٍ، عَنْ أَبِيهِ، عَنْ جَابِرِ بْنِ عَبْدِ اللَّهِ، قَالَ: كَانَ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ يَقُولُ فِي خُطْبَتِهِ: يَحْمَدُ اللَّهَ وَيُثْنِي عَلَيْهِ بِمَا هُوَ أَهْلُهُ، ثُمَّ يَقُولُ: «مَنْ يَهْدِهِ اللَّهُ فَلَا مُضِلَّ لَهُ، وَمَنْ يُضْلِلْهُ فَلَا هَادِيَ لَهُ، إِنَّ أَصْدَقَ الْحَدِيثِ كِتَابُ اللَّهِ، وَأَحْسَنَ الْهَدْيِ هَدْيُ مُحَمَّدٍ، وَشَرُّ الْأُمُورِ مُحْدَثَاتُهَا، وَكُلُّ مُحْدَثَةٍ بِدْعَةٌ وَكُلُّ بِدْعَةٍ ضَلَالَةٌ، وَكُلُّ ضَلَالَةٍ فِي النَّارِ»، ثُمَّ يَقُولُ: «بُعِثْتُ أَنَا وَالسَّاعَةُ كَهَاتَيْنِ»، وَكَانَ إِذَا ذَكَرَ السَّاعَةَ احْمَرَّتْ وَجْنَتَاهُ، وَعَلَا صَوْتُهُ، وَاشْتَدَّ غَضَبُهُ كَأَنَّهُ نَذِيرُ جَيْشٍ يَقُولُ: صَبَّحَكُمْ مَسَّاكُمْ، ثُمَّ قَالَ: «مَنْ تَرَكَ مَالًا فَلِأَهْلِهِ، وَمَنْ تَرَكَ دَيْنًا أَوْ ضَيَاعًا فَإِلَيَّ أَوْ عَلَيَّ، وَأَنَا أَوْلَى بِالْمُؤْمِنِينَ»

செய்திகளில் மிகவும் உண்மையானது அல்லாஹ்வுடைய வேதமாகும். நடைமுறையில் மிகவும் சிறந்தது முஹம்மதாகிய எனது நடைமுறையாகும். காரியங்களில் மிகத்தீயது (மார்க்கம் என்ற பெயரில்) புதிதாக உருவானவையாகும்.

புதிதாக உருவாக்கப்படும் அனைத்தும் பித்அத்துகள் ஆகும். ஒவ்வொரு பித்அத்தும் வழிகேடாகும். ஒவ்வொரு வழிகேடும் நரகத்தில் கொண்டு சேர்க்கும் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர் : ஜாபிர் (ரலி)

நூல் : நஸாயீ 1560

صحيح البخاري 6584 - قَالَ أَبُو حَازِمٍ: فَسَمِعَنِي النُّعْمَانُ بْنُ أَبِي عَيَّاشٍ، فَقَالَ: هَكَذَا سَمِعْتَ مِنْ سَهْلٍ؟ فَقُلْتُ: نَعَمْ، فَقَالَ: أَشْهَدُ عَلَى أَبِي سَعِيدٍ الخُدْرِيِّ، لَسَمِعْتُهُ وَهُوَ يَزِيدُ فِيهَا: " فَأَقُولُ إِنَّهُمْ مِنِّي، فَيُقَالُ: إِنَّكَ لاَ تَدْرِي مَا أَحْدَثُوا بَعْدَكَ، فَأَقُولُ: سُحْقًا سُحْقًا لِمَنْ غَيَّرَ بَعْدِي " وَقَالَ ابْنُ عَبَّاسٍ: سُحْقًا: بُعْدًا يُقَالُ: {سَحِيقٌ} [الحج: 31]: بَعِيدٌ، سَحَقَهُ وَأَسْحَقَهُ أَبْعَدَهُ

நான் உங்களுக்கு முன்பே அல்கவ்ஸர் தடாகத்திற்குச் சென்று காத்திருப்பேன். என்னிடம் வருபவர் அவர் அதை அருந்துவார். அதை அருந்துபவருக்கு தாகம் ஏற்படாது. (இந்நிலையில்) என்னிடம் சிலர் வருவார்கள். அவர்களை நான் அறிந்துகொள்வேன். என்னை அவர்களும் அறிந்துகொள்வார்கள். பிறகு எனக்கும், அவர்களுக்கும் இடையே தடுப்பு ஏற்படுத்தப்படும். (இறைவா!) இவர்கள் என்னைச் சேர்ந்தவர்கள் என்று நான் கூறுவேன். அதற்கு உங்களுக்குப் பின்னால் இவர்கள் (புதிது புதிதாக) உருவாக்கியதை நீங்கள் அறியமாட்டீர்கள் என்று சொல்லப்படும். உடனே நான் எனக்குப் பின்னால் (மார்க்கத்தை) மாற்றியவர்களை இறைவன் தன் கருணையிலிருந்து அப்புறப்படுத்துவானாக! அவர்களை இறைவன் தன் கருணையிலிருந்து அப்புறப்படுத்துவானாக!" என்று (இரண்டு முறை) கூறுவேன் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

நூல் : புகாரி 6584

புகாரி 6585 வது ஹதீஸில்

صحيح البخاري إِنَّكَ لاَ عِلْمَ لَكَ بِمَا أَحْدَثُوا بَعْدَكَ، إِنَّهُمُ ارْتَدُّوا عَلَى أَدْبَارِهِمْ القَهْقَرَى

"நபியே உங்களுக்குப் பின்னால் இவர்கள் (புதிது புதிதாக) உருவாக்கியது குறித்து உங்களுக்குத் தெரியாது. இவர்கள் திரும்பிப் பார்க்காமல் வந்த வழியே திரும்பிச் சென்று விட்டார்கள்" என்று அல்லாஹ் கூறுவான்

என்று பதிவு செய்யப்பட்டுள்ளது.

புகாரி 6587 வது ஹதீஸில்

صحيح البخاري إِنَّهُمُ ارْتَدُّوا بَعْدَكَ عَلَى أَدْبَارِهِمُ القَهْقَرَى

"நபியே உங்களுக்குப் பின்னால் இவர்கள் திரும்பிப் பார்க்காமல் வந்த வழியே மதம் மாறிச் சென்றுவிட்டார்கள்" என்று அல்லாஹ் கூறுவான்

என்று பதிவு செய்யப்பட்டுள்ளது.

இந்தச் சமுதாயத்தில் மிகச் சிறந்தவர்களான நபித்தோழர்கள், நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் காட்டித்தராத வழிகளை உருவாக்கினால் அவர்களும் வெற்றி பெற முடியாது என்று இந்த ஹதீஸ்கள் திட்டவட்டமாகக் கூறுகின்றன. அவர்களைவிட பண்மடங்கு தகுதியில் குறைந்த இமாம்களுக்கு அந்த அதிகாரம் இருக்குமா?

صحيح البخاري 2697 - حَدَّثَنَا يَعْقُوبُ، حَدَّثَنَا إِبْرَاهِيمُ بْنُ سَعْدٍ، عَنْ أَبِيهِ، عَنِ القَاسِمِ بْنِ مُحَمَّدٍ، عَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا، قَالَتْ: قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «مَنْ أَحْدَثَ فِي أَمْرِنَا هَذَا مَا لَيْسَ فِيهِ، فَهُوَ رَدٌّ»

நமது மார்க்கத்தில் இல்லாத ஒன்றை யார் புதிதாக ஏற்படுத்துகிறாரோ அது மறுக்கப்படும் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)

நூல் : புகாரீ 2697

صحيح مسلم (1718) وحَدَّثَنَا إِسْحَاقُ بْنُ إِبْرَاهِيمَ، وَعَبْدُ بْنُ حُمَيْدٍ، جَمِيعًا عَنْ أَبِي عَامِرٍ، قَالَ عَبْدٌ: حَدَّثَنَا عَبْدُ الْمَلِكِ بْنُ عَمْرٍو، حَدَّثَنَا عَبْدُ اللهِ بْنُ جَعْفَرٍ الزُّهْرِيُّ، عَنْ سَعْدِ بْنِ إِبْرَاهِيمَ، قَالَ: سَأَلْتُ الْقَاسِمَ بْنَ مُحَمَّدٍ، عَنْ رَجُلٍ لَهُ ثَلَاثَةُ مَسَاكِنَ، فَأَوْصَى بِثُلُثِ كُلِّ مَسْكَنٍ مِنْهَا، قَالَ: يُجْمَعُ ذَلِكَ كُلُّهُ فِي مَسْكَنٍ وَاحِدٍ، ثُمَّ قَالَ: أَخْبَرَتْنِي عَائِشَةُ، أَنَّ رَسُولَ اللهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ: «مَنْ عَمِلَ عَمَلًا لَيْسَ عَلَيْهِ أَمْرُنَا فَهُوَ رَدٌّ»

நமது கட்டளையில்லாத காரியத்தை யார் செய்கிறாரோ, அது மறுக்கப்படும் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)

நூல் : முஸ்லிம் 3243

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் காலத்துக்குப் பின்னர் உருவாக்கப்பட்டவை அல்லாஹ்வால் நிராகரிக்கப்படும் என்பதில் மத்ஹபுகளும் அடங்கும்.

## மத்ஹபுவாதிகளின் எதிர்வாதங்கள்

### அனைவரும் ஆய்வு செய்ய முடியுமா?

மத்ஹபுகளைப் பின்பற்றக் கூடாது என்று நாம் ஆதாரங்களுடன் எடுத்துக் காட்டும் போது அனைவரும் ஆய்வு செய்ய முடியாது என்பதால் பாமர மக்கள் மத்ஹபைத் தான் பின்பற்ற வேண்டும் என்று கூறி மத்ஹபை நியாயப்படுத்துகின்றனர்.

இந்த வாதத்தில் இவர்கள் உண்மையாளர்களாக இல்லை.

மத்ஹபை நம்பக் கூடியவர்கள் உலகில் ஒரே ஒரு மத்ஹப் தான் உள்ளது எனக் கூறுவதில்லை. நான்கு மத்ஹபுகள் உள்ளன என்பதுதான் அவர்களின் வாதம். இந்த நான்கு மத்ஹபுகளில் ஒன்றைப் பின்பற்ற வேண்டும் என்பது தான் இவர்களின் கொள்கை.

இதன் கருத்து என்ன?

இருக்கும் நான்கு மத்ஹபுகளையும் ஆய்வு செய்து அதில் ஒன்றைத் தேர்வு செய்ய வேண்டும் என்பதுதான் இதன் கருத்து. நான்கில் ஒன்றைத் தேர்வு செய்ய வேண்டும் என்று கூறும் போதே மத்ஹபுவாதிகளும் ஒரு வகையில் ஆய்வுதான் செய்கிறார்கள் என்பது உறுதியாகிறது.

நான்கு மத்ஹபுகளையும் சீர்தூக்கிப் பார்த்து அதில் ஒன்றைத் தேர்வு செய்ய வேண்டும் என்றால், அதை பாமரர்கள் உட்பட அனைவரும் செய்யமுடியும் என்றால் ஹதீஸ்கள் அடிப்படையில் ஏன் ஆய்வு செய்ய முடியாது?

உலகில் ஒரே ஒரு மத்ஹப் இருந்து, அந்த ஒரு மத்ஹபிலும் கருத்து வேறுபாடு இல்லாமல் ஒரு விஷயத்தில் ஒரு ஃபத்வா மட்டும் இருக்குமானால் அப்போது தான் இவர்கள் ஆய்வு செய்யாமல் மத்ஹபைப் பின்பற்றுகிறார்கள் என்று ஆகும். எனவே இவர்களின் வாதம் பொய்யானது என்பதை இதிலிருந்தும் அறியலாம்.

ஒவ்வொரு மத்ஹபிலும் இமாம்கள் மாறுபட்ட தீர்ப்புக்கள் வழங்கியுள்ளனர் எனவும் மத்ஹப்வாதிகள் கூறுகிறார்கள்.

ஒரு மத்ஹபின் அறிஞர்கள் மத்தியில் அனேக முரண்பாடுகளும், மாறுபட்ட ஃபத்வாக்களும் உள்ளன. அந்த ஃபத்வாக்களில் ஒன்றைத் தேர்வு செய்து அபூஹனீஃபா சொன்னது சரியில்லை. அபூயூசுப் சொன்னது தான் சரி என்று ஒன்றை மறுத்து மற்றொன்றைத் தேர்வு செய்கின்றனர். இதிலும் ஆய்வு அடங்கியுள்ளது.

ஒரு ஊரில் ஒரு மத்ஹபைச் சேர்ந்த ஒரு இமாம் கொடுக்கும் ஃபத்வாவுக்கு மாற்றமாக அதே ஊரைச் சேர்ந்த அதே மத்ஹபைச் சேர்ந்த இன்னொரு இமாம் வேறு ஃபத்வா கொடுக்கிறார். அந்த ஊரைச் சேர்ந்த அந்த மத்ஹபைப் பின்பற்றும் மக்கள் அவ்விரண்டில் ஒன்றை ஏற்று மற்றொன்றை மறுக்கின்றனர்.

ஒரு மத்ஹபைச் சேர்ந்த இரு இமாம்கள் கூறுவதில் ஒன்றை ஏற்று மற்றொன்றை மறுக்கும் அளவுக்கு பொதுமக்களே ஆய்வு செய்கிறார்கள் என்பதற்கு இதுவும் ஆதாரமாகும்.

குர்ஆன் ஹதீஸைப் பின்பற்றுவதை விட்டு விலகுவதற்கு இவர்கள் எடுத்துக் காட்டும் இந்தக் காரணம் மத்ஹபைப் பின்பற்றுவதால் நீங்கவில்லையே?

எந்த மத்ஹப் சரியானது? எந்த ஃபத்வா சரியானது என்று ஆய்வு செய்வதற்குப் பதிலாக மத்ஹபைப் புறக்கணித்து விட்டு யார் சொல்வது திருக்குர்ஆனுக்கும், நபிவழிக்கும் முரணில்லாமல் உள்ளது என்று ஆய்வு செய்ய முடியாதா?

ஒரு மார்க்க விஷயத்தில் கருத்து வேறுபாடு ஏற்பட்டால் குழம்ப வேண்டிய அவசியமில்லை. இறைவன் நமக்கு வழங்கிய அறிவைப் பயன்படுத்தி நடுநிலையோடு நம்மால் இயன்ற அளவு சிந்திக்க வேண்டும். எக்கருத்து ஏற்புடையதாக உள்ளதோ அதை ஏற்க வேண்டும்.

மனோ இச்சைக்கு இடம் கொடுக்காமல் நியாயமாகச் சிந்தித்தால் பெரும்பாலும் சரியான முடிவை பாமர மக்களாலும் எடுக்க முடியும். சில நேரங்களில் தவறான முடிவை சரி என்று கருதவும் வாய்ப்புள்ளது.

இவ்வாறு தவறிழைப்பது மனித இயல்பு என்பதால் இறைவன் இதற்குக் குற்றம் பிடிக்க மாட்டான். மாறாக மார்க்க விஷயத்தில் நாம் செய்த முயற்சிக்காக ஒரு நன்மையை வழங்குவான். சரியான முடிவு எடுத்தால் இரண்டு நன்மைகள் வழங்குவான்.

7352حَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ يَزِيدَ الْمُقْرِئُ الْمَكِّيُّ حَدَّثَنَا حَيْوَةُ بْنُ شُرَيْحٍ حَدَّثَنِي يَزِيدُ بْنُ عَبْدِ اللَّهِ بْنِ الْهَادِ عَنْ مُحَمَّدِ بْنِ إِبْرَاهِيمَ بْنِ الْحَارِثِ عَنْ بُسْرِ بْنِ سَعِيدٍ عَنْ أَبِي قَيْسٍ مَوْلَى عَمْرِو بْنِ الْعَاصِ عَنْ عَمْرِو بْنِ الْعَاصِ أَنَّهُ سَمِعَ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ يَقُولُ إِذَا حَكَمَ الْحَاكِمُ فَاجْتَهَدَ ثُمَّ أَصَابَ فَلَهُ أَجْرَانِ وَإِذَا حَكَمَ فَاجْتَهَدَ ثُمَّ أَخْطَأَ فَلَهُ أَجْرٌ رواه البخاري

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

தீர்ப்பளிப்பதற்காக ஒரு நீதிபதி ஆய்வு செய்து சரியான தீர்ப்பு வழங்குவாராயின் அவருக்கு இரண்டு நன்மைகள் உண்டு. அவர் தீர்ப்பளிப்பதற்காக ஆய்வு செய்து தவறான தீர்ப்பு வழங்குவாராயின் அவருக்கு ஒரு நன்மை உண்டு.

அறிவிப்பவர் : அம்ர் பின் அல்ஆஸ் (ரலி)

நூல் : புகாரி 7352

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் காலத்தில் நபியவர்களின் ஒரு கட்டளையைப் புரிந்து கொள்வதில் நபித்தோழர்களுக்கிடையே கருத்து வேறுபாடு ஏற்பட்டது. இவ்வாறு கருத்து வேறுபாடு கொண்டதற்காக அவர்களை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கண்டிக்கவில்லை.

4119حَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ مُحَمَّدِ بْنِ أَسْمَاءَ حَدَّثَنَا جُوَيْرِيَةُ بْنُ أَسْمَاءَ عَنْ نَافِعٍ عَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ قَالَ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ يَوْمَ الْأَحْزَابِ لَا يُصَلِّيَنَّ أَحَدٌ الْعَصْرَ إِلَّا فِي بَنِي قُرَيْظَةَ فَأَدْرَكَ بَعْضُهُمْ الْعَصْرَ فِي الطَّرِيقِ فَقَالَ بَعْضُهُمْ لَا نُصَلِّي حَتَّى نَأْتِيَهَا وَقَالَ بَعْضُهُمْ بَلْ نُصَلِّي لَمْ يُرِدْ مِنَّا ذَلِكَ فَذُكِرَ ذَلِكَ لِلنَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فَلَمْ يُعَنِّفْ وَاحِدًا مِنْهُمْ رواه البخاري

அகழ்ப் போர் (முடிந்து வந்த) தினம், நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், "பனூ குறைளா குலத்தினர் வசிக்குமிடத்தை நீங்கள் அடையும் வரை அஸர் தொழுகையைத் தொழ வேண்டாம்" என்று கூறினார்கள். வழியிலேயே அஸர் நேரத்தை அவர்கள் அடைந்தனர். அப்போது சிலர், "பனூ குறைளா குலத்தினரை அடையும் வரை நாம் அஸர் தொழ வேண்டாம்" என்று கூறினர். வேறு சிலர், அந்த அர்த்தத்தில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறவில்லை; (வேகமாக அங்கு

போய்ச் சேருங்கள் என்ற கருத்தில் தான் இந்த வார்த்தையைக் கூறினார்கள்) எனவே, நாம் தொழுவோம் என்று கூறினர். நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் இரு சாரார் குறித்தும் தெரிவிக்கப்பட்ட போது அவர்களில் எவரையும் அவர்கள் குறை கூறவில்லை.

அறிவிப்பவர் : இப்னு உமர் (ரலி(

நூல் : புகாரி 4119

தூய எண்ணத்துடன் இருவர் ஒரு ஹதீஸை அணுகி அதைப் புரிந்து கொள்வதில் அவ்விருவரும் முரண்பட்டால் இருவருமே குற்றவாளிகளாக மாட்டார்கள் என்பதற்கு இந்த ஹதீஸ் ஆதாரமாக அமைந்துள்ளது.

திருக்குர்ஆனையோ, ஹதீஸ்களையோ ஆய்வு செய்யாமல் இமாம்களைப் பின்பற்றி மத்ஹப் என்ற பெயரில் முரண்பட்டு நடப்பதற்கு இது ஆதாரமாகாது.

## எல்லோருக்கும் அரபுமொழி தெரியாது!

அரபுமொழி தெரியாதவர்களுக்கு குர்ஆன் விளங்குமா? சாதாரணமானவர்களால் குர்ஆன், ஹதீஸை எப்படி விளங்க முடியும்? மொழி பெயர்ப்புகளைத்தானே நம்ப வேண்டியுள்ளது ?

மத்ஹபுகளை நியாயப்படுத்துவோர் எடுத்து வைக்கும் அர்த்தமற்ற வாதங்களில் இதுவும் ஒன்றாகும்.

திருக்குர்ஆனையும், ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களையும் மட்டுமே பின்பற்ற வேண்டும் என்ற கொள்கையுடையவர்களுக்குக் கூட மயக்கத்தை ஏற்படுத்தும் பொய்யான வாதமாகும் இது.

திருக்குர்ஆனும், ஹதீஸ்களும் அரபு மொழியிலேயே அமைந்துள்ளன என்பது உண்மைதான். அரபுமொழி அறியாத மக்கள் மொழி பெயர்ப்புகளைத்தான் நம்ப வேண்டியுள்ளது என்பதும் உண்மைதான்.

இந்தக் காரணங்களுக்காகத் தான் மத்ஹபுகள் அவசியம் என்றால் மத்ஹபுடைய இமாம்கள் தமிழ்நாட்டில் பிறந்து, தமிழ் மொழியில் தான் சட்டங்களை எழுதினார்களா?

அபூஹனீஃபா தவிர மூன்று இமாம்களும் அரபிமொழியைத் தமது தாய்மொழியாகக் கொண்டவர்களே! அவர்கள் எழுதிய அல்லது எழுதியதாகச் சொல்லப்படும் நூல்கள் யாவுமே அரபி மொழியில் அமைந்தவையே.

பொதுமக்களுக்கு அரபுமொழி தெரியாததால் அவர்களால் திருக்குர்ஆனையும், ஹதீஸ்களையும் விளங்க முடியாது என்ற வாதம் உண்மை என்றால் இவர்கள் மத்ஹபிலும் இருக்கக் கூடாது.

மத்ஹபுகளின் இமாம்கள் அரபுமொழியில் தான் சட்டங்களை எழுதினார்கள் என்பதாலும், அந்த இமாம்கள் எழுதியதை மொழிபெயர்ப்புகளை வைத்துத் தான் பொதுமக்கள் புரிந்து கொள்ள முடிகிறது என்பதாலும், அந்த இமாம்களும்

அரபியராக இருந்ததனாலும் மத்ஹபுகளும், அதன் சட்டங்களும் விளங்காது என்று இவர்கள் கூறியிருக்க வேண்டும்.

தமிழ் நாட்டில் பிறந்த யாரையாவது இமாமாக ஏற்றிருக்க வேண்டும் அப்படிச் செய்யவில்லையே அது ஏன்?

மத்ஹபுடைய மூல நூல்கள் அரபு மொழியில் இருந்தாலும் அதைத் தமிழாக்கம் செய்தால் மக்களுக்குப் புரியும் என்று இவர்கள் நம்பியதால் தானே மத்ஹபுகளைப் பின்பற்றுவதாகக் கூறுகின்றார்கள்.

அரபுமொழியில் எழுதப்பட்ட மத்ஹபுச் சட்டங்களைத் தமிழாக்கம் செய்தால் விளங்க முடியும் என்றால் இந்த நியாயம் திருக்குர்ஆன், ஹதீஸ் விஷயத்தில் பொருந்தாமல் போனது ஏன்?

மத்ஹபுகள் மீது வெறி இருப்பதாலும், குர்ஆன், ஹதீஸ் இவர்களுக்குத் தேவையற்றதாக இருப்பதாலுமே இந்தப் பாரபட்சமான முடிவுக்கு வருகின்றனர்.

தவறானவையும், சரியானவையும் கலந்துள்ள மனிதர்களின் அரபுமொழி வாசகங்கள் தமிழாக்கம் செய்யப்பட்டால் விளங்க முடியும் என்றால் தவறே இல்லாமல், முற்றிலும் சரியாகவே உள்ள குர்ஆன், ஹதீஸ்கள் தமிழாக்கம் செய்யப்படும் போது ஏன் விளங்காது?

மொழிபெயர்ப்புகளில், மொழி பெயர்த்தவர்களின் கவனக் குறைவினாலோ, வேறு காரணங்களினாலோ சில தவறுகள் ஏற்படலாம் என்பதை நாம் மறுப்பதற்கில்லை. குர்ஆன், ஹதீஸ் மட்டுமின்றி எல்லா மொழிமாற்றத்தின் போதும் இது ஏற்படத்தான் செய்யும்.

அரபிமொழி அறியாதவர்களால் சிலவேளை இதைக் கண்டுபிடிக்கப்படாமல் போகலாம். அதற்காக குர்ஆன், ஹதீஸை விட்டு விட முடியுமா? விட்டு விட வேண்டும் என்றால் மத்ஹபுகள் உள்பட எந்த மொழி மாற்றத்தையும் விட்டாக வேண்டும்.

நம்மால் இயன்றளவு முயற்சித்துப் பார்த்துவிட்டு மொழிபெயர்ப்பை நாம் நம்புகிறோம். நாம் அறியாத வகையில் தவறுகள் நிகழ்ந்திருந்தால் அதை அல்லாஹ் மன்னிப்பான். வேண்டுமென்றே குர்ஆன், ஹதீஸை அலட்சியம் செய்வதை அல்லாஹ் மன்னிக்க மாட்டான்.

இன்னொன்றையும் நாம் கவனிக்க வேண்டும். மத்ஹபு ஆலிம்கள் தாங்கள் சொற்பொழிவுகளிலும், புத்தகங்களிலும் குர்ஆன், ஹதீஸ் மொழிபெயர்ப்புகளை அவ்வப்போது பயன்படுத்துகின்றார்களே விளங்காத குர்ஆன், ஹதீஸை ஏன் மக்களிடம் கூற வேண்டும்?

மக்களிடம் வசூல் வேட்டை நடத்துவதற்கு மட்டும் குர்ஆன், ஹதீஸ்களைக் கூறினால் விளங்கும்; மற்ற விஷயங்களுக்கு விளங்காதா?

நாம் எப்படி திருக்குர்ஆனுக்கு தமிழாக்கம் வெளியிட்டுள்ளோமோ அது போல் குர்ஆன் விளங்காது என்ற கொள்கை உடையவர்கள் ஏன் திருக்குர்ஆன் தமிழாக்கம் வெளியிட்டனர் என்பதும் கவனிக்கத்தக்கது..

இந்த வாதம் ஷைத்தானின் மாயவலை. இதில் சிக்கிக் கொள்ள வேண்டாம்.

## இமாம்களை விட நாம் நன்றாக அறிய முடியுமா?

இமாம்கள் சிறந்த காலத்தில் வாழ்ந்தவர்கள். நபியின் காலத்துக்கு நெருக்கமானவர்கள். அவர்களைப் போல் நம்மால் திருக்குர்ஆனையும், ஹதீஸ்களையும் விளங்க முடியாது என்பதால் மத்ஹபுகளைத் தான் பின்பற்ற வேண்டும் என்றும் வாதிடுகின்றனர்.

صحيح البخاري 2651 - حَدَّثَنَا آدَمُ، حَدَّثَنَا شُعْبَةُ، حَدَّثَنَا أَبُو جَمْرَةَ، قَالَ: سَمِعْتُ زَهْدَمَ بْنَ مُضَرِّبٍ، قَالَ: سَمِعْتُ عِمْرَانَ بْنَ حُصَيْنٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا، قَالَ: قَالَ النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «خَيْرُكُمْ قَرْنِي، ثُمَّ الَّذِينَ يَلُونَهُمْ، ثُمَّ الَّذِينَ يَلُونَهُمْ» - قَالَ عِمْرَانُ: لاَ أَدْرِي أَذَكَرَ النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ بَعْدُ قَرْنَيْنِ أَوْ ثَلاَثَةً - قَالَ النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «إِنَّ بَعْدَكُمْ قَوْمًا يَخُونُونَ وَلاَ يُؤْتَمَنُونَ، وَيَشْهَدُونَ وَلاَ يُسْتَشْهَدُونَ، وَيَنْذِرُونَ وَلاَ يَفُونَ، وَيَظْهَرُ فِيهِمُ السِّمَنُ»

உங்களில் சிறந்தவர்கள் என் காலத்தவர்கள். பின்னர் அவர்களை அடுத்து வரக் கூடியவர்கள். அதன் பின்னர் அவர்களை அடுத்து வரக் கூடியவர்கள் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள். மேலும் தொடர்ந்து உங்களுக்குப் பின் நாணயமாக நடக்காமல் மோசடி செய்பவர்களும், சாட்சியம் அளிக்க அழைக்கப்படாமலே சாட்சி கூறுபவர்களும், நேர்ச்சை செய்து அதை நிறைவேற்றாதவர்களும் தோன்றுவார்கள். அவர்களிடம் பகட்டு வெளிப்படும் எனவும் கூறினார்கள்.

நூல் : புகாரி 2651, 3650, 6428, 6695

தமது காலத்தவரையும், அதற்கு அடுத்த காலத்தவரையும் மிகச் சிறந்த சமுதாயம் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியுள்ளதால் நபித்தோழர்களை நாம் பின்பற்றலாம் என்று அவர்கள் வாதிடுகின்றனர்.

இந்த நபிமொழி ஆதாரப்பூர்வமானது என்பதில் சந்தேகம் இல்லை. இதன் பொருள் என்ன என்பதை இதன் இறுதியில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் விளக்கியுள்ளார்கள்.

அதாவது அந்தச் சமுதாயத்தில் நாணயம், நேர்மை, வாக்கை நிறைவேற்றுதல், வலியச் சென்று எதிலும் தலையிடாமல் இருப்பது போன்ற நற்பண்புகள் அதிக அளவில் இருக்கும். பிந்தைய சமுதாயத்தில் அது குறைந்து விடும் என்பது தான் அந்த விளக்கம்.

நபித்தோழர்கள் மற்றும் அதற்கடுத்த காலத்து மக்களின் சிந்தனையிலும், தீர்ப்புகளிலும், முடிவுகளிலும், ஆய்வுகளிலும் எந்தத் தவறும் ஏற்படாது என்பதால் அவர்கள் சிறந்தவர்கள் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறவில்லை.

அவர்களின் நாணயம், நேர்மை காரணமாக சிறந்தவர்கள் என்று தான் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். நாணயமாகவும், நேர்மையாகவும் இருப்பதால் அவர்களின் சிந்தனையில் தவறே ஏற்படாது என்று அறிவுடையோர் கூற மாட்டார்கள்.

மேலும் வஹீயை மட்டும் தான் பின்பற்ற வேண்டும் என்று நாம் எடுத்துக் காட்டிய ஏராளமான ஆதாரங்களுக்கு முரணில்லாத வகையில் தான் இதை விளங்க வேண்டும்.

இமாம்கள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு காலத்தால் நெருக்கமானவர்களாக இருந்தாலும் மார்க்கத்தை அறிந்து கொள்ளவும், ஆராய்ச்சி செய்யவும் அவர்களை விட பிற்காலத்தவர்களுக்குத் தான் அல்லாஹ் அதிக வாய்ப்புக்களை வழங்கியுள்ளான்.

மார்க்கத்தைச் சரியான முறையில் அறிந்து கொள்வதற்கு மார்க்க ஆதாரங்கள் பரவலாக்கப்பட்டும், எளிதில் கிடைக்கும் வகையிலும் முழுமையாகத் திரட்டப்பட்டும் இருக்க வேண்டும்.

ஆதாரங்கள் முழுமையாகத் திரட்டப்படாமலும், எளிதில் கிடைக்காமலும் இருந்தால் ஒவ்வொருவரும் தமக்குக் கிடைத்த ஆதாரங்களின் அடிப்படையில் தான் முடிவு செய்வார். ஆதாரம் கிடைக்காத போது சுயமாக முடிவு எடுப்பது தவிர அவருக்கு வேறு வழி இல்லை.

ஆனால் ஆதாரங்கள் திரட்டப்படுவதால் கிடைக்கும் வாய்ப்பு மிகச் சிறந்த காலத்தவர்களுக்கு இருக்கவில்லை. நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தமது வாழ்நாளில் மக்களுக்குக் கூறிய அறிவுரைகள் அனைத்தையும் எந்த நபித்தோழரும் அறிந்திருக்கவில்லை. ஒரு நபித்தோழருக்குத் தெரிந்த ஹதீஸ்

ஏராளமான நபித்தோழர்களுக்குத் தெரியாமல் இருந்துள்ளது. நபிகள் நாயகம் (ஸல்) காலத்துக்குப் பின்னர் நபித்தோழர்கள் பல பகுதிகளுக்கும் சென்றார்கள். தாம் தெரிந்து வைத்திருந்த ஹதீஸ்களை அந்தப் பகுதி மக்களுக்கு தேவைக்கேற்ப அறிவித்தார்கள்.

இமாம்கள் காலத்திலும் ஹதீஸ்கள் அனைத்தும் தொகுக்கப்பட்டு இருக்கவில்லை.

நபித்தோழர்களும், அதற்கடுத்த தலைமுறையினரும் தாம் சந்திக்கும் ஒவ்வொரு பிரச்சனைக்கும் அனைத்து ஹதீஸ்களையும் ஆய்வு செய்து தேடிப் பார்த்து தீர்ப்பளிக்கும் வாய்ப்பைப் பெறவே இல்லை. எனவே தான் அவர்கள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் வழியாக எதை அறிந்தார்களோ அதைப் பின்பற்றினார்கள். மற்ற விஷயங்களில் தாமாக முடிவு செய்வது மட்டுமே அவர்கள் முன் இருந்த ஒரே வழி என்பதால் அதைத் தான் அவர்கள் செயல்படுத்த முடிந்தது.

ஆனால் இன்றைக்கு ஒவ்வொரு வீடுகளிலும் ஒவ்வொரு நபரும் திருக்குர்ஆன் பிரதிகளை வைத்துள்ளோம்.

ஹதீஸ்கள் அனைத்தும் பாடம் வாரியாகத் தொகுக்கப்பட்டு நூல்களாக உள்ளன. அனைவரிடமும் அனைத்து நூல்களும் இல்லாவிட்டாலும் நூலகங்களிலும், மதரஸாக்களிலும் அவை உள்ளன.

சாப்ட்வேர்களாகவும் அனைத்தும் வந்துள்ளன.

எந்தக் கடினமான கேள்விக்கும் அரை மணி நேரம் செலவிட்டு அதற்கான ஆதாரங்களைக் கண்டுபிடிக்கும் அளவுக்குத் தொழில் நுட்பம் வளர்ந்துள்ளது.

இந்தக் காலத்தில் நபித்தோழர்கள் வாழ்ந்தால் நம்மை விடச் சிறப்பாக இந்த வசதியைப் பயன்படுத்தி சரியான ஃபத்வாக்களை வழங்கி இருப்பார்கள். அவர்கள் காலத்தில் நாம் இருந்தால் அவர்களிடம் ஏற்பட்ட தவறுகளை விட அதிகத் தவறு செய்பவர்களாக நாம் இருப்போம் என்பது தனி விஷயம்.

இந்த நிலை ஏற்படும் என்பதால் தான் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தமது இறுதிப் பேருரையில்

صحيح البخاري فَلْيُبَلِّغِ الشَّاهِدُ الغَائِبَ، فَرُبَّ مُبَلَّغٍ أَوْعَى مِنْ سَامِعٍ، فَلَا تَرْجِعُوا بَعْدِي [ص:177] كُفَّارًا، يَضْرِبُ بَعْضُكُمْ رِقَابَ بَعْضٍ»

வந்தவர்கள் வராதவருக்கு எனது செய்திகளை எடுத்துச் சொல்லுங்கள். எடுத்துச் சொல்பவரை விட யாரிடம் எடுத்துச் சொல்லப்படுகிறதோ அவர்கள் அதனை நன்கு பேணிப் பாதுகாப்பவர்களாக இருப்பார்கள் என்று முன்னறிவிப்பு செய்தனர்.

நூல் : புகாரி : 1741, 7074

உலகம் அழியும் வரை என்ன நடக்கும் என்பதை அறிந்து வைத்துள்ள இறைவனால் தரப்பட்டதே இஸ்லாம். உலகம் அழியும் வரை தோன்றும் அனைத்து பிரச்சனைகளுக்கும் தீர்வு சொல்லக் கூடிய வகையில் குர்ஆனிலும், ஹதீஸ்களிலும் சொற்கள் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன.

அந்தந்த காலத்தை அடைபவர்களால் தான் அதன் சரியான பொருளை அறிந்து கொள்ள முடியும்.

எனவே இது போன்ற விஷயங்களில் நபித்தோழர்கள் புரிந்து கொள்ளாத பல விஷயங்களை இன்று நாம் ஆய்வு செய்து புரிந்து கொள்ள முடியும்.

சந்திர மண்டலத்தில் கிப்லாவை எவ்வாறு நோக்குவது? செயற்கை முறையில் கருத்தரிப்பது கூடுமா? குடும்பக் கட்டுப்பாடு செய்யலாமா? என்பன போன்ற கேள்விகளை அன்றைக்கு அவர்களிடம் கேட்டால் இதெல்லாம் நடக்குமா என்ன? என்பது தான் அவர்களின் பதிலாக இருக்கும்.

இன்று நாம் பல நவீன பிரச்சனைகளை நேரடியாகவே சந்திப்பதால் இதற்கெல்லாம் தீர்வு தரும் வகையில் நிச்சயம் குர்ஆனிலும், நபிவழியிலும் வாசகம் இடம் பெற்றிருக்கும் என்ற நம்பிக்கையுடன் ஆய்வு செய்தால் அதற்கான விடை கூறக் கூடிய ஆதாரங்களைப் பார்க்க முடிகின்றது.

ஆழ்கடலில் அலைகள் உள்ளன. வானத்தைக் கூரையாக ஆக்கியுள்ளோம். மலைகளை முலைகளாக ஆக்கியுள்ளோம். ஜூதி மலையில் நூஹ் நபியின் கப்பல் அத்தாட்சியாக உள்ளது.

இது போல் எண்ணற்ற வசனங்கள் குர்ஆனில் உள்ளன. இவற்றை நாம் விளங்கியது போல நபித்தோழர்களால் விளங்கி இருக்க முடியாது. ஆய்வு செய்து இதற்கான விளக்கம் கண்டுபிடிக்கப்பட்ட காலத்தில் நாம் வாழ்வதால் நமக்கு இது சாத்தியமாகிறது.

ஒவ்வொரு செய்திக்கும் நிகழ்விடம், நிகழும் நேரம் உள்ளது என்று அல்லாஹ் கூறுகிறான்.

ஒவ்வொரு செய்திக்கும் நிகழ்வதற்கான நேரம் உள்ளது. பின்னர் அறிந்து கொள்வீர்கள்!

திருக்குர்ஆன் 6:67

எனவே திருக்குர்ஆனும் நபிவழியும் மட்டுமே மார்க்க ஆதாரங்களாகும். இவ்விரண்டைத் தவிர நபித்தோழர்கள் உள்ளிட்ட எவரது சொல்லும் மார்க்க ஆதாரங்களாகாது என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

## அருள் பெற்றவர்களைப் பின்பற்ற அல்லாஹ் அனுமதித்துள்ளானா?

நீ யாருக்கு அருள் புரிந்தாயோ அவர்களின் வழியைக் காட்டுவாயாக! என்று பிரார்த்தனை செய்யுமாறு அல்ஃபாத்திஹா அத்தியாயத்தில் அல்லாஹ் நமக்குக் கற்றுத் தருகிறான். எனவே அல்லாஹ்வின் அருள் பெற்ற நபித்தோழர்களையும், இமாம்களையும் பின்பற்றலாம் என்று வாதிடுகின்றனர்.

இந்தப் பிரார்த்தனையை நாம் மட்டும் செய்வதில்லை. முதன் முதலில் இதைச் செய்தவர்கள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தான். இறைவா! எனக்கு சஹாபாக்கள் வழியையும் இமாம்களின் வழியையும் காட்டு என்ற அர்த்தத்தில் தான் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இதைக் கூறினார்களா?

சஹாபாக்களும் கூட இதே பிரார்த்தனையைச் செய்தார்களே! அதன் பொருள் என்ன?

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் காலத்திற்குப் பின் இது இறைவனால் அருளப்பட்டது போல் எண்ணிக் கொண்டு இவ்வாறு வாதிடுகின்றனர்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு முன்னால் ஏராளமான நபிமார்கள், நல்லவர்கள் சென்று விட்டனர். அவர்கள் நேர்வழியில் சென்றதால் இறைவனின் அருளையும் பெற்றனர். அவர்கள் எந்த வழியில் சென்றனர் என்பதற்கு நம்மிடம் ஆதாரம் இல்லை. எனவே தான் ``இறைவா! இதற்கு முன்னர் நீ யாருக்கு அருள் புரிந்தாயோ அவர்கள் வழியைக் காட்டு என்று பிரார்த்திக்குமாறு அல்லாஹ் கற்றுத் தந்தான். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மூலம் அந்த நேர்வழி எது? என்பதையும் காட்டி விட்டான். இதைத் தான் இவ்வசனம் கூறுகிறது என்பதை சாதாரண அறிவு படைத்தவர்களும் விளங்க முடியும்.

எனவே குர்ஆனையும், நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு வஹீயாக அறிவிக்கப்பட்டதையும் தவிர வேறு எதுவும் மார்க்க ஆதாரமாக முடியாது என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

## நபித்தோழர்கள் மூலம் தானே குர்ஆன் கிடைத்தது?

நபித்தோழர்கள் வழியாகத்தான் குர்ஆனே நமக்குக் கிடைத்தது. அதை மட்டும் ஏற்றுக் கொள்ளும் நீங்கள் அவர்களின் கருத்துக்களைப் புறக்கணிப்பது சரியா என்பதும் இவர்களின் தவறான வாதங்களில் ஒன்றாகும்.

இதை மத்ஹபுவாதிகள் கேட்க அருகதை இல்லை. ஏனெனில் மத்ஹப்வாதிகள் நபித்தோழர்களைப் பின்பற்றுவதில்லை. அபூபக்கர் மத்ஹப், உமர் மத்ஹப் என்று மத்ஹபை உருவாக்கி இருந்தால் தான் இக்கேள்வியைக் கேட்க முடியும். ஆனால் மிகச் சிறந்த நபித்தோழர்களைப் புறக்கணித்து விட்டு அவர்களுக்குப் பின்னர் வந்தவர்கள் பெயரால் மத்ஹபை உண்டாக்கியவர்கள் இக்கேள்வியைக் கேட்க முடியாது.

ஆயினும் நபித்தோழர்களைப் பின்பற்றுவதாகக் கூறிக் கொள்ளும் சிலர் இக்கேள்வியை எழுப்பலாம். அப்படி எழுப்பினால் அதற்கான பதில் இதுதான்.

திருக்குர்ஆன் இறைவனின் வேதம் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் சொன்னார்கள். அவர்கள் மீது வைத்திருந்த நம்பிக்கையின் காரணமாகவும், திருக்குர்ஆனின் அற்புதநடை, தெள்ளத் தெளிவான கொள்கை காரணமாகவும் இது இறைவேதம் தான் என்று நபித்தோழர்கள் நம்பினார்கள். அதை அடுத்த தலைமுறையினருக்குக் கொண்டு சென்றார்கள்.

நபித்தோழர்கள் அடுத்த தலைமுறையினருக்கு திருக்குர்ஆனைக் கொண்டு வந்து சேர்த்த காரணத்தால் அவர்களைப் பின்பற்ற வேண்டும் என்பது எப்படிச் சரியாக இருக்கும்?

நீதிமன்றத்தில் இருந்து பிறப்பிக்கப்பட்ட கட்டளையை அப்படியே கூட்டாமல் குறைக்காமல் ஒரு தபால் ஊழியர் உங்களிடம் கொண்டு வந்து தந்தால் அல்லது நீதிமன்ற ஊழியர் கொண்டு வந்தால் அதை இப்படித்தான் நீங்கள் புரிந்து கொள்வீர்களா?

நீதிமன்ற உத்தரவை இவர்தான் என்னிடம் கொண்டு வந்து தந்தார். இவர் நீதிமன்ற உத்தரவை நாணயமாக என்னிடம் கொண்டு வந்து தராமல் இருந்தால்

அந்த உத்தரவு எனக்குக் கிடைக்காமல் போய் இருக்கும். எனவே இனிமேல் இந்த தபால்துறை ஊழியர் சொல்வதையெல்லாம் நான் பின்பற்றுவேன்; எனக்கு ஏதாவது வழக்கில் தீர்ப்பு தேவைப்பட்டால் இந்த ஊழியரிடமே தீர்ப்பு கோருவேன் என்று நீங்கள் சொல்வீர்களா? அல்லது உலகில் யாராவது இப்படி கூறுவார்கள் என்று கருதுகிறீர்களா?

உலகில் எந்த மனிதனும் ஏற்றுக் கொள்ளாத இந்த வாதத்துக்கும், இந்த வாதத்துக்கும் கடுகளவு வேறுபாடு கூட இல்லை.

நபித்தோழர்கள் தான் நம்மிடம் குர்ஆனைக் கொண்டு வந்து சேர்த்தார்கள் என்ற வாதமாவது உண்மையா என்றால் அதுவுமில்லை.

நமக்கு நபித்தோழர்கள் குர்ஆனைக் கொண்டு வந்து தரவில்லை. நமக்கு முந்திய தலைமுறையினர் தான் கொண்டு வந்து சேர்த்தனர். எனவே அவர்களைப் பின்பற்றலாம் என்று சொல்வோமா?

நமக்கு முந்தின தலைமுறையும் நபியிடம் நேரடியாகக் கேட்டு நமக்குச் சொல்லவில்லை. அவர்கள் தமக்கு முந்திய தலைமுறையினர் சொன்னதைத் தான் நம்மிடம் கொண்டு வந்து சேர்த்தனர். இப்படியே போய்க்கொண்டு இருந்தால் நபிகள் நாயகம் காலம் முதல் இன்று வரை உள்ள ஒவ்வொரு முஸ்லிமையும் பின்பற்ற வேண்டும் என்று ஆகாதா?

இதையே இன்னும் தீவிரமாகச் சிந்தித்தால் நபித்தோழர்கள் தான் இதைக் கொண்டு வந்த சேர்த்தனர் என்றால் அவர்கள் நபித்தோழர்கள் என்று எப்படி அறிந்து கொண்டோம்? அவர்களுக்கு அடுத்த தலைமுறை தான் அவர்களை நபித்தோழர்கள் என்று நமக்கு அடையாளம் காட்டினார்கள்.

இப்படியெல்லாம் கூர்மையாகச் சிந்தித்தால் இந்த வாதம் பொருளற்றது என்பதை அறிந்து கொள்ளலாம்.

## கருத்து வேறு தகவல் வேறு

நாங்கள், எங்கள் முன்னோர்களைப் பின்பற்றுகிறோம் அவர்களால் அடையாளம் காட்டப்பட்ட குர்ஆன், ஹதீஸையும் ஒப்புக் கொள்கிறோம். நீங்கள் முன்னோர்களைப் பின்பற்றக் கூடாது என்று சொல்கிறீர்கள்! அவர்களால் அடையாளம் காட்டப்பட்ட குர்ஆன் ஹதீஸ்களை மட்டும் ஏன் ஏற்றுக் கொள்கிறீர்களே! இது முரண் இல்லையா?"

நம்மைப் பார்த்து அதிகமாகக் கேட்கப்படும் கேள்விகளில் இதுவும் ஒன்று.

ஒரு மனிதனின் கருத்தையும், அவன் தெரிவிக்கும் தகவலையும் ஒரே மாதிரியாக அணுகுவது அறிவுடமை அல்ல.

உலகம் தட்டையானது என்று இப்ராஹீம் என்பவர் கூறினார்.

உலகம் தட்டையானது என்று இஸ்மாயீல் சொன்னதாக இப்ராஹீம் கூறினார்.

இந்த இரு வாக்கியங்களையும் எடுத்துக் கொள்ளுங்கள்.

முதல் வாசகத்தைக் கூறியதற்காக இப்ராஹீமை நாம் கண்டிப்போம். இரண்டாவது வாசகத்தைக் கூறியதற்காக நாம் இப்ராஹீமைக் கண்டிக்க மாட்டோம்.

உலகம் உருண்டை என்பது நிரூபிக்கப்பட்ட உண்மையாக இருக்கும் போது இப்ராஹீம் கூறும் கருத்து அந்த உண்மைக்கு மாற்றமாக அமைந்துள்ளதால் அவரது முதல் வாசகத்தை நாம் மறுப்போம்.

இப்ராஹீம் நம்பகமானவர், ஒழுக்கமானவர், உண்மை பேசுபவர் என்று நாம் அறிந்தாலும் அதன் காரணமாக பூமி தட்டை என்ற அவரது கருத்து சரியாகிவிடாது.

இரண்டாவது வாசகத்தில் இப்ராஹீமின் கருத்து எதுவும் இல்லை. இஸ்மாயீல் கூறிய தகவலைத் தான் அவர் எடுத்துச் சொல்கிறார். உலகம் தட்டை என்ற கருத்தை இப்ராஹீம் கூறவில்லை. எனவே உலகம் உருண்டை என்பதை அவர்

மறுத்ததாக ஆகாது. அவர் இஸ்மாயீலின் கருத்தை எடுத்துச் சொல்கிறார் என்று எடுத்துக் கொள்வோம்.

இஸ்மாயீல் இப்படி கூறியதாகச் சொல்லும் இப்ராஹீம் உண்மையாளராக இல்லாவிட்டால் அவர் பொய் தகவலைக் கூறினார் என்று கருதுவோம். அவர் நம்பகமானவராக இருந்தால் அவர் உண்மைத் தகவலைக் கூறினார் என்று எடுத்துக் கொள்வோம்.

முதல் வாசகத்தில் சொல்பவரின் நாணயம் நேர்மை கவனத்தில் கொள்ளப்படுவதில்லை. கருத்து மட்டுமே கவனத்தில் கொள்ளப்படுகிறது.

இரண்டாம் வாசகத்தில் இப்ராஹீமின் நாணயம் நேர்மை கவனத்தில் கொள்ளப்படுகிறது. இப்ராஹீமின் கருத்து எதுவும் இதில் இல்லாததால் கருத்தைக் கவனிப்பதில்லை.

இதை ஒரு ஹதீஸின் துணை கொண்டு தெளிவாக விளங்கலாம்.

904 - وَحَدَّثَنَاهُ إِسْحَاقُ بْنُ إِبْرَاهِيمَ الْحَنْظَلِىُّ أَخْبَرَنَا سُفْيَانُ بْنُ عُيَيْنَةَ عَنِ الْعَلاَءِ عَنْ أَبِيهِ عَنْ أَبِى هُرَيْرَةَ عَنِ النَّبِىِّ -صلى الله عليه وسلم- قَالَ « مَنْ صَلَّى صَلاَةً لَمْ يَقْرَأْ فِيهَا بِأُمِّ الْقُرْآنِ فَهْىَ خِدَاجٌ - ثَلاَثًا - غَيْرُ تَمَامٍ ». فَقِيلَ لأَبِى هُرَيْرَةَ إِنَّا نَكُونُ وَرَاءَ الإِمَامِ. فَقَالَ اقْرَأْ بِهَا فِى نَفْسِكَ فَإِنِّى سَمِعْتُ رَسُولَ اللَّهِ -صلى الله عليه وسلم- يَقُولُ « قَالَ اللَّهُ تَعَالَى قَسَمْتُ الصَّلاَةَ بَيْنِى وَبَيْنَ عَبْدِى نِصْفَيْنِ وَلِعَبْدِى مَا سَأَلَ فَإِذَا قَالَ الْعَبْدُ ( الْحَمْدُ لِلَّهِ رَبِّ الْعَالَمِينَ ). قَالَ اللَّهُ تَعَالَى حَمِدَنِى عَبْدِى وَإِذَا قَالَ (الرَّحْمَنِ الرَّحِيمِ ). قَالَ اللَّهُ تَعَالَى أَثْنَى عَلَىَّ عَبْدِى. وَإِذَا قَالَ (مَالِكِ يَوْمِ الدِّينِ). قَالَ مَجَّدَنِى عَبْدِى - وَقَالَ مَرَّةً فَوَّضَ إِلَىَّ عَبْدِى - فَإِذَا قَالَ (إِيَّاكَ نَعْبُدُ وَإِيَّاكَ نَسْتَعِينُ ). قَالَ هَذَا بَيْنِى وَبَيْنَ عَبْدِى وَلِعَبْدِى مَا سَأَلَ. فَإِذَا قَالَ (اهْدِنَا الصِّرَاطَ الْمُسْتَقِيمَ صِرَاطَ الَّذِينَ أَنْعَمْتَ عَلَيْهِمْ غَيْرِ الْمَغْضُوبِ عَلَيْهِمْ وَلاَ الضَّالِّينَ ). قَالَ هَذَا لِعَبْدِى وَلِعَبْدِى مَا سَأَلَ ». قَالَ سُفْيَانُ حَدَّثَنِى بِهِ الْعَلاَءُ بْنُ عَبْدِ الرَّحْمَنِ بْنِ يَعْقُوبَ دَخَلْتُ عَلَيْهِ وَهُوَ مَرِيضٌ فِى بَيْتِهِ فَسَأَلْتُهُ أَنَا عَنْهُ. صحيح مسلم

655 அப்துர் ரஹ்மான் பின் யஅகூப் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:

அபூஹுரைரா (ரலி) அவர்கள் அல்ஃபாத்திஹா அத்தியாயத்தை ஓதாமல் தொழுதவரின் தொழுகை குறையுள்ள தொழுகையாகும்; நிறைவுபெறாததாகும் என நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்று அறிவித்தார்கள். நாங்கள் இமாமைப் பின்பற்றி தொழுதாலுமா என்று அபூஹுரைரா (ரலி) அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கு அபூஹுரைரா (ரலி) அவர்கள் (பின்வருமாறு) பதிலளித்தார்கள்:

அதை உங்களுடைய மனதில் ஓதிக்கொள்ளுங்கள். ஏனெனில், அல்லாஹ் கூறியதாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

தொழுகை(யில் ஓதப்படும் அல்ஃபாத்திஹாவை எனக்கும் என் அடியானுக்குமிடையே இரு பகுதிகளாகப் பிரித்துள்ளேன். என் அடியான் கேட்டது அவனுக்குக் கிடைக்கும். அடியான் அல்ஹம்து லில்லாஹி ரப்பில் ஆலமீன் என்று சொன்னால் என் அடியான் என்னைப் புகழ்ந்து விட்டான் என்று அல்லாஹ் கூறுவான்.

அடியான் அர்ரஹ்மானிர் ரஹீம் என்று சொன்னால் என் அடியான் என்னைத் துதித்துவிட்டான் என்று அல்லாஹ் கூறுவான். அடியான் மாலிக்கி யவ்மித்தீன் (தீர்ப்பு நாளின் அதிபதி) என்று சொன்னால், என் அடியான் என்னைக் கண்ணியப்படுத்தி விட்டான் என்று அல்லாஹ் கூறுவான்.

இய்யாக்க நஅபுது வ இய்யாக்க நஸ்தஈன் (உன்னையே நாங்கள் வணங்குகிறோம். உன்னிடமே நாங்கள் உதவி தேடுகிறோம்) என்று அடியான் சொன்னால், இதுதான் எனக்கும், என் அடியானுக்கும் இடையே உள்ள உறவாகும். என் அடியானுக்கு அவன் கேட்டது கிடைக்கும் என்று அல்லாஹ் கூறுவான். இஹ்தினஸ் ஸிராத்தல் முஸ்தகீம். ஸிராத் தல்லதீன அன்அம்த்த அலைஹிம், ஃகைரில் மஃக்ளூபி அலைஹிம் வலள் ளால்லீன் என்று அடியான் சொன்னால், இது என் அடியானுக்கு உரியது. என் அடியானுக்கு அவன் கேட்டது கிடைக்கும் என்று அல்லாஹ் கூறுவான்.

நூல் : முஸ்லிம் 655

அல்ஹம்து அத்தியாயத்தின் சிறப்புக்கள் பற்றி நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறிய ஒருசெய்தியை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். இதன் அறிவிப்பாளர்கள் அனைவரும் நம்பகமானவர்களாக உள்ளதால் இந்த ஹதீஸை நாம் ஏற்றுக் கொள்கிறோம். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இப்படி கூறினார்கள் என்பதில் சந்தேகம் இல்லை.

அபூஹுரைரா (ரலி) அவர்கள் ஒரு மார்க்கத் தீர்ப்பு அளித்துவிட்டு அந்தத் தீர்ப்புக்கு ஆதாரமாக இந்த ஹதீஸை எடுத்துக் காட்டுகிறார்கள்.

அதாவது இமாமைப் பின்பற்றித் தொழுபவரும் அல்ஹம்து அத்தியாயத்தை ஓத வேண்டும் என்று கூறிவிட்டு அதற்கு ஆதாரமாக இந்த ஹதீஸை அபூஹுரைரா (ரலி) கூறுகிறார்கள்.

ஆனால் அபூஹுரைரா (ரலி) அவர்கள் எடுத்துக் காட்டும் இந்த ஹதீஸில் இமாமைப் பின்பற்றித் தொழுபவர் அல்ஹம்து ஓதவேண்டும் என்ற கருத்து இல்லை. அல்ஹம்து அத்தியாயம் சிறப்பான அத்தியாயம் என்பது தான் இதில் உள்ளது.

அபூஹுரைரா (ரலி) அவர்கள் எந்தக் கருத்துக்கு ஆதாரமாக இதை எடுத்துக் காட்டினார்களோ அந்தக் கருத்து இதில் இல்லாததால் அபூஹுரைரா (ரலி) அவர்களின் வாதம் தவறானது என்று முடிவு செய்கிறோம்.

அதாவது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் சொன்னதாக அபூஹுரைரா (ரலி) கூறும் தகவலை நாம் ஏற்றுக் கொள்கிறோம். தகவல்களைப் பொருத்தவரை சொல்பவர்கள் நாணயமானவர்களா என்று பார்த்து முடிவு செய்கிறோம்.

ஆனால் ஒரு கருத்தையோ, தீர்ப்பையோ ஒருவர் கூறினால் அந்தக் கருத்து சரியா என்பதை அறிய சொல்பவரின் நாணயத்தை நாம் கவனிக்க மாட்டோம். ஒருவர் நாணயமானவராக இருப்பதால் அவரது சிந்தனையில் தவறு ஏற்படாது என்று அறிவுடையோர் கருத மாட்டார்கள்.

பொய்யனும், இட்டுக்கட்டுபவனும், நேர்மையற்றவனுமான ஒருவன் ஐந்தும் ஐந்தும் பத்து என்று கூறினால் அதை நாம் மறுக்க மாட்டோம். அவன் கெட்டவனாக இருந்தாலும் அவன் சொல்லும் கருத்தை எடை போடுவதில் இது எந்த பாதிப்பையும் ஏற்படுத்தாது.

நாணயமும், நேர்மையும் உள்ள ஒருவன் ஐந்தும் ஐந்தும் ஏழு என்று சொன்னால் அவர் நாணயமானவர் என்ற காரணத்தைக் கூறி இதை ஏற்கமாட்டோம். இந்தக் கணக்கு சரியா தவறா என்பதை மட்டுமே பார்ப்போம்.

இந்த வித்தியாசத்தை விளங்கிக் கொண்டால் இமாம்கள் அறிவிக்கும் ஹதீஸ்களை நாம் ஏன் ஏற்கிறோம் என்பதற்கும், அவர்களின் சிந்தனையில்

உதித்த கருத்துக்களை நாம் பரிசீலனை செய்து சரியானதை மட்டும் ஏற்று தவறானதை ஏன் நிராகரிக்கிறோம் என்பதற்கும் உள்ள வித்தியாசத்தை விளங்கிக் கொள்ளலாம்.

## இமாம்களின் பெயரால் கற்பனைக் கதைகள்

மத்ஹபுகள் என்பன திருக்குர்ஆனுக்கும், நபிவழிக்கும் எதிரானதாக இருந்தும் எப்படி இச்சமுதாயத்தில் நிலைபெற்றன என்பதை முதலில் அறிந்து கொள்ள வேண்டும்.

மார்க்கக் கல்வி கற்கச் செல்லும் சிறு வயதினரை மூளைச்சலவை செய்து மத்ஹபு வெறியை ஊட்டி ஆலிம்களை உருவாக்குவார்கள். மத்ஹபு இமாம்கள் தவறுகளுக்கு அப்பாற்பட்டவர்கள் என்றும், அல்லாஹ்வுக்கு நெருக்கமானவர்கள் என்றும், நபிகள் நாயகத்துக்குச் சமமானவர்கள் என்றும், நபிகள் நாயகத்தை விட மேலானவர்கள் என்றும் கட்டுக்கதைகளைப் போதிப்பார்கள். ஆலிம் படிப்பு படிக்கச் சென்றவருக்கு சிறு வயதில் இப்படி பக்தி ஊட்டப்பட்டு பின்னர் அது வெறியாக மாற்றப்பட்டு விடுகிறது. இதன் காரணமாகத்தான் மத்ஹபில் உள்ள அபத்தங்கள் மக்களுக்குப் புரியும் அளவுக்கு ஆலிம்களுக்குப் புரிவதில்லை.

இமாம்களின் கருத்தில் தவறே வராது என்று மூளைச் சலவை செய்யப்பட்டுள்ளதே இதற்குக் காரணம்.

திருக்குர்ஆனுக்கும், ஹதீஸ்களுக்கும் முரணான மத்ஹப் சட்டங்கள் குறித்து யாரும் கேள்வி எழுப்பக் கூடாது என்பதற்காக மத்ஹப் இமாம்களை அல்லாஹ்வின் தூதருக்குச் சமமாகவும், அல்லாஹ்வின் தூதருக்கு மேலானவாரகவும் ஆக்கியுள்ள கொடுமைகளைப் பாருங்கள்

كَيْفَ وَقَدْ صَلَّى الْفَجْرَ بِوُضُوءِ الْعِشَاءِ أَرْبَعِينَ سَنَةً، وَحَجَّ خَمْسًا وَخَمْسِينَ حَجَّةً، وَرَأَى رَبَّهُ فِي الْمَنَامِ مِائَةَ مَرَّةٍ، وَلَهَا قِصَّةٌ مَشْهُورَةٌ. وَفِي حَجَّتِهِ الْأَخِيرَةِ اسْتَأْذَنَ حَجَبَةَ الْكَعْبَةِ بِالدُّخُولِ لَيْلًا فَقَامَ بَيْنَ الْعَمُودَيْنِ عَلَى رِجْلِهِ الْيُمْنَى وَوَضَعَ الْيُسْرَى عَلَى ظَهْرِهَا حَتَّى خَتَمَ نِصْفَ الْقُرْآنِ ثُمَّ رَكَعَ وَسَجَدَ ثُمَّ قَامَ عَلَى رِجْلِهِ الْيُسْرَى وَوَضَعَ الْيُمْنَى عَلَى ظَهْرِهَا حَتَّى خَتَمَ الْقُرْآنَ، فَلَمَّا سَلَّمَ بَكَى وَنَاجَى رَبَّهُ وَقَالَ: إلَهِي مَا عَبَدَك هَذَا الْعَبْدُ الضَّعِيفُ حَقَّ عِبَادَتِك لَكِنْ عَرَفَك حَقَّ مَعْرِفَتِك، فَهَبْ نُقْصَانَ خِدْمَتِهِ لِكَمَالِ مَعْرِفَتِهِ، فَهَتَفَ هَاتِفٌ مِنْ جَانِبِ الْبَيْتِ: يَا أَبَا حَنِيفَةَ قَدْ عَرَفْتَنَا حَقَّ الْمَعْرِفَةِ وَخَدَمْتَنَا فَأَحْسَنْتَ الْخِدْمَةَ، قَدْ غَفَرْنَا لَك وَلِمَنْ اتَّبَعَك مِمَّنْ كَانَ عَلَى مَذْهَبِك إلَى يَوْمِ الْقِيَامَةِ - الدر المختار

அபூஹனீஃபா அவர்கள் நாற்பது ஆண்டுகளாக (அதாவது பதினைந்தாயிரம் நாட்களாக) இஷாவுக்குச் செய்த உளூவின் மூலம் பஜ்ரு தொழுகை

தொழுதுள்ளார்கள். ஐம்பத்தி ஐந்து தடவை ஹஜ் செய்திருக்கின்றார்கள். தமது இறைவனை நூறு தடவை கனவில் பார்த்திருக்கிறார்கள்.

அபூஹனீஃபா அவர்கள் தமது கடைசி ஹஜ்ஜின் போது ஒரு இரவு கஅபாவின் காவலாளியிடம் கஅபாவிற்குள் நுழைய அனுமதி கேட்டார்கள். அவரும் அனுமதி கொடுத்தார். உள்ளே நுழைந்து - இரண்டு தூண்களுக்கிடையில் இடது காலை வலது காலின் மீது வைத்துக் கொண்டு, வலது காலில் நின்றார்கள். இப்படியே பாதி குர்ஆனை ஓதி முடித்தார்கள். பின்னர் ருகூவு செய்து, ஸஜ்தா செய்தார்கள். பின்னர் வலது காலை இடது காலின் மீது வைத்துக் கொண்டு இடது காலில் நின்றார்கள். மீதி இருந்த பாதி குர்ஆனையும் ஓதி முடித்தார்கள். ஸலாம் கொடுத்ததும் தம் இறைவனிடம் பின்வருமாறு உரையாடினார்கள்.

என் இறைவா! உனது பலவீனமான இந்த அடியான் உன்னை வணங்க வேண்டிய விதத்தில் வணங்கவில்லை. ஆயினும் உன்னை அறிய வேண்டிய விதத்தில் அறிந்துள்ளேன். எனவே எனது முழுமையான அறிவின் காரணமாக என் பணியில் ஏற்படும் குறைகளைப் பொறுத்துக் கொள் என்று அபூஹனீஃபா கூறினார்கள்.

உடனே கஅபாவின் மூலையிலிருந்து,”அபூஹனீஃபாவே! நம்மை அறிய வேண்டிய விதத்தில் அறிந்து விட்டீர். அழகிய முறையில் பணியும் செய்து விட்டீர். எனவே உம்மையும், கியாம நாள் வரை உம்மைப் பின்பற்றுவோரையும் நான் மன்னித்து விட்டேன்" என்று ஓர் அசரீரி கேட்டது.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

இதில் உள்ள அபத்தமான விஷயங்களைப் பாருங்கள்!

இஷாவுக்குச் செய்த உளூவைக் கொண்டு பதினைந்தாயிரம் நாட்கள் பஜ்ரு தொழுகை தொழுதார்கள் என்றால் என்ன பொருள்?

15 ஆயிரம் இரவுகள் அவர் உறங்கவில்லை! மலஜலம் கழிக்கவில்லை! காற்றுப் பிரியவில்லை! மனைவியுடன் குடும்பம் நடத்தவில்லை! என்பதுதான் இதன் பொருள். இப்படி எந்த மனிதராலும் நடக்க முடியுமா? இவ்வாறு நடக்க மார்க்கத்தில் அனுமதி உள்ளதா?

அபூஹனீஃபா அவர்கள் ஹிஜ்ரி 80ல் பிறந்து 150ல் மரணித்தார்கள். ஐம்பத்தி ஐந்து தடவை ஹஜ் செய்தார் என்றால் அவர் பருவம் அடைந்த 15 வயதில் இருந்து மரணித்த 70 வயது வரை ஒரு வருடம் கூட விடாமல் ஹஜ் செய்துள்ளார் என்று ஆகின்றது.

ஆனால் தாரீக் பக்தாத் நூலில் இடம்பெற்றுள்ள வரலாற்றுக் குறிப்பைப் பாருங்கள்!

تاريخ بغداد وذيوله ط العلمية

أَخْبَرَنَا الْقَاضِي أَبُو جَعْفَرٍ مُحَمَّدُ بْنُ أَحْمَدَ بْنِ مُحَمَّدٍ السمناني، أخبرنا سليمان بن الحسين بن علي البخاريّ الزّاهد، حَدَّثَنَا أَبُو بَكْر أَحْمَد بْن سَعْدِ بْن نصر، حدّثنا علي ابن موسى القمي، حَدَّثَنِي مُحَمَّد بن سعدان قال: سمعت أبا سليمان الجوزجاني يقول: سمعت حماد بن زيد يقول: أردت الحج، فأتيت أيوب أودعه، فقال: بلغني أن الرجل الصالح فقيه أهل الكوفة- يعني أبا حنيفة- يحج العام، فإذا لقيته فأقرئه مني السلام.

நான் ஹஜ் செய்ய நாடியபோது அய்யூப் அவர்களிடம் பயணம் சொல்லச் சென்றேன். அப்போது அவர்கள் இந்த ஆண்டு அபூஹனீஃபா ஹஜ் செய்ய வருவதாக எனக்குத் தகவல் கிடைத்துள்ளது. அவரை சந்தித்தால் அவருக்கு என் சலாமைக் கூறுங்கள் என்றார்கள் என ஹம்மாத் பின் ஸைத் கூறுகிறார்.

அபூஹனீஃபா ஒரு வருடம் விடாமல் ஹஜ் செய்பவராக இருந்தால் அய்யூப் அவர்கள் இந்த ஆண்டு ஹஜ் செய்ய வருகிறார் என்று சொல்லத் தேவையில்லை. அபூஹனீபா 55 தடவை ஹஜ் செய்ததாக அபூஹனீஃபா சொன்னாரா? அவரது மாணவர்கள் சொன்னார்களா? பிற்காலத்தில் வந்தவர்கள் தான் இப்படி இட்டுக்கட்டினார்கள் என்பதையும் கவனத்தில் கொள்ள வேண்டும்.

ஒற்றைக் காலில் நின்று வணங்க மார்க்கத்தில் அனுமதியிருக்கிறதா? ஒரு இரவில் முழுக் குர்ஆனையும் முறைப்படி ஓத முடியுமா? அல்லாஹ்வை அறிய வேண்டிய விதத்தில் அறிந்து விட்டேன் என்று அல்லாஹ்விடம் ஒருவர் கூறலாமா? நபிமார்கள் அல்லாத மனிதர்களிடம் அல்லாஹ் இவ்வாறு உரையாடுவானா? அபூஹனீஃபாவை மட்டுமின்றி கியாம நாள் வரை அவரைப் பின்பற்றக் கூடியவர்களையும் மன்னித்து விட்டதாக அல்லாஹ் கூறியிருக்க முடியுமா?

மத்ஹபின் மேல் வெறி ஏற்றுவதற்காக இப்படியெல்லாம் கட்டுக்கதைகளைச் சொல்லி மூளையை மழுங்கடிக்கின்றனர்.

அபூ ஹனீஃபாவிடம் அல்லாஹ் பேசி அவரை மட்டுமின்றி கியாம நாள் வரை அவரது மத்ஹபினரையும் மன்னித்து விட்டதாக நம்ப வைக்கப்படுகின்றனர்.

மத்ஹபுகளில் எவ்வளவு பாரதூரமான தவறுகளை நாம் எடுத்துக் காட்டினாலும் ஆலிம்களை அது கடுகளவும் பாதிக்காது. மத்ஹப் தவறாகவே இருந்தாலும் அதை அல்லாஹ் மன்னித்து விட்டதால் நம் வழியை மாற்றிக் கொள்ளத் தேவை இல்லை என்று முடிவு செய்கின்றனர்.

அபூஹனீஃபா பற்றி அவிழ்த்து விட்ட மற்றொரு கட்டுக்கதையைப் பாருங்கள்!

وَعَنْهُ عَلَيْهِ الصَّلَاةُ وَالسَّلَامُ -إنَّ سَائِرَ الْأَنْبِيَاءِ يَفْتَخِرُونَ بِي وَأَنَا أَفْتَخِرُ بِأَبِي حَنِيفَةَ، مَنْ أَحَبَّهُ فَقَدْ أَحَبَّنِي، وَمَنْ أَبْغَضَهُ فَقَدْ أَبْغَضَنِي- الدر المختار

எல்லா நபிமார்களும் என் மூலம் பெருமையடைகின்றனர். ஆனால் நானோ அபூஹனீஃபாவின் மூலம் பெருமையடைகின்றேன். யார் அவரை நேசிக்கிறாரோ அவரை நானும் நேசிக்கிறேன். யார் அவரை வெறுக்கிறாரோ அவரை நானும் வெறுக்கிறேன் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியுள்ளனர்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

அபூஹனீஃபா மூலம்தான் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்குப் பெருமை என்றால் நபி (ஸல்) அவர்களை விட அபூஹனீஃபா சிறந்தவர் என்றும், உயர்ந்தவர் என்றும் போதிக்கிறார்கள்.

ஆனால் இதில் எடுத்துக் காட்டுவது போல் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறவேயில்லை. அவர்கள் பெயரால் இட்டுக்கட்டி அபூஹனீஃபா பற்றி ஒரு சித்திரத்தை ஆலிம் படிப்பு படிக்கச் செல்லும் சின்னஞ்சிறுவர்களின் உள்ளங்களில் பதியச் செய்கின்றனர்.

நபியின் பெயரால் மேலும் இட்டுக்கட்டிக் கூறுவதைப் பாருங்கள்!

وَعَنْهُ - عَلَيْهِ الصَّلَاةُ وَالسَّلَامُ «إنَّ آدَمَ افْتَخَرَ بِي وَأَنَا أَفْتَخِرُ بِرَجُلٍ مِنْ أُمَّتِي اسْمُهُ نُعْمَانُ وَكُنْيَتُهُ أَبُو حَنِيفَةَ، هُوَ سِرَاجُ أُمَّتِي- الدر المختار

என்னை வைத்து ஆதம் பெருமை அடைந்தார். என் சமுதாயத்தில் தோன்றக் கூடிய நுஃமான் எனும் அபூஹனீஃபாவை வைத்து நான் பெருமை அடகிறேன் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

மேற்கண்டவாறு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறவேயில்லை. துணிந்து நபியின் பெயரால் பொய்யை இட்டுக்கட்டி உள்ளனர்.

மேலும் இதன் கருத்து மிகவும் ஆபத்தானதாக உள்ளது. நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அகிலத்தின் அருட்கொடை என்பதால் அவர்களை வைத்து ஆதமுக்குப் பெருமை என்று கூறுவதை ஏற்க முடிகிறது. ஆனால் நபிகள் நாயகத்துக்குப் பெருமை அபூஹனீஃபாவை வைத்துத் தான் என்று சொன்னால் அபூஹனீஃபா நபிகள் நாயகத்தை விட மேலானவர் என்பதாகும். இப்படி ஒரு நச்சுக்கருத்தையும் மார்க்கக் கல்வி கற்கச் சென்றவர்களிடம் விதைக்கிறார்கள்.

நபிகள் நாயகத்தை விட அபூஹனீஃபா பெரியவர் என்ற கருத்தை விதைத்து விட்டால் ஹதீஸ்களை விட அபூஹனீஃபாவின் கருத்துக்கு மக்கள் அதிக முக்கியத்துவம் கொடுப்பார்கள் என்பது தான் இந்தக் கட்டுக் கதையின் நோக்கம்.

மேலும் புளுகியுள்ளதைக் காணுங்கள்!

وَرَوَى الْجُرْجَانِيُّ فِي مَنَاقِبِهِ بِسَنَدِهِ لِسَهْلِ بْنِ عَبْدِ اللَّهِ التُّسْتَرِيِّ أَنَّهُ قَالَ لَوْ كَانَ فِي أُمَّتَيْ مُوسَى وَعِيسَى مِثْلُ أَبِي حَنِيفَةَ لَمَا تَهَوَّدُوا وَلَمَا تَنَصَّرُوا- الدر المختار

மூஸா நபி, ஈஸா நபி ஆகியோரின் சமுதாயங்களில் அபூஹனீஃபா போன்றவர் இருந்திருந்தால் அவர்கள் யூதர்களாகவோ, கிறிஸ்தவர்களாகவோ ஆகியிருக்க மாட்டார்கள் என்று அப்துல்லாஹ் துஸ்தரி கூறினார்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

அபூஹனீஃபா என்பவர் இந்த உம்மத்தில் பிறந்ததால் தான் இந்த உம்மத் வழிகெடாமல் இருக்கிறது என்றால் இது எவ்வளவு பெரிய திமிர்பிடித்த வாதம்? அபூபக்ர், உமர் மற்றும் அனைத்து நபித்தோழர்களை விடவும் இவர் மேலானவரா? இவரது மத்ஹபைப் பின்பற்றும் மக்களில் அதிகமானவர்கள் சமாதி வழிபாட்டில்

ஈடுபட்டு யூத கிறித்தவர் வழியில் போய்க்கொண்டு இருக்கிறார்களே? தன் மத்ஹபில் உள்ளவர்களையே ஷிர்க்கில் விழாமல் காப்பாற்ற இவரால் முடியவில்லையே?

இது இட்டுக்கட்டப்பட்ட பச்சைப் பொய் அல்லவா? அபூ ஹனீஃபா என்பவர் இந்த உம்மத்தில் பிறந்திருந்தும் ஷியாக்கள், காரிஜியாக்கள், முஃதஸிலாக்கள், மத்ஹபுவாதிகள் சமாதி வழிபாடு செய்வோர், பித்அத்வாதிகள் ஆகியோர் உருவானது எப்படி?

மேலும் எல்லை மீறி புகழ்வதைக் கேளுங்கள்!

وَقَدْ جَعَلَ اللَّهُ الْحُكْمَ لِأَصْحَابِهِ وَأَتْبَاعِهِ مِنْ زَمَنِهِ إلَى هَذِهِ الْأَيَّامِ، إلَى أَنْ يَحْكُمَ بِمَذْهَبِهِ عِيسَى عَلَيْهِ السَّلَامُ - الدر المختار

அபூஹனீஃபாவின் சகாக்களுக்கும், அவரைப் பின்பற்றுவோருக்கும் அல்லாஹ் ஞானத்தை வழங்கி விட்டான். (அல்லது அதிகாரத்தை வழங்கி விட்டான்) இறுதியில் இவரது மத்ஹபின்படியே ஈஸா நபி தீர்ப்பு வழங்குவார்கள்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

ஈஸா நபி, ஹனஃபி மத்ஹபைப் பின்பற்றுவார்கள் என்று எவ்வித ஆதாரமும் இல்லாமல் துணிந்து பொய் கூறியுள்ளனர். ஈஸா நபியை விட அபூஹனீஃபா சிறந்தவரா?

நபிமார்களை அவமானப்படுத்திவிட்டு இவரது புகழைப் பரப்ப வேண்டும் என்று வெறியை ஊட்டி ஆலிம்களைத் தயாரிக்கின்றனர்.

தனது மத்ஹப் இமாமைப் போற்றுவதாக எண்ணி மற்ற இமாம்களை எந்த அளவுக்குக் கேவலப்படுத்தி உள்ளனர் என்று பாருங்கள்!

فَلَعْنَةُ رَبِّنَا أَعْدَادَ رَمْلٍ ... عَلَى مَنْ رَدَّ قَوْلَ أَبِي حَنِيفَهْ - الدر المختار

அபூஹனீஃபாவின் கருத்தை மறுக்கக் கூடியவர்களுக்கு மணல்களின் எண்ணிக்கை அளவுக்கு நமது இறைவனின் சாபம் (லஃனத்) உண்டாகட்டும்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

அபூஹனீஃபாவின் கருத்தை மறுத்தால் மணல்களின் எண்ணிக்கை அளவுக்கு அல்லாஹ்வின் சாபம் உள்ளது என்று பயமுறுத்தி உருவாக்கப்பட்டதால் தான் ஆலிம்களுக்கு குர்ஆன் ஹதீஸ் ஒரு பொருட்டாகத் தெரியவில்லை.

மேலும் மூன்று இமாம்கள் அபூஹனீஃபாவின் கருத்தை மறுத்துள்ளனரே! அபூஹனீஃபாவின் மாணவர்களான அபூ யூசுப், முஹம்மது போன்றவர்கள் பலசட்டங்களில் அபூ ஹனீஃபாவின் கருத்துக்களை மறுத்திருக்கிறார்களே! அவர்கள் எல்லாம் சாபத்துக்கு உரியவர்களா?

அதுபோல் அமைந்த ஒரு கட்டுக் கதையைப் பாருங்கள்!

وَالْحَاصِلُ أَنَّ أَبَا حَنِيفَةَ النُّعْمَانَ مِنْ أَعْظَمِ مُعْجِزَاتِ الْمُصْطَفَى بَعْدَ الْقُرْآنِ الدر المختار

சுருங்கச் சொல்வதென்றால் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் அற்புதங்களில் குர்ஆனுக்கு அடுத்த மகத்தான அற்புதம் அபூஹனீஃபா தான்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

மனிதர்களால் சாத்தியமற்ற சில காரியங்களை அல்லாஹ்வின் அனுமதியுடன் செய்து காட்டி இதுதான் நான் இறைத்தூதர் என்பதற்கான ஆதாரம் என்று இறைத்தூதர்கள் வாதிடுவார்கள். இதுவே முஃஜிஸா எனும் அற்புதமாகும்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் அற்புதங்களில் திருக்குர்ஆன் மகத்தானது என்பதை நம்மால் புரிந்து கொள்ள முடிகிறது. அதற்கடுத்த அற்புதம் அபூஹனீஃபா தான் என்றால் அதன் பொருள் என்ன?

அபூஹனீஃபா நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் காலத்தில் வாழ்ந்தவரா? அவரை எடுத்துக் காட்டி இவர் தான் நான் இறைத்தூதர் என்பதற்கான ஆதாரம் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் சொன்னார்களா?

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைப் பார்க்காத, அவர்களின் காலத்தில் பிறந்திராத அபூஹனீஃபாவை, நபியவர்களின் அற்புதம் என்றால் அது எவ்வளவு பெரிய அபத்தம்?

குர்ஆனில் எந்தத் தவறும் இல்லாதது போன்று, அபூஹனீஃபாவின் தீர்ப்புகளிலும் தவறே இருக்காது என்று இதன் மூலம் நச்சுக்கருத்து ஊட்டப்படுகிறது.

அபூபக்ர் (ரலி) அவர்களின் இடத்தை மற்ற சஹாபாக்கள் கூட அடைய முடியாது. இந்த உம்மத்தில் யாரும் அடைய முடியாது என்பதை சாதாரண முஸ்லிம்களும் அறிந்து வைத்துள்ளனர். ஆனால் ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார் எப்படி வெறியேற்றுகிறது என்று பாருங்கள்!

كَيْفَ لَا وَهُوَ كَالصِّدِّيقِ رَضِيَ اللَّهُ عَنْهُ - الدر المختار

அபூஹனீஃபா அபூபக்ரைப் போன்றவராவார்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

இப்படி மத்ஹப் இமாம்கள் மீது பக்தி ஊட்டியதன் காரணமாகவே மத்ஹப் உலமாக்கள் மத்ஹபின் மீது வெறி கொண்டவர்களாக இருக்கின்றனர்.

இது போல் ஷாஃபி மத்ஹப் நூலிலும் ஷாஃபி இமாமை அளவு கடந்து புகழ்ந்து பக்தி ஊட்டியுள்ளதைக் காணுங்கள்!

وكان رضي الله عنه يقسم الليل على ثلاثة أقسام، ثلث للعلم، وثلث للصلاة، وثلث للنوم. ويختم القرآن في كل يوم مرة، ويختم في رمضان ستين مرة، كل ذلك في الصلاة.- إعانة الطالبين على حل ألفاظ فتح المعين (1/ 24)

ஷாஃபி இமாம் அவர்கள், இரவில் ஒரு பாகத்தைக் கல்விக்காகவும், மற்றொரு பாகத்தைத் தொழுகைக்காகவும், மற்றொரு பாகத்தை தூக்கத்துக்காகவும் என மூன்று பாகங்களாகப் பிரித்துக் கொள்வார்கள். தினமும் ஒரு தடவை முழுக்குர்ஆனையும் தொழுகையில் ஓதி முடிப்பார்கள். ரமலான் மாதத்தில் தினமும் இரண்டு தடவை முழுக்குர்ஆனையும் தொழுகையில் ஓதி முடிப்பார்கள்.

ஆதாரம் : ஷாஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய இஆனதுத்தாலிபீன்

இதில் உள்ள அபத்தங்களைப் பாருங்கள்!

ஷாஃபி இமாம் இரவை மூன்று பாகங்களாகப் பிரித்து அதில் ஒரு பாகத்தை தொழுகைக்கு ஒதுக்குவார்கள் என்று இதில் சொல்லப்பட்டுள்ளது. அதாவது

நான்கு மணி நேரத்தை தொழுகைக்காக அவர்கள் ஒதுக்கிக் கொள்வார்களாம். இந்த நான்கு மணி நேரத்தில் முழுக்குர்ஆனையும் ஓத முடியுமா? ருகூவு, சஜ்தா, இருப்பு ஆகிவற்றையும் செய்து கொண்டு முழுக்குர்ஆனையும் தொழுகையில் ஓத முடியுமா? ரமலான் மாத்த்தில் இரண்டு தடவை முழுக்குர்ஆனை இந்த நேரத்தில் ஓத முடியுமா?

ஒரு ஜுஸ்வை வேகமாக ஓதினால் குறைந்தது முப்பது நிமிடங்கள் ஆகும். முழுக்குர்ஆனையும் ஓத பதினைந்து மணி நேரங்கள் தேவைப்படும். இரண்டு தடவை ஓதிட முப்பது மணி நேரங்கள் ஆகும். தொழுகையில் ஓதுவதாக இருந்தால் நாற்பது மணி நேரங்கள் ஆகும். ஆனால் ஷாஃபி அவர்கள் தொழுகைக்காக ஒதுக்கிய நேரம் நான்கு மணி நேரம் தான்.

இதிலிருந்து இது கட்டுக்கதை என்று அறிந்து கொள்ளலாம். இவரைப் போல் யாராலும் செய்ய முடியாது என்று சித்தரித்து பக்தியை ஊட்டுவதே இதன் நோக்கம் என்பது பளிச்சென்று தெரிகின்றது.

وَزَعْمُ وَضْعِهِ حَسَدٌ أَوْ غَلَطٌ فَاحِشٌ وَهُوَ قَوْلُهُ - صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ - «عَالِمُ قُرَيْشٍ يَمْلَأُ طِبَاقَ الْأَرْضِ عِلْمًا» تحفة المحتاج في شرح المنهاج وحواشي الشرواني والعبادي (1/ 52)

குரைஷ் குலத்தைச் சேர்ந்த ஆலிம் ஒருவர் உலகெங்கும் கல்வியால் நிரப்புவார் என்ற நபிமொழி ஷாஃபி இமாமைக் குறித்ததாகும். ஆனால் பொறாமையின் காரணமாக இதை இட்டுக்கப்பட்ட ஹதீஸ் என்று சிலர் கூறுகின்றனர்.

நூல் : ஷாஃபி மத்ஹபின் சட்ட நூலான துஹ்ஃபா

இது இட்டுக்கட்டப்பட்டது என்று நல்லறிஞர்கள் ஆதாரத்துடன் விமர்சனம் செய்திருந்தும் அது பொறாமையால் சொன்னது என்று கூறி இந்தக் கட்டுக்கதையை வைத்து ஷாஃபி இமாமுக்கு மத்ஹபுக்கு பலம் சேர்க்கின்றனர்.

இப்படி ஆதாரப்பூர்வமான எந்த நபிமொழியும் இல்லை. இட்டுக்கட்டப்பட்ட செய்தியை எடுத்துக் காட்டி இது ஷாஃபியைத் தான் குறிக்கிறது என்று பக்தி ஊட்டப்படுகிறது.

وَكَاشَفَ أَصْحَابَهُ بِوَقَائِعَ وَقَعَتْ بَعْدَ مَوْتِهِ كَمَا أَخْبَرَ وَرَأَى النَّبِيَّ - صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ - وَقَدْ أَعْطَاهُ مِيزَانًا فَأُوِّلَتْ لَهُ بِأَنَّ مَذْهَبَهُ أَعْدَلُ الْمَذَاهِبِ وَأَوْفَقُهَا لِلسُّنَّةِ الْغَرَّاءِ الَّتِي هِيَ أَعْدَلُ الْمِلَلِ وَأَوْفَقُهَا لِلْحِكْمَةِ الْعِلْمِيَّةِ وَالْعَمَلِيَّةِ - تحفة المحتاج في شرح المنهاج وحواشي الشرواني والعبادي (1/ 52)

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஷாஃபி இமாமிடம் ஒரு தராசைக் கொடுப்பது போல் அவரது சகாக்கள் கனவு கண்டார்கள். ஷாஃபியின் மத்ஹபுதான் நேர்மையானதும், சுன்னத்துக்கு நெருக்கமானதும், அனைத்துப் பிரிவுகளை விட மேலானதும், ஞானத்துக்கு நெருக்கமானதும் ஆகும் என்றும் இதற்கு விளக்கம் கொடுக்கப்பட்டது.

நூல் : ஷாஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துஹ்ஃபா

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களே கனவின் மூலம் ஷாஃபி மத்ஹபுக்கு நற்சான்று கொடுத்துள்ளனர் என்ற கட்டுக்கதை மீது மத்ஹபை நிறுவியுள்ளனர். இதை நம்ப வைத்து விட்டால் ஷாஃபி மத்ஹபில் யாரும் குறைகாணத் துணிய மாட்டார்கள் அல்லவா? அதற்குத்தான் இந்த பில்டப்புகள்.

وَتُوُفِّيَ سَنَةَ أَرْبَعٍ وَمِائَتَيْنِ بِهَا، وَأُرِيدَ بَعْدَ أَزْمِنَةٍ نَقْلُهُ مِنْهَا لِبَغْدَادَ فَظَهَرَ مِنْ قَبْرِهِ لَمَّا فُتِحَ رَوَائِحُ طَيِّبَةٌ عَطَّلَتْ الْحَاضِرِينَ عَنْ إحْسَاسِهِمْ فَتَرَكُوهُ - تحفة المحتاج في شرح المنهاج وحواشي الشرواني والعبادي

ஷாஃபி இமாம் மரணித்த சில நாட்களில் அவரது உடலை பக்தாதுக்கு மாற்றுவதாக முடிவு செய்யப்பட்டது. அவரது கப்ரைத் தோண்டும் போது தூய்மையான நறுமணம் ஏற்பட்டு கூடியிருந்தோரை மயக்கியது. இதனால் அவரது உடலை இடமாற்றம் செய்வதை விட்டு விட்டனர்.

நூல்: ஷாஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துஹ்ஃபா

அடக்கம் செய்த உடலை பக்தாதுக்குக் கொண்டு செல்லும் எந்த அவசியமும் இருக்கவில்லை. அப்படி எந்த முயற்சியும் நடக்கவில்லை. ஆனால் இப்படி ஒரு கட்டுக்கதை மூலம் ஷாஃபி இமாமின் உடல் நாற்றமெடுக்காமல் நறுமணம் கமழ்ந்தது என்று கூறி நபிமார்களைப் போன்ற தகுதி பெற்றவர் என்ற முத்திரை குத்துவதுதான் இதன் நோக்கம்.

وَكَانَ - رَضِيَ اللَّهُ عَنْهُ - مُجَابَ الدَّعْوَةِ لَا تُعْرَفُ لَهُ كَبِيرَةٌ وَلَا صَغِيرَةٌ - مغني المحتاج إلى معرفة معاني ألفاظ المنهاج

ஷாஃபி இமாம் துஆ அங்கீகரிக்கப்பட்டவராக இருந்தார். அவர் சிறுபாவமோ, பெரும்பாவமோ செய்ததாக அறியப்படவில்லை.

நூல் : ஷாஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய முக்னீ

இவர் எந்த துஆ செய்தாலும் ஏற்றுக் கொள்ளப்படும் என்பதும், மலக்குகளைப் போல் இவர் பாவம் செய்யாத புனிதராக இருந்தார் என்பதும் மத்ஹப் வெறியை ஊட்டுவதற்கான கட்டுக்கதையாகும்.

وَقَدْ ذَكَرَ السُّبْكِيُّ أَنَّهُمْ ذَكَرُوا أَنَّ مِنْ خَوَاصِّ الْإِمَامِ الشَّافِعِيِّ مِنْ بَيْنِ الْأَئِمَّةِ أَنَّ مَنْ تَعَرَّضَ إلَيْهِ أَوْ إلَى مَذْهَبِهِ بِسُوءٍ أَوْ نَقْصٍ هَلَكَ قَرِيبًا، وَأَخَذُوا ذَلِكَ مِنْ قَوْلِهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ : { مَنْ أَهَانَ قُرَيْشًا أَهَانَهُ اللَّهُ- حاشية البجيرمي على الخطيب

யாராவது ஷாஃபி இமாமையோ, அவரது மத்ஹபையோ குறை கூறினால் கூடிய சீக்கிரம் அவன் அழிந்து விடுவான் என்பது ஷாஃபி இமாமின் தனிச்சிறப்பாகும். ஏனெனில் குரைஷ் குலத்தைச் சேர்ந்தவரை ஒருவன் இழிவுபடுத்தினால் அவரை அல்லாஹ் இழிவுபடுத்துவான் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியுள்ளனர் என்று சுப்கீ கூறுகிறார்.

நூல் : ஷாஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய ஹாஷியா புஜைரமீ

குலவெறியை ஒழித்துக் கட்டிய இஸ்லாத்தில் குறைஷிகள் பற்றி ஒரு ஹதீஸை இட்டுக்கட்டி, ஷாஃபி இமாம் குரைஷ் குலம் என்பதால் அவருடன் மோத வேண்டாம் என்று கூறி மத்ஹபுக்கு ஆள் பிடித்துள்ளனர் என்று இதிலிருந்து தெரிகின்றது.

فَائِدَةٌ : اتَّفَقَ لِبَعْضِ أَوْلِيَاءِ اللَّهِ تَعَالَى أَنَّهُ رَأَى رَبَّهُ فِي الْمَنَامِ فَقَالَ : يَا رَبِّ بِأَيِّ الْمَذَاهِبِ أَشْتَغِلُ ؟ فَقَالَ لَهُ مَذْهَبُ الشَّافِعِيِّ نَفِيسٌ - حاشية البجيرمي على الخطيب

சில அவ்லியாக்கள் அல்லாஹ்வைக் கனவில் பார்த்தார்களாம். இறைவா நான் எந்த மத்ஹபைப் பின்பற்றுவது என்று அவர்கள் அல்லாஹ்விடம் கேட்டார்களாம். அதற்கு அல்லாஹ் ஷாஃபி மத்ஹப் தான் மேலானது என்று பதிலளித்தானாம்.

நூல் : ஷாஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய ஹாஷியா புஜைரமீ

அல்லாஹ்வே ஷாஃபி மத்ஹபைப் பின்பற்றச் சொல்லி விட்டான் என்று கூறினால் அதைப் பின்பற்ற மக்கள் ஆர்வத்துடன் முன்வருவார்கள் என்பதற்காகவே இதுபோல் இட்டுக்கட்டி மக்களை மடையர்களாக்கியுள்ளனர்.

கட்டுக்கதைகளை உருவாக்கித் தான் மத்ஹபைப் பரப்பினார்கள். ஆதாரங்களின் அடிப்படையிலோ, கொள்கை அடிப்படையிலோ அல்ல என்பதைப் புரிந்து கொள்வோமாக!

أَنَّ الشَّافِعِيَّ صَلَّى الصُّبْحَ عِنْدَ قَبْرِهِ فَلَمْ يَقْنُتْ، فَقِيلَ لَهُ لِمَ ؟ قَالَ : تَأَدُّبًا مَعَ صَاحِبِ هَذَا الْقَبْرِ . وَزَادَ غَيْرُهُ أَنَّهُ لَمْ يَجْهَرْ بِالْبَسْمَلَةِ - رد المحتار

ஷாஃபி அவர்கள் அபூஹனீஃபாவின் கப்ருக்கு அருகே சுப்ஹு தொழுதார்கள். அப்போது குனூத் ஓதவில்லை. ஏன் என்று அவர்களிடம் கேட்கப்பட்ட போது, ”இந்தக் கப்ரில் இருப்பவரை மதிப்பதற்காக" என்று விடையளித்தார்கள். இவ்வாறே பிஸ்மியைச் சப்தமின்றி ஓதினார்கள்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

சுப்ஹு தொழுகையில் குனூத் ஓதுவது நபிவழி என்பது ஷாஃபி இமாம் அவர்களின் நம்பிக்கை. அது போல் பிஸ்மியை சப்தமாக ஓதுவது நபிவழி என்று அவர்கள் நம்பினார்கள்.

ஷாஃபி அவர்கள் எதை நபிவழி என்று நம்பினார்களோ அதை ஒரு மனிதருக்காக விட்டு விட்டார்கள் என்றால் நபியை விட அபூஹனீஃபாவுக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்ததாக ஆகின்றது.

உண்மையான இமாம்கள் ஒருக்காலும், உயிரே போனாலும் நபிவழியை எவருக்காகவும் விட்டுக் கொடுக்க மாட்டார்கள். ஷாஃபி இமாமை சந்தர்ப்பவாதியாகவும், கொள்கைப் பிடிப்பில்லாதவராகவும் காட்டி, தங்கள் இமாமுக்கு மதிப்பை உயர்த்தத் திட்டமிடுகின்றார்கள் என்பதை இதிலிருந்து அறியலாம்.

ஹனஃபி மத்ஹபுடைய சட்டப்படி இமாமைப் பின்பற்றித் தொழுபவர் எதையும் ஓதக்கூடாது. ஷாஃபி மத்ஹபுடைய சட்டப்படி இமாமைப் பின்பற்றி தொழுதாலும் அல்ஹம்து அத்தியாயத்தை ஓதியாக வேண்டும். இதைக் கவனத்தில் கொண்டு கீழ்க்காணும் வாசகத்தைப் பாருங்கள்!

وَقَالَ بَعْضُهُمْ: أَخَاف إِنْ تَرَكْت الْفَاتِحَةَ أَنْ يُعَاتِبَنِي الشَّافِعِيُّ أَوْ قَرَأْتها يُعَاتِبُنِي أَبُو حَنِيفَةَ فَاخْتَرْت الْإِمَامَةَ. الدر المختار

நான் அல்ஹம்து அத்தியாயத்தை ஓதுவதை விட்டுவிட்டால் ஷாஃபி இமாம் என்னைக் கண்டித்துவிடுவாரோ என்று அஞ்சுகிறேன். நான் இதை ஓதினால் அபூ ஹனீஃபா இமாம் என்னைக் கண்டித்து விடுவாரோ என்று அஞ்சுகிறேன். எனவே இமாமத் பணியை நான் தேர்வு செய்து விட்டேன் என்று அறிஞர்கள் கூறியுள்ளனர்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

அதாவது இரு மத்ஹபுகளின் படியும் இமாம் அல்ஹம்து அத்தியாயத்தை ஓதியாக வேண்டும். அதனால் இமாமத் பணியைத் தேர்வு செய்தாராம்.

மார்க்கத்தில் எவ்வாறு நடந்து கொள்வதற்கு ஆதாரம் உள்ளது என்பதில் இவர்களுக்கு அக்கறை இல்லை. மாறாக ஷாஃபி கண்டித்து விடக்கூடாது என்பதற்காகவும், அபூஹபனீபா கண்டித்து விடக்கூடாது என்பதற்காகவும் இருவரிடமும் மாட்டிக் கொள்ளாத ஒரு முறையை இவர் தேர்வு செய்கிறாராம்.

அபூஹனீஃபா, ஷாஃபி ஆகியோர் கண்டித்து விடக்கூடாது என்பதற்குத்தான் அஞ்சுகிறேன் என்று கூறுபவர் முஸ்லிமாக இருக்க முடியுமா? அதுவும் அவர்கள் மரணித்து மக்கிப் போன பின் அவர்களுக்கு அஞ்சுகிறார் என்றால் என்ன பொருள்? மறுமையில் அவர்கள் கண்டிப்பார்கள் என்ற கருத்தில் தான் இவ்வாறு கூறுகிறார்.

மறுமை நாளில் அல்லாஹ் விசாரிப்பது போல் இவ்விருவரும் ஒவ்வொருவரையும் விசாரிக்க அதிகாரம் பெற்றவர்கள் என்பதற்கு நிகரான ஷிர்க் எதுவும் இருக்க முடியுமா?

இவர்களுக்கு தவ்ஹீதின் அரிச்சுவடி கூட தெரியவில்லை. இவர்கள் இமாம்களா? ஷைத்தானின் உடன்பிறப்புகளா?

நான்கு மத்ஹபுகளும் சுன்னத் ஜமாஅத்தினர் தான் என்று பொதுமக்கள் மத்தியில் சொல்லிக் கொள்ளும் இவர்கள் தங்கள் மத்ஹப் மட்டுமே சரியானது என்றும் மற்ற மூன்று மத்ஹபுகள் தவறானது என்றும் தமக்குள் போதிக்கின்றனர்.

وإذا سئلنا عن معتقدنا ومعتقد خصومنا قلنا وجوبا: الحق ما نحن عليه، والباطل ما عليه خصومنا- الدر المختار

நமது கொள்கை குறித்தும், நமக்கு எதிர் கருத்து உள்ளவர்களின் கொள்கை குறித்தும் நம்மிடம் கேட்கப்பட்டால் எங்கள் கொள்கை தான் சரியானது; மற்றவர்களின் கொள்கை தவறானது என்று சொல்வது கட்டாயக் கடமையாகும்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

لَا تُقْبَلُ شَهَادَةُ الْبَخِيلِ لِأَنَّهُ لِبُخْلِهِ يَسْتَقْصِي فِيمَا يَتَقَرَّضُ مِنْ النَّاسِ فَيَأْخُذُ زِيَادَةً عَلَى حَقِّهِ، فَلَا يَكُونُ عَدْلًا وَلَا شَهَادَةُ الْأَشْرَافِ مِنْ أَهْلِ الْعِرَاقِ لِتَعَصُّبِهِمْ وَنَقَلَ الْمُصَنِّفُ عَنْ جَوَاهِرِ الْفَتَاوَى، وَلَا مَنْ انْتَقَلَ مِنْ مَذْهَبِ أَبِي حَنِيفَةَ إلَى مَذْهَبِ الشَّافِعِيِّ رَضِيَ اللَّهُ تَعَالَى عَنْهُ وَكَذَا بَائِعُ الْأَكْفَانِ وَالْحَنُوطِ لِتَمَنِّيهِ الْمَوْتَ، -رد المحتار -

அபூ ஹனீஃபாவின் மத்ஹபிலிருந்து ஷாஃபி மத்ஹபிற்கு மாறியவனின் சாட்சியும் ஏற்கப்படாது.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

நான்கு மத்ஹபும் நல்வழி என்று பொதுமக்களிடம் கூறும் இவர்கள் உள்ளுக்குள் எப்படி பாடம் கற்பிக்கின்றனர் என்று பாருங்கள்!

## உளூ, மற்றும் தொழுகைச் சட்டங்கள்

மத்ஹப் நூல்களில் குர்ஆன் ஹதீஸுக்கு முரணாகவும், ஆதாரமற்றதாகவும் தொழுகையைக் கேலிக்கூத்தாக்கும் வகையிலும் பல சட்டங்கள் உள்ளன. அவற்றில் சிலவற்றைப் பார்ப்போம்.

## தலை என்றால் ஒரு முடி என்று அர்த்தமாம்

தலைக்கு மஸஹ் செய்வது உளூவின் கடமைகளில் ஒன்று என்பதை நாம் அறிவோம். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தலைக்கு எப்படி மஸஹ் செய்ய வேண்டும் என்பதைச் செயல் மூலம் விளக்கியுள்ளனர்.

ஆனால் ஷாஃபி மத்ஹப் சட்டத்தைப் பாருங்கள்!

قوله ولو بعض شعرة واحدة أي ولو كان الممسوح بعض شعرة واحدة فإنه يكفي إعانة الطالبين

ஒரே ஒரு முடிக்கு மஸஹ் செய்தால் அது தலைக்கு மஸஹ் செய்ததாக ஆகும். அதுவே போதுமானதாகும்.

நூல் : ஷாஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய இஆனதுத் தாலிபீன்

ஷாஃபி மத்ஹபைப் பின்பற்றும் ஊர்களில் ஒரு விரலால் ஒரிரு முடியில் மஸஹ் செய்து உளூவையும், தொழுகையையும் பாழாக்கிக் கொள்வதைக் காணலாம்.

நமது வணக்கத்தைப் பாழாக்கும் இந்த மத்ஹபுச் சட்டங்கள் தேவையா என்று சிந்தியுங்கள்!

## ஒவ்வொரு தொழுகைக்கும் பல்துலக்குதல்

ஹதீஸ்களின் அடிப்படையில் சட்டம் வகுக்காமல் தம் இஷ்டத்துக்கு மத்ஹபு சட்டங்களை வகுத்துள்ளனர். மிகச் சில சட்டங்களுக்கு ஹதீஸ்களை இவர்கள் ஆதாரம் காட்டினாலும் அந்த ஹதீஸைப் புரிந்து கொள்ளாத அளவுக்கு மூளை வரண்டவர்களாக இருந்துள்ளனர் என்பதைக் காணுங்கள்!

وإنما يتأكد السواك ولو لمن لا أسنان له لكل وضوء ولكل صلاة فرضها ونفلها وإن سلم من كل ركعتين أو استاك لوضوئها وإن لم يفصل بينهما فاصل حيث لم يخش تنجس فمه وذلك لخبر الحميدي بإسناد جيد ركعتان بسواك أفضل من سبعين ركعة بلا سواك ولو تركه أولها تداركه أثناءها بفعل قليل فتح المعين

ஒவ்வொரு உளூவுக்கும், கடமையான, நபிலான ஒவ்வொரு தொழுகைக்கும் பல் துலக்குதல் அவசியமாகும். ஒவ்வொரு இரண்டு ரக்அத்தில் ஸலாம் கொடுத்தாலும், அந்த உளுவின் போது பல் துலக்கி இருந்தாலும் பல் துலக்க வேண்டும். ஏனெனில் பல் துலக்கி இரு ரக்அத்கள் தொழுவது பல் துலக்காமல் இரு ரக்அத்கள் தொழுவதை விட எழுபது மடங்கு சிறந்தது என்று உறுதியான ஹதீஸ் உள்ளது. தொழுகையைத் துவக்கும் போது பல் துலக்காமல் விட்டு விட்டால் தொழுகைக்கு இடையில் குறைவான செயலுடன் பல் துலக்க வேண்டும்.

நூல் : ஷாஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய ஃபத்ஹுல் முயீன்

இதில் சொல்லப்படுவது புரிகிறதா? இஷா தொழுகைக்காக நீங்கள் உளூ செய்கிறீர்கள். அப்போது பல் துலக்குகிறீர்கள். இஷாவின் முன் சுன்னத் தொழும் போது பல் குச்சியால் பல் துலக்கி விழுங்கி விட்டு தொழ வேண்டும். அதன் பின் இஷா தொழ ஆரம்பிக்கிறீர்கள். அப்போதும் பல் துலக்க வேண்டும். இஷாவுக்குப் பின் சுன்னத் தொழுகிறீர்கள். அப்போதும் பல் துலக்க வேண்டும். அதாவது பல்லைத் தேய்த்து விட்டு விழுங்க வேண்டும்.

ஷாஃபி மத்ஹப்காரர் இருபது ரக்அத் தராவீஹ் தொழுகிறார் என்றால் ஒவ்வொரு இரு ரக்அத்களின் போதும் பல் துலக்க வேண்டும். அதன் பின் வித்ருக்காக பல் துலக்க வேண்டும். அதாவது ரமலானில் இஷா தொழுகைக்கு வருபவர் 15 தடவைக்கு மேல் பல் துலக்க வேண்டுமாம்.

இதற்குக் காரணம் ஹதீஸைக் கடைப்பிடிக்கிறார்களாம்! பல் துலக்கி தொழுவது அதிகம் சிறப்பு என்று ஹதீஸில் வந்துள்ளதைச் செயல்படுத்துகிறார்களாம்!

இவனுகளைப் போல் மூடர்களை உலகில் எங்காவது காண முடியுமா?

உளூச் செய்யாமல் தொழக் கூடாது என்றால் அந்த உளூ நீங்கும் வரை அந்தத் தூய்மை நீடிக்கும். அந்த உளூ மூலம் எத்தனை தொழுகையும் தொழலாம். உளூ இருந்தாலும் ஒவ்வொரு தொழுகைக்கும் உளூ செய்ய வேண்டும் என்று இவர்களே கூறுவதில்லை.

ஒரு உளூவுக்குப் பல் துலக்கினால் அந்த உளூ நீங்கும் வரை பல் துலக்கியதும் நீடிக்கும் என்ற சாதாரண அறிவு கூட இவர்களுக்கு இல்லை.

பல் துலக்குதல் என்பது பல் குச்சியால் பல்லைத் தேய்ப்பது மட்டுமல்ல. பல்லைத் தேய்த்து வாய் கொப்பளித்து அந்த நீரைத் துப்புவதும் சேர்ந்துதான் பல் துலக்குதலாகும். ஆனால் ஷாஃபி மத்ஹபினர் தொழுகையைத் துவக்கும் போது குச்சியால் பல்லைத் தேய்த்து விட்டு அந்தக் குச்சியை பாக்கெட்டில் போட்டு தொழுகின்றனர். இதற்குப் பெயர் பல் துலக்குதலா?

அது மட்டுமின்றி இதை ஒருவன் மறந்து விட்டால் தொழுகையில் இருந்து கொண்டே பல் துலக்க வேண்டுமாம்.

வடிகட்டிய அடிமுட்டாள்களால் தான் மத்ஹபு சட்டங்கள் உருவாக்கப்பட்டுள்ளன என்பது தெள்ளத் தெளிவாக தெரிகிறது.

### உளூவில் சந்தேகம் வந்தால்..?

وَلَوْ عَلِمَ أَنَّهُ لَمْ يَغْسِلْ عُضْوًا وَشَكَّ فِي تَعْيِينِهِ غَسَلَ رِجْلَهُ الْيُسْرَى؛ لِأَنَّهُ آخِرُ الْعَمَلِ. الدر المختار

ஒருவர் உளூச் செய்யும்போது ஏதோ ஓர் உறுப்பைக் கழுவவில்லை. எந்த உறுப்பு என்பதில் அவர் சந்தேகப்படுகிறார். அப்படியானால் (இடது காலாகத் தான் அது இருக்க வேண்டும். எனவே) இடது காலைக் கழுவ வேண்டும். ஏனெனில் அதுதான் கடைசிச் செயல்.

நூல்: ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

உளூ செய்து முடித்த பின் ஏதோ ஒரு உறுப்பைக் கழுவவில்லை என்று யாருக்கும் சந்தேகம் வராது. கையைக் கழுவினோமா என்று சந்தேகம் வரும். அல்லது காலைக் கழுவினோமா என்று சந்தேகம் வரும். ஏதோ ஒன்றைக் கழுவவில்லை என்று எவருக்கும் சந்தேகம் வராது.

எந்த உறுப்பைக் கழுவியது குறித்து சந்தேகம் வருகிறதோ அந்த உறுப்பைக் கழுவவில்லை என்று முடிவு செய்து அதை மீண்டும் கழுவ வேண்டும் என்று முடிவு செய்வதற்குத் தான் ஆதாரங்கள் உள்ளன.

ஏதோ ஒரு உறுப்பைக் கழுவவில்லை என்று சந்தேகம் வந்தால் இறுதியாகக் கழுவ வேண்டிய இடது காலாகத் தான் இருக்கும் என்று முடிவு எடுக்க எந்த வசனம் ஆதாரம்? எந்த ஹதீஸ் ஆதாரம்?

இடதுகாலைக் கடைசியாக கழுவுவதால் அதைத்தான் கழுவவில்லை என்று முடிவு செய்ய எந்த லாஜிக்கும் இல்லை. கடைசியில் கழுவியது தான் ஒருவனுக்கு மற்றதை விட நன்றாக நினைவிலிருக்கும்.

ஒருவன் முதலில் செய்ய வேண்டிய காரியத்தையும் மறக்கலாம். நடுவில் செய்ய வேண்டிய காரியத்தையும் மறக்கலாம். கடைசியில் செய்யவேண்டிய காரியத்தையும் மறக்கலாம். இதுதான் யதார்த்தமானது.

உளூச் செய்யும் போது இடது காலைக் கழுவாது விட்டிருந்தால் சட்டென்று நினைவுக்கு வந்து விடும். மேலும் கழுவப்பட்ட காலுக்கும், கழுவப்படாத காலுக்கும் வித்தியாசம் இருக்கும். அதை வைத்து கால் கழுவப்பட்டதையும், கழுவப்படாததையும் கண்டுபிடிக்க முடியும்.

வலது கால் சுத்தமானதாகவும், இடது கால் அழுக்காகவும் இருந்தால் இடது கால் கழுவப்படவில்லை என்று கண்டுபிடிக்கலாம். ஏனெனில் ஒப்பிட்டுப் பார்க்க இரண்டு கால்கள் ஒவ்வொருவருக்கும் உள்ளன.

இரண்டு கால்களும் ஒரே மாதிரியாக சுத்தமானவையாக இருந்தாலும் இடது காலைத்தான் கழுவவில்லை என்று முடிவு செய்து அதைக் கழுவ வேண்டுமாம்; அது நன்றாகக் கழுவப்பட்டிருந்தாலும் அது கழுவப்படவில்லை என்று கிறுக்குத் தனமாக நாம் கருதிக் கொள்ள வேண்டுமாம்.

இவர்கள் கூறுவது போல் ஏதோ ஓர் உறுப்பு கழுவப்படவில்லை என்று சந்தேகம் வருவதாகவே வைத்துக் கொள்வோம். எந்த உறுப்பு என்று நினைவுக்குக் கொண்டு வர முடியாவில்லை என்றால் அனைத்து உறுப்புகளிலும் சந்தேகம் இருந்து கொண்டு உள்ளது. எனவே மீண்டும் ஒருமுறை முழுமையாக உளூச் செய்து கொள்ள வேண்டும் என்பதுதானே பொருத்தமாக இருக்கும்.

இவ்வாறு முடிவு செய்வதற்கு ஹதீஸ்களில் ஆதாரம் உள்ளது.

1300 - وَحَدَّثَنِى مُحَمَّدُ بْنُ أَحْمَدَ بْنِ أَبِى خَلَفٍ حَدَّثَنَا مُوسَى بْنُ دَاوُدَ حَدَّثَنَا سُلَيْمَانُ بْنُ بِلاَلٍ عَنْ زَيْدِ بْنِ أَسْلَمَ عَنْ عَطَاءِ بْنِ يَسَارٍ عَنْ أَبِى سَعِيدٍ الْخُدْرِىِّ قَالَ قَالَ رَسُولُ اللَّهِ -صلى الله عليه وسلم- « إِذَا شَكَّ أَحَدُكُمْ فِى صَلاَتِهِ فَلَمْ يَدْرِ كَمْ صَلَّى ثَلاَثًا أَمْ أَرْبَعًا فَلْيَطْرَحِ الشَّكَّ وَلْيَبْنِ عَلَى مَا اسْتَيْقَنَ ثُمَّ يَسْجُدُ سَجْدَتَيْنِ قَبْلَ أَنْ يُسَلِّمَ فَإِنْ كَانَ صَلَّى خَمْسًا شَفَعْنَ لَهُ صَلاَتَهُ وَإِنْ كَانَ صَلَّى إِتْمَامًا لأَرْبَعٍ كَانَتَا تَرْغِيمًا لِلشَّيْطَانِ ».

ஒருவர் தொழுத ரக்அத்களின் எண்ணிக்கை மூன்றா, நான்கா என்ற சந்தேகம் வந்தால் சந்தேகத்தை (அதாவது நான்கு என்பதை) எறிந்து விட்டு உறுதியானதை (அதாவது மூன்று என்பதை) எடுத்துக் கொள்ளட்டும் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

நூல் : முஸ்லிம் 990

இங்கே நான்காவதைத் தொழுதோமா இல்லையா என்று சந்தேகம் ஏற்படுகிறது. சந்தேகத்துக்குரியதைச் செய்யவில்லை என்று முடிவு செய்யுமாறு இந்த நபிமொழி வழிகாட்டுகிறது. நான்காவது ரக்அத் தொழுதோமா என்று சந்தேகம் வந்தால் அதைத் தொழவில்லை என்று தான் முடிவு செய்ய வேண்டும்.

இதே அடிப்படையில் ஒவ்வொரு உறுப்பும் கழுவப்பட்டதா இல்லையா என்று சந்தேகத்திற்குரியதாகி விடுவதால் எதையும் கழுவவில்லை என்ற முடிவுக்கு வந்து மீண்டும் உளூச் செய்வது தான் சரி. இது வலிமையான சந்தேகத்தின் போது கடைப்பிடிக்க வேண்டியதாகும்.

ஏதேனும் உறுப்பு கழுவப்படாமல் விடுபட்டிருக்கலாம் என்ற சந்தேகம் வலிமையில்லாததாக இருந்தால் அதைக் கண்டுகொள்ள வேண்டியதில்லை.

இவ்வாறு முடிவு செய்வதற்கு ஒரு நபிவழியை நாம் ஆதாரமாகக் கொள்ளலாம்.

137 - حَدَّثَنَا عَلِيٌّ، قَالَ: حَدَّثَنَا سُفْيَانُ، قَالَ: حَدَّثَنَا الزُّهْرِيُّ، عَنْ سَعِيدِ بْنِ المُسَيِّبِ، ح وَعَنْ عَبَّادِ بْنِ تَمِيمٍ، عَنْ عَمِّهِ، أَنَّهُ شَكَا إِلَى رَسُولِ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ الرَّجُلُ الَّذِي يُخَيَّلُ إِلَيْهِ أَنَّهُ يَجِدُ الشَّيْءَ فِي الصَّلاَةِ؟ فَقَالَ: «لاَ يَنْفَتِلْ - أَوْ لاَ يَنْصَرِفْ - حَتَّى يَسْمَعَ صَوْتًا أَوْ يَجِدَ رِيحًا»

ஒருவர் தொழுகையில் இருக்கும் போது காற்றுப் பிரிந்தது போல் சந்தேகம் ஏற்பட்டால் நாற்றம் அல்லது சப்தம் கேட்காத வரை தொழுகையை முறிக்க வேண்டாம் என்பது நபிமொழி.

நூல் : புகாரி 137

திட்டவட்டமில்லாத சந்தேகங்களுக்கு மதிப்பளிக்கத் தேவையில்லை என்பதை இந்த நபிமொழியிலிருந்து அறிந்து கொள்ளலாம்.

ஆக ஹதீஸ்களின் அடிப்படையில் இவ்வாறு முடிவு செய்வதை விடுத்து முட்டாள்தனமாக முடிவு செய்துள்ளனர்.

## பைத்தியமாக்கும் பல் குச்சி

உளூச் செய்யும் போது பல் துலக்குவதை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அதிகம் வலியுறுத்தியுள்ளனர்.

எப்படி பல் துலக்குவது என்பதற்கு குறிப்பிட்ட வழிமுறை எதையும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கற்றுத் தரவில்லை.

ஆனால் ஹனஃபி மத்ஹப் நூலில் பல்துலக்குவதற்கான சட்டம் பின்வருமாறு எழுதப்பட்டுள்ளது.

وَيَسْتَاكُ عَرْضًا لَا طُولًا، وَلَا مُضْطَجِعًا ؛ فَإِنَّهُ يُورِثُ كِبَرَ الطِّحَالِ، وَلَا يَقْبِضُهُ ؛ فَإِنَّهُ يُورِثُ الْبَاسُورَ، وَلَا يَمُصُّهُ ؛ فَإِنَّهُ يُورِثُ الْعَمَى، ثُمَّ يَغْسِلُهُ، وَإِلَّا فَيَسْتَاكُ الشَّيْطَانُ بِهِ، وَلَا يُزَادُ عَلَى الشِّبْرِ، وَإِلَّا فَالشَّيْطَانُ يَرْكَبُ عَلَيْهِ، وَلَا يَضَعُهُ بَلْ يَنْصِبُهُ، وَإِلَّا فَخَطَرُ الْجُنُونِ قُهُسْتَانِيٌّ . الدر المختار

பல் துலக்கும் குச்சியை அகல வாட்டத்தில் வைத்து பல் துலக்க வேண்டும். நீள வாட்டத்திலும், படுக்கை வாட்டத்திலும் வைத்து பல் துலக்கக் கூடாது. ஏனெனில் இது கல்லீரலில் வீக்கத்தை ஏற்படுத்தி விடும். அதை முழுக் கையால் பற்றிப் பிடிக்கக் கூடாது. ஏனெனில் அது மூல நோயை உருவாக்கி விடும். அதை வாயில் வைத்து சப்பக் கூடாது. ஏனெனில் அது பார்வையைக் குருடாக்கி விடும். அதைக் கழுவி விட வேண்டும். கழுவவில்லை என்றால் அதை வைத்து ஷைத்தான் பல் துலக்குவான். அதை ஒரு ஜான் அளவில் தான் வைத்திருக்க வேண்டும். அதை விட நீளமாக வைத்திருந்தால் ஷைத்தான் அதில் சவாரி செய்வான். அதைக் கீழே கிடத்தி விடாது நாட்டி வைக்க வேண்டும். இல்லையேல் பைத்தியம் பிடித்து விடும்.

நூல்: ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

இந்த அற்புதமான கண்டுபிடிப்புகளுக்கு என்ன ஆதாரம்?

இந்தச் சட்டங்களுக்கு நபிவழியில் எந்த ஆதாரமும் இல்லை என்பதை இந்த நூலே ஒப்புக் கொள்கிறது. அதனால்தான் நபிமொழியைக் காரணம் காட்டாமல் விளைவுகளைக் காரணம் காட்டுகிறது.

நீள வாக்கில் பல்துலக்கினால் கல்லீரலில் வீக்கத்தை ஏற்படுத்தும் என்று எப்படி அறிந்து கொண்டார்கள்? அன்றைக்கே கல்லீரலை எக்ஸ்ரே எடுத்து அல்லது ஸ்கேன் எடுத்து வீங்கி இருப்பதைக் கண்டுபிடித்தார்களா? நிஜமாகவே ஒருவனுக்கு இதனால் கல்லீரல் வீங்கி இருந்தால் அன்றைய மருத்துவ அறிவைக் கொண்டு கண்டுபிடிக்க முடியாது. அவ்வாறிருக்க இந்த அறிவீனர்கள் அதை எப்படிக் கண்டுபிடித்தார்கள்?

முழுக்கையால் பிடித்தால் தான் போதிய அழுத்தம் கிடைக்கும். இரு விரல்களால் பிடித்தால் பல் துலக்குவதற்குத் தேவையான அழுத்தம் கிடைக்காது என்று கூறியிருந்தாலாவது ஏற்றுக் கொள்ளலாம். ஆனால் இவ்வாறு செய்தால் மூல நோய் ஏற்படும் என்று எந்த விஞ்ஞானி கண்டுபிடித்தார்? மேலே சொன்னவாறு இதையும் நிரூபித்துக் காட்டத் தயாரா?

ஒரு ஜானுக்கு மேல் இருந்தால் அதில் ஷைத்தான் சவாரி செய்வான் என்று எழுதியுள்ளனர். இதை விஞ்ஞானத்தால் கண்டுபிடிக்க முடியாது. வஹீ மூலம் தான் கண்டுபிடிக்க முடியும். அதாவது அல்லாஹ்வோ, அவனது தூதரோ சொன்னால் தான் இதை அறிய முடியும். அப்படி எந்த ஆதாரமும் இல்லை. எனவே இச்சட்டத்தை இட்டுக்கட்டி சொல்லி உள்ளனர். இவர்களின் தலையில் ஷைத்தான் ஏறி உட்கார்ந்து கொண்டு இப்படி எழுத வைத்துள்ளான் என்று தெரிகிறது.

பல் குச்சியை நாட்டி வைக்காவிட்டால் பைத்தியம் பிடிக்கும் என்று எழுதி வைத்துள்ளனர். பைத்தியம் எதனால் ஏற்படுகிறது என்று பல காரணங்களை விஞ்ஞானிகள் கண்டறிந்துள்ளனர். அதில் பல் குச்சியைப் படுக்க வைப்பது இடம் பெறவில்லை. அப்படியானால் இப்படி உண்மைக்கு மாறானதை எழுதியவர்களுக்குத் தான் பைத்தியம் இருந்துள்ளது என்று தெரிகிறது.

## இரு விரல்களால் பல் துலக்குதல்

திருக்குர்ஆன் மற்றும் ஆதாரப்பூர்வமான ஹதீஸ்கள் பற்றிய ஞானம் மத்ஹபு அறிஞர்களுக்கு அறவே இல்லை என்றாலும் பொது அறிவாவது இருக்க வேண்டும் அல்லவா? இவர்கள் இயற்றிய சட்டங்களைப் பார்த்தால் மன நோயாளிகளின் உளறலைப் போல் அமைந்துள்ளதை நாம் காணலாம். அது போல் அமைந்த ஒரு சட்டத்தைப் பாருங்கள்!

وَالْأَفْضَلُ أَنْ يَسْتَاكَ بِالسَّبَابَتَيْنِ، يَبْدَأُ بِالسَّبَّابَةِ الْيُسْرَى ثُمَّ بِالْيُمْنَى، وَإِنْ شَاءَ اسْتَاكَ بِإِبْهَامِهِ الْيُمْنَى وَالسَّبَّابَةِ الْيُمْنَى، يَبْدَأُ بِالْإِبْهَامِ مِنْ الْجَانِبِ الْأَيْمَنِ فَوْقَ وَتَحْتَ، ثُمَّ السَّبَّابَةُ مِنْ الْأَيْسَرِ كَذَلِكَ - الدر المختار

இடது ஆட்காட்டி விரல், வலது ஆட்காட்டி விரல் ஆகிய இரு ஆட்காட்டி விரல்களைக் கொண்டு பல்துலக்குவது சிறந்ததாகும். முதலில் இடதுகை ஆட்காட்டி விரலாலும், பின்னர் வலதுகை ஆட்காட்டி விரலாலும் பல் துலக்க வேண்டும்.

நூல்: ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

பல் துலக்குதல் போன்ற காரியங்கள் வலது கையால் செய்ய வேண்டும் என்பது நபிவழியாகும்.

168 - حَدَّثَنَا حَفْصُ بْنُ عُمَرَ، قَالَ: حَدَّثَنَا شُعْبَةُ، قَالَ: أَخْبَرَنِي أَشْعَثُ بْنُ سُلَيْمٍ، قَالَ: سَمِعْتُ أَبِي، عَنْ مَسْرُوقٍ، عَنْ عَائِشَةَ، قَالَتْ: كَانَ النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ «يُعْجِبُهُ التَّيَمُّنُ، فِي تَنَعُّلِهِ، وَتَرَجُّلِهِ، وَطُهُورِهِ، وَفِي شَأْنِهِ كُلِّهِ» صحيح البخاري

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தாம் செருப்பு அணிந்துகொள்ளும் போதும், தலைவாரிக் கொள்ளும் போதும், சுத்தம் செய்யும் போதும் தம் அனைத்துக் காரியங்களிலும் வலப்பக்கத்தையே விரும்பி வந்தார்கள்.

அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)

நூல் : புகாரி 168

மத்ஹபு உலமாக்களுக்கு இது போன்ற நபிமொழிகள் கூட தெரியவில்லை. நாகரீகமுள்ள எந்த மனிதனாவது இடது கை விரல்களை வாய்க்குள் நுழைத்து பல்லைத் தேய்ப்பானா? இரு ஆட்காட்டி விரல்களால் ஒருவன் பல்துலக்கினால் அவனைக் கிறுக்கனாகத்தானே மக்கள் கருதுவார்கள்? உங்களைக் கிறுக்கர்களாக ஆக்கும் இந்த மத்ஹபுகள் உங்களுக்குத் தேவையா?

இந்த அறிவீனர்கள் வகுத்துத் தந்த சட்டங்களை நாகரீகமுள்ள மக்கள் பின்பற்றலாமா? சிந்தித்துப் பாருங்கள்.

## கொடுவாய் எச்சிலை விழுங்குதல்

தூங்கி எழுந்தவுடன் பல் துலக்க வேண்டும் என்பதை நாம் அறிந்து வைத்துள்ளோம். பல் துலக்காமல் உண்பதாலும், பருகுவதாலும் கேடுகள் ஏற்படும் என்பதையும் அறிந்து வைத்துள்ளோம். ஆனால் மத்ஹபு விஞ்ஞானிகளின் கண்டுபிடிப்பைப் பாருங்கள்!

وينبغي أن يبلع ريقه أول استياكه أي إلا لعذر إعانة الطالبين

பல் துலக்கியதும் அந்த எச்சிலை அப்படியே விழுங்குவது அவசியமாகும்.

நூல் : ஷாஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய இஆனதுத் தாலிபீன்

இது அறுவருப்பானது என்பது ஒருபுறமிருக்கட்டும். இது அவசியம் என்று மார்க்கச் சட்டம் சொல்வதாக இருந்தால் இதற்கு ஆதாரமாக அமைந்த குர்ஆன் வசனம் எது? ஹதீஸ் எது? மத்ஹபு உலமாக்களால் ஆதாரத்தைக் காட்ட இயலாது.

## குழாயை ஆறாக மாற்றும் அதிசய சட்டம்

ஹனஃபி மத்ஹப் சட்டப்படி ஒரு தடவை உளூச் செய்த தண்ணீரில் மீண்டும் உளூச் செய்யக் கூடாது. குளம் குட்டை போன்ற ஓடாத தண்ணீராக இருந்தால் அது பத்து முழம் ஆளமும், பத்து முழம் அகலமும் கொண்டதாக இருந்தால் அதில் கைகளை விட்டு உளூச் செய்யலாம். மேற்கண்ட அளவை விடக் குறைவாக இருந்தால் அதில் கைகளை விட்ட உடன் அது பயன்படுத்திய தண்ணீராகி விடும். அதில் கைகளை விட்டவரும் உளூச் செய்ய முடியாது. மற்றவரும் உளூச் செய்ய முடியாது.

ஆனால் ஒடும் தண்ணீராக இருந்தால் அதில் கைகளை விட்டு உளூச் செய்யலாம். அதில் அசுத்தமான பொருள் மிதந்தாலும் அது சுத்தமான தண்ணீராகும்.

இப்படி ஹனஃபி மத்ஹப் சட்டம் கூறுகிறது. இது ஆதாரமற்ற சட்டம் என்றாலும் இதில் பெரிய அளவில் கிறுக்குத் தனம் இல்லாததால் இதை விட்டு விடலாம்.

ஆனால் ஓடும் தண்ணீர் என்று ஹனஃபி இமாம்கள் கூறியதை மத்ஹபு சட்டப் புத்தகம் எழுதியவர்கள் எப்படி புரிந்து கொண்டு துணைச் சட்டம் எழுதியுள்ளார்கள் என்பதைப் பார்க்கும் போது இவர்களுக்கு நிகரான அறிவீனர்கள் உலகில் இருக்க முடியாது என்று அறிந்து கொள்ளலாம்.

அந்தத் துணைச் சட்டம் இதுதான்:

وَكَذَا لَوْ حَفَرَ نَهْرًا مِنْ حَوْضٍ صَغِيرٍ أَوْ صَبَّ رَفِيقُهُ الْمَاءَ فِي طَرَفِ مِيزَابٍ وَتَوَضَّأَ فِيهِ وَعِنْدَ طَرَفِهِ الْآخَرِ إنَاءٌ يَجْتَمِعُ فِيهِ الْمَاءَ جَازَ تَوَضُّؤُهُ بِهِ ثَانِيًا وَثُمَّ وَثُمَّ وَتَمَامُهُ فِي الْبَحْرِ – الدر المختار

ஒருவன் உளூச் செய்வதற்காக இன்னொருவன் தண்ணீர் ஊற்றுகிறான். அவன் உளூச் செய்த தண்ணீர் ஒரு குழாயின் ஒரு முனையில் ஓடுகிறது. அதன் மறுமுனையில் ஒரு பாத்திரம் வைக்கப்பட்டு அதில் அந்தத் தண்ணீர் சேர்கிறது. அந்தத் தண்ணீரில் மீண்டும் மீண்டும் மீண்டும் உளூச் செய்யலாம்.

நூல்: ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

இப்போது ஓடும் தண்ணீர் என்ற தகுதி வந்து விட்டதாம். குழாய் வழியாக இல்லாமல் நேரடியாக அந்தத் தண்ணீர் பாத்திரத்தில் பிடிக்கப்பட்டால் அதில் மீண்டும் உளூச் செய்ய முடியாது. குழாய் வழியாக ஓடியதன் மூலம் ஓடும் தண்ணீராக ஆகிவிட்டதால் எத்தனை தடவையும் உளூச் செய்யலாமாம்.

ஓடும் நதிகளில் அதிக அளவில் தண்ணீர் ஒடுவதால் அதில் ஊளூச் செய்யலாம் என்று அந்த மத்ஹப் அறிஞர்கள் கூறியதைக் கூட சரியாக விளங்காத அறிவிலிகள் தான் மத்ஹப் சட்ட நூல்களை எழுதி உள்ளனர். இதைப் படித்து அறியாமையைப் பெருக்கிக் கொண்டவர்கள் தான் அறிஞர்களாக கருதப்படுகிறார்கள்.

## தொழவைக்கும் இமாமுக்கு தகுதி என்ன?

தொழுகை நடத்தும் இமாமாக ஒருவரை நியமிக்க வேண்டுமானால் அவருக்கு கீழ்க்காணும் தகுதிகள் இருக்க வேண்டும் என்று ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலான துர்ருல் முக்தார் கூறுகிறது.

ثُمَّ أَصْبَحُهُمْ: أَيْ أَسْمَحُهُمْ وَجْهًا، ثُمَّ أَكْثَرُهُمْ حَسَبًا (ثُمَّ الْأَشْرَفُ نَسَبًا) زَادَ فِي الْبُرْهَانِ: ثُمَّ الْأَحْسَنُ صَوْتًا. وَفِي الْأَشْبَاهِ قَبِيلَ ثَمَنِ الْمِثْلِ: ثُمَّ الْأَحْسَنُ زَوْجَةً. ثُمَّ الْأَكْثَرُ مَالًا، ثُمَّ الْأَكْثَرُ جَاهًا (ثُمَّ الْأَنْظَفُ ثَوْبًا) ثُمَّ الْأَكْبَرُ رَأْسًا وَالْأَصْغَرُ عُضْوًا، ثُمَّ الْمُقِيمُ عَلَى الْمُسَافِرِ، ثُمَّ الْحُرُّ الْأَصْلِيُّ عَلَى الْعَتِيقِ. ثُمَّ الْمُتَيَمِّمُ عَنْ حَدَثٍ عَلَى الْمُتَيَمِّمِ عَنْ جَنَابَةٍ. الدر المختار وحاشية ابن عابدين (رد المحتار)

இமாமாகத் தேர்வு செய்யப்படுபவர் அழகிய முகம் உடையவராக இருக்க வேண்டும். பின்னர் பாரம்பர்யத்தால் சிறந்தவராக இருக்க வேண்டும். பின்னர் அழகான குரலுடையவராக இருக்க வேண்டும். பின்னர் அழகிய மனைவியை உடையவராக இருக்க வேண்டும். பின்னர் அதிகப் பணம் படைத்தவராக இருக்க வேண்டும். பின்னர் அதிகம் பதவிகள் உடையவராக இருக்க வேண்டும். பின்னர் அதிகம் தூய்மையான ஆடை அணிந்தவராக இருக்க வேண்டும். அடுத்து அவரது தலை பெரியதாகவும், உறுப்பு சிறியதாகவும் இருக்க வேண்டும்.

ஆதாரம் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்.

மத்ஹபுகளுக்கும், இஸ்லாத்துக்கும் எந்தச் சம்மந்தமும் இல்லை என்பது இந்தச் சட்டத்தில் இருந்து தெரிகிறது.

இமாம்களுக்கான இந்தத் தகுதிகள் திருக்குர்ஆனிலோ, நபிகளின் வழிகாட்டுதலிலோ காணப்படவில்லை.

பாரம்பர்யம், குலம் ஆகியவற்றால் எந்தச் சிறப்பும் கிடையாது என்ற இஸ்லாத்தின் அடிப்படையைத் தகர்ப்பதாக இது அமைந்துள்ளது.

பணம் படைத்தவராகவும், பதவிகள் உடையவராகவும் ஒருவர் இருப்பது மார்க்கத்தில் எந்தத் தகுதியையும் அதிகப்படுத்தாது. இந்த அடிப்படையையும் இது தகர்க்கிறது.

ஒருவரது மனைவி அழகானவராக இருக்க வேண்டும் என்பது இமாமாக இருக்கும் தகுதியில் ஒன்றாக எப்படி அமையும்?

அழகான மனைவி உடையவராக இருந்து இமாமாக சேர்க்கப்பட்டவரின் மனைவி இறந்து விட்டால் அல்லது விவாகரத்தாகி விட்டால் உடனே இமாமை நீக்க வேண்டுமா?

அழகு என்பது சுமார் முப்பது வயது வரை தான் இருக்கும். அப்படியானால் முப்பது வயதுக்குக் குறைவானவர் தான் இமாமாக இருக்க வேண்டுமா?

இமாமின் மனைவி அழகாக இருக்க வேண்டும் என்பதை எப்படிக் கண்டுபிடிப்பது? அவரது மனைவியை ஊரில் உள்ள அனைவரும் பார்த்தால் தான் முடிவு செய்ய முடியும். ஊரில் உள்ள எல்லாப் பெண்களுடனும் இமாமின் மனைவியை நிறுத்தினால் தான் இதை அறிய முடியும்.

தலை பெரிதாகவும், உறுப்பு சிறிதாகவும் இருப்பது எப்படி இமாமின் தகுதியாக ஆகும்?

இதைச் சட்டமாக எழுதி வைத்தவர்கள் கடுகளவு கூட மார்க்க அறிவு அற்ற அறிவிலிகளாக இருந்துள்ளனர் என்பது இதிலிருந்து தெரிகிறது.

மத்ஹபு ஆலிம்களும் இதைக் கடைப்பிடிப்பதில்லை. மத்ஹப் பள்ளிவாசல் நிர்வாகிகளும் இதைக் கடைப்பிடிப்பதில்லை. மத்ஹப் காவலர்களாலும் கடைப்பிடிக்க முடியாத கிறுக்குத்தனங்களின் தொகுப்பே மத்ஹப் என்பது இதிலிருந்து தெளிவாகின்றது. உலகில் உள்ள ஒரே ஒரு ஹனஃபி பள்ளிவாசலில் கூட இதைக் காடைப்பிடிக்க முடியவில்லை.

நபிகள் நாயகம் (ஸல்) காட்டிய இஸ்லாமிய வழிமுறைக்கும் இது எதிராக உள்ளது.

عن أبى هريرة قال قال رسول الله -صلى الله عليه وسلم- إِنَّ اللَّهَ لاَ يَنْظُرُ إِلَى صُوَرِكُمْ وَأَمْوَالِكُمْ، وَلَكِنْ يَنْظُرُ إِلَى قُلُوبِكُمْ وَأَعْمَالِكُمْ . صحيح مسلم

அல்லாஹ் உங்கள் தோற்றத்தைப் பார்க்க மாட்டான். மாறாக உங்கள் உள்ளங்களைத் தான் பார்ப்பான் என்பது நபிமொழி.

அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)

நூல் : முஸ்லிம் 5012

உடலமைப்பை அல்லாஹ் பார்க்க மாட்டான் என்ற அடிப்படைக்கு மாற்றமாக தலை பெரிதாக இருப்பதையும், உறுப்பு சிறிதாக இருப்பதையும், முகம் அழகாக இருப்பதையும், பணம் படைத்தவராக இருப்பதையும், மனைவி அழகாக இருப்பதையும் இமாமத்துக்கு உரிய தகுதிகளாகக் குறிப்பிட்டுள்ளனர்.

693 - حَدَّثَنَا مُحَمَّدُ بْنُ بَشَّارٍ، حَدَّثَنَا يَحْيَى، حَدَّثَنَا شُعْبَةُ، قَالَ: حَدَّثَنِي أَبُو التَّيَّاحِ، عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ، عَنِ النَّبِيِّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ: «اسْمَعُوا وَأَطِيعُوا وَإِنِ اسْتُعْمِلَ حَبَشِيٌّ كَأَنَّ رَأْسَهُ زَبِيبَةٌ»

உங்கள் தலைவரின் தலை, உலர்ந்த திராட்சை போல் இருந்தாலும், அவர் அபீசீனியாவைச் சேர்ந்தவராக இருந்தாலும் கட்டுப்படுங்கள் என்பது நபிமொழி

அறிவிப்பவர் : அனஸ் (ரலி)

நூல் : புகாரீ 693

தலை பெரியதாக இருப்பதை இமாமத்துக்கு அளவுகோலாக ஹனஃபி மத்ஹப் குறிப்பிடுகிறது. ஆனால் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தலை சுருங்கிப் போய் இருந்தாலும் தலைவருக்குக் கட்டுப்படுங்கள் என்கிறார்கள்.

## இந்தியாவில் ஜும்ஆ கிடையாது

ஹனஃபி மத்ஹபைச் சேர்ந்தவர்கள் இந்தியாவில் உள்ள பள்ளிவாசல்களில் ஜும்ஆத் தொழுகை நடத்துகின்றனர். ஆனால் அவர்களின் மத்ஹப் சட்டப்படி இந்தியாவில் ஜும்ஆத் தொழுகை நடத்த முடியாது.

)لَا تَصِحُّ الْجُمُعَةُ إلَّا فِي مِصْرٍ جَامِعٍ، أَوْ فِي مُصَلَّى الْمِصْرِ، وَلَا تَجُوزُ فِي الْقُرَى) لِقَوْلِهِ عَلَيْهِ الصَّلَاةُ وَالسَّلَامُ { لَا جُمُعَةَ وَلَا تَشْرِيقَ وَلَا فِطْرَ وَلَا أَضْحَى إلَّا فِي مِصْرٍ جَامِعٍ } وَالْمِصْرُ الْجَامِعُ : كُلُّ مَوْضِعٍ لَهُ أَمِيرٌ وَقَاضٍ يُنَفِّذُ الْأَحْكَامَ وَيُقِيمُ - فتح القدير

பெரு நகரங்களில் தவிர மற்ற பகுதிகளில் ஜும்ஆ செல்லாது. பெரு நகரங்களில் தவிர மற்ற ஊர்களில் ஜுமுஆவோ, நோன்புப் பெருநாளோ, ஹஜ்ஜுப் பெருநாளோ இல்லை என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியுள்ளதே இதற்கு ஆதாரம். எந்த ஊரில் இஸ்லாமியக் குற்றவியல் சட்டங்களை நிறைவேற்றும் அமீரும், நீதிபதியும் உள்ளனரோ அதுவே பெருநகரமாகும்.

ஆதாரம் : ஹனஃபி மத்ஹபின் சட்டநூலாகிய பத்ஹுல் கதீர்

(وَيُشْتَرَطُ لِصِحَّتِهَا) سَبْعَةُ أَشْيَاءَ: الْأَوَّلُ: (الْمِصْرُ وَهُوَ مَا لَا يَسَعُ أَكْبَرُ مَسَاجِدِهِ أَهْلَهُ الْمُكَلَّفِينَ بِهَا) وَعَلَيْهِ فَتْوَى أَكْثَرِ الْفُقَهَاءِ - الدر المختار وحاشية ابن عابدين (رد المحتار)

ஜும்ஆ நிறைவேறுவதற்கு ஏழு நிபந்தனைகள் வேண்டும். அதில் ஒன்று ஜும்ஆ நடக்கும் ஊர் பெருநகரமாக இருக்க வேண்டும். தொழுகை கடமையாக்கப்பட்ட அவ்வூர்வாசிகளை, அந்த ஊரிலுள்ள பெரிய பள்ளிவாசல் கொள்ளாத அளவுக்குப் பெரிதாக இருக்க வேண்டும் என்பதே பெரிய நகரம் என்பதற்கான அளவுகோலாகும்.

நூல்: ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

)وَ) الثَّانِي : )السُّلْطَانُ) وَلَوْ مُتَغَلِّبًا أَوْ امْرَأَةً فَيَجُوزُ أَمْرُهَا بِإِقَامَتِهَا لَا إقَامَتُهَا (أَوْ مَأْمُورَةً بِإِقَامَتِهَا) رد المحتار

ஜும்ஆவின் இரண்டாவது நிபந்தனை மன்னரோ, மன்னரின் உத்தரவு பெற்றவரோ அனுமதியளிக்க வேண்டும்.

நூல்: ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இப்படிக் கூறியதாக ஆதாரம் காட்டி இச்சட்டத்தைக் கூறியுள்ளனர்.

இப்படி நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறவே இல்லை. நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறாத ஒன்றை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியதாக இட்டுக்கட்டி நரகத்துக்கு முன்பதிவு செய்துள்ளனர்.

முஸ்லிம் மன்னர்கள் ஆட்சி செய்தபோது சிறிய ஊர்களில் ஜும்ஆ நடத்தி அதில் நிகழ்த்தும் உரையில் அரசைக் கண்டித்து பேசினால் ஆட்சியின் மீது மக்களுக்குக் கோபம் ஏற்படும். இதைத் தவிர்க்க சிறு ஊர்களில் ஜும்ஆ நடத்தாத வகையில் சட்டம் இயற்றித் தாருங்கள் என்று முஸ்லிம் மன்னர்களின் கோரிக்கை அடிப்படையில் தான் இந்தச் சட்டத்தை உருவாக்கினார்கள். இப்படி ஒரு ஹதீஸ் இல்லாமல் இருந்தும் நபியே சொன்னார்கள் என்று எழுதி வைத்து பெரிய நகரங்களில் ஜும்ஆ எனும் கடமையை அழித்து ஒழித்தார்கள்.

பெரிய நகரங்களில் பேசப்படுவதை அரசால் கண்காணிக்க முடியும் என்பதால் அங்கு மட்டும் தான் ஜும்ஆ நடத்த வேண்டும் என்று சட்டம் போட்டார்கள்.

இதற்காகத் தான் மன்னரோ, மன்னரின் அதிகாரம் பெற்றவரோ அனுமதித்தால் தான் ஜும்ஆ நடத்த வேண்டும் என்று எழுதி வைத்தார்கள்.

இப்போது இந்தியாவில் இஸ்லாமிய ஆட்சி இல்லாமல் இருந்தும், மன்னரின் அனுமதி இல்லாமல் இருந்தும் எப்படி ஜும்ஆ நடத்துகின்றனர்?

وَفِي مَجْمَعِ الْأَنْهُرِ: أَنَّهُ جَائِزٌ مُطْلَقًا فِي زَمَانِنَا لِأَنَّهُ وَقَعَ فِي تَارِيخِ خَمْسٍ وَأَرْبَعِينَ وَتِسْعِمِائَةٍ إذْنٌ عَامٌّ وَعَلَيْهِ الْفَتْوَى- الدر المختار وحاشية ابن عابدين

நமது காலத்தில் சிற்றூர்களிலும் ஜும்ஆ நடத்தலாம். ஏனெனில் ஹிஜ்ரி 945 ஆம் ஆண்டு எல்லா ஊர்களிலும் ஜும்ஆ நடத்த பொது அனுமதி அளிக்கப்பட்டது. அதை ஆதாரமாக வைத்து இப்போது ஜும்ஆ நடத்தலாம். இது தான் பத்வாவுக்குரிய சொல்லாகும்.

நூல்: ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

அல்லாஹ் கடமையாக்கிய ஜும்ஆவை மன்னர் உத்தரவு இல்லை என்று கூறி ஒழித்தார்கள். ஒரு மன்னர் 945 ஆம் ஆண்டு அனுமதித்த காரணத்தால் தான்

இந்தியாவில் ஜும்ஆ தொழ முடிகிறதாம். அந்த மன்னர் மட்டும் அனுமதி அளிக்காமல் இருந்தால் ஹனஃபிகள் ஜும்ஆ தொழுதிருக்க மாட்டார்கள்.

இப்போது ஒரு முஸ்லிம் மன்னர் ஆட்சிக்கு வந்து எனது அனுமதி இல்லாமல் ஜும்ஆ நடத்தக் கூடாது என்றால் அப்போதும் இவர்கள் ஜும்ஆ தொழும் பாக்கியத்தைப் பறித்து இருப்பார்கள்.

## மன்னர்களுக்கு ஜால்ரா

சங்ககாலப் புலவர்கள் எப்படி மன்னர்களுக்கு ஜால்ரா அடித்து பிழைப்பு நடத்தினார்களோ அது போல்தான் மத்ஹபு சட்ட வல்லுனர்களும் இருந்துள்ளனர் என்பதைப் பாருங்கள்!

أَمَّا مَا أُعْتِيدَ فِي زَمَانِنَا مِنْ الدُّعَاءِ لِلسَّلَاطِينِ الْعُثْمَانِيَّةِ - أَيَّدَهُمْ اللَّهُ تَعَالَى - كَسُلْطَانِ الْبَرَّيْنِ وَالْبَحْرَيْنِ وَخَادِمِ الْحَرَمَيْنِ الشَّرِيفَيْنِ فَلَا مَانِعَ مِنْهُ - الدر المختار

நமது காலத்தில் இரு உலக ராஜாக்கள், இரு கடல்களின் ராஜாக்கள், இரு புனிதத் தலங்களின் ஊழியர்கள் என்றெல்லாம் உஸ்மானியப் பேரரசர்களுக்காக (ஜும்ஆவில்) துஆச் செய்யும் வழக்கம் உள்ளது. இதற்கு எந்தத் தடையும் இல்லை.

நூல்: ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் காலத்தில் இல்லாமல் நம் காலத்தில் புதிதாக உண்டாக்கப்பட்டது என்று சொல்லிக் கொண்டே அதைச் செய்யலாம் என்று ஃபத்வா கொடுத்துள்ளனர். இவர்களின் மற்ற ஃபத்வாக்கள் எந்த இலட்சணத்தில் இருக்கும் என்று இதிலிருந்து புரிந்து கொள்ளுங்கள்!

## காசுக்காகத் தொழலாம்

மறுமை நன்மையை நாடி அல்லாஹ்வுக்காகத் தான் ஒருவர் தொழ வேண்டும். இது பாமரனுக்கும் தெரியும். இறைவனுக்காக அல்லாமல் காசுக்காகத் தொழலாம் என்று மத்ஹப் நூலில் எழுதப்பட்டதைப் பாருங்கள்!

قِيلَ لِشَخْصٍ صَلِّ الظُّهْرَ وَلَك دِينَارٌ فَصَلَّى بِهَذِهِ النِّيَّةِ يَنْبَغِي أَنْ تُجْزِئَهُ وَلَا يَسْتَحِقُّ الدِّينَارَ. - الدر المختار

நீ லுஹர் தொழு! உனக்கு ஒரு தங்கக் காசு தருகிறேன் என்று ஒரு மனிதரிடம் கூறப்படுகிறது. அவர் அந்த நோக்கத்தில் தொழுகிறார். இவரது தொழுகை செல்லும் என்றே கூற வேண்டும். ஆனால் தங்கக் காசை அவருக்குக் கொடுக்க வேண்டியதில்லை.

நூல்: ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

இஸ்லாமிய வணக்க வழிபாடுகள் யாவும் இறையச்சத்தை வளர்ப்பதற்காகக் கடமையாக்கப்பட்டவை. கவனக் குறைவாகவும், வேறு நோக்கத்திற்காகவும் செய்யப்படும் எந்த வணக்கமும் இறைவனால் ஏற்கப்படுவதில்லை. உங்கள் உள்ளங்களையே இறைவன் பார்க்கிறான் என்ற கருத்தில் ஏராளமான நபிமொழிகள் உள்ளன.

سنن النسائي 3140 - أَخْبَرَنَا عِيسَى بْنُ هِلَالٍ الْحِمْصِيُّ، قَالَ: حَدَّثَنَا مُحَمَّدُ بْنُ حِمْيَرٍ، قَالَ: حَدَّثَنَا مُعَاوِيَةُ بْنُ سَلَّامٍ، عَنْ عِكْرِمَةَ بْنِ عَمَّارٍ، عَنْ شَدَّادٍ أَبِي عَمَّارٍ، عَنْ أَبِي أُمَامَةَ الْبَاهِلِيِّ، قَالَ: جَاءَ رَجُلٌ إِلَى النَّبِيِّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، فَقَالَ: أَرَأَيْتَ رَجُلًا غَزَا يَلْتَمِسُ الْأَجْرَ وَالذِّكْرَ، مَالَهُ؟ فَقَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «لَا شَيْءَ لَهُ» فَأَعَادَهَا ثَلَاثَ مَرَّاتٍ، يَقُولُ لَهُ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «لَا شَيْءَ لَهُ» ثُمَّ قَالَ: «إِنَّ اللَّهَ لَا يَقْبَلُ مِنَ الْعَمَلِ إِلَّا مَا كَانَ لَهُ خَالِصًا، وَابْتُغِيَ بِهِ وَجْهُهُ»

இறைவனுக்காக கலப்பற்ற முறையில் செய்யப்படும் நல்லறத்தையும், அதன் மூலம் அவனது திருப்தி மட்டும் எதிர்பார்க்கப்படும் நல்லறத்தையும் தவிர வேறு எதனையும் அல்லாஹ் ஏற்க மாட்டான்.

அறிவிப்பவர் : அபூ உமாமா (ரலி)

நூல் : நஸாயீ

இவற்றையெல்லாம் அலட்சியம் செய்து விட்டு ஒரு மனிதன் தருவதாகக் கூறும் தங்கக் காசுக்காக அதையே நோக்கமாகக் கொண்டு தொழுதால் அத்தொழுகை நிறைவேறும் எனக் கூறுவதை ஏற்க முடியுமா?

காசுக்காகத் தொழலாம் எனக் கூறி நமது இறயச்சத்தைப் பாழாக்கிய இவர்கள் இமாம்களா? இந்த நூலின் அடிப்படையில் உங்களை வழிநடத்தும் உலமாக்கள் சொல் கேட்டால் உங்கள் மறுமை வாழ்வு என்னவாகும் என்று சிந்தியுங்கள்!

## மன்னர்களுக்காக சட்டத்தை மாற்றியவர்கள்

மத்ஹபின் மிக முக்கியமான இமாம்களே மத்ஹபை எந்த இலட்சணத்தில் பின்பற்றியுள்ளனர் என்று பாருங்கள்!

وَهُوَ تَأْوِيلُ مَا رُوِيَ عَنْ أَبِي يُوسُفَ وَمُحَمَّدٍ فَإِنَّهُمَا فَعَلَا ذَلِكَ لِأَنَّ هَارُونَ أَمَرَهُمَا أَنْ يُكَبِّرَا بِتَكْبِيرِ جَدِّهِ فَفَعَلَا ذَلِكَ امْتِثَالًا لَهُ لَا مَذْهَبًا وَاعْتِقَادًا - الدر المختار

وَمَا ذَكَرُوا مِنْ عَمَلِ الْعَامَّةِ بِقَوْلِ ابْنِ عَبَّاسٍ لِأَمْرِ أَوْلَادِهِ مِنْ الْخُلَفَاءِ بِهِ كَانَ فِي زَمَنِهِمْ أَمَّا فِي زَمَانِنَا فَقَدْ زَالَ فَالْعَمَلُ الْآنَ بِمَا هُوَ الْمَذْهَبُ عِنْدَنَا- رد المحتار

وحمل الشافعي جميع التكبيرات المروية عن ابن عباس على الزوائد وهذا خلاف ما حملناه عليه والمذهب عندنا قول ابن مسعود وما ذكروا من عمل العامة بقول ابن عباس لأمر أولاده من الخلفاء به كان في زمنهم أما في زماننا فقد زال فالعمل الآن بما هو المذهب عندنا كذا في شرح المنية - الدر المختار

(அபூ ஹனீஃபாவுக்கு அடுத்த இடத்தில் உள்ள) அபூ யூசுஃப், முஹம்மத் ஆகிய இருவரும் பெருநாள் தொழுகையில் மூன்று மூன்று தக்பீர்கள் சொல்லாமல் பன்னிரண்டு தக்பீர்கள் கூறி தொழ வைத்தனர். மன்னர் உத்தரவிட்ட அடிப்படையில் தான் இவர்கள் செய்தார்கள். இதை மனதார ஏற்றுக் கொண்டு செய்யவில்லை. இப்போது அது போல் மன்னரின் நிர்பந்தம் இல்லை. எனவே ஆறு தக்பீர்கள் தான் சொல்ல வேண்டும்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்.

பெருநாள் தொழுகை எனும் முக்கிய வணக்கத்தை தங்கள் நம்பிக்கைக்கப்படி செய்யாமல் மன்னர் கட்டளையிட்டதால் மாற்றமாகச் செய்துள்ளனர் என்றால் இவர்கள் வகுத்துத் தந்த சட்டங்கள் எந்த அடிப்படையில் அமைந்திருக்கும் என்று சிந்தியுங்ககள்!

## தொழுகையில் பைபிள் ஓதலாம்!

தொழுகையில் திருக்குர்ஆனைத் தான் ஓத வேண்டும். நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் பொன்மொழிகளைக் கூட ஓத முடியாது என்பது எல்லா முஸ்லிம்களும் அறிந்து வைத்துள்ள சட்டமாகும். ஹனஃபி மத்ஹபின் சட்டத்தைப் பாருங்கள்!

قَرَأَ بِالْفَارِسِيَّةِ أَوْ التَّوْرَاةِ أَوْ الْإِنْجِيلِ، إنْ قِصَّةً تُفْسِدُ، وَإِنْ ذِكْرًا لَا - الدر المختار

தொழுகையில் பாரசீக மொழியில் ஓதினாலோ, அல்லது தவ்ராத், இஞ்சீலை (பைபிளை) ஓதினாலோ அது கதைப் பகுதியாக இருந்தால் தொழுகை பாழாகிவிடும். போதனைகளாக இருந்தால் தொழுகை பாழாகாது.

நூல்: ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

திருக்குர்ஆனின் ஃபார்ஸி மொழிபெயர்ப்பை திருக்குர்ஆனுக்குப் பதிலாக ஓதலாம் என்று இதில் கூறப்பட்டுள்ளது. எந்த மொழிபெயர்ப்பாக இருந்தாலும் மூலத்தின் இடத்தை நிரப்பாது என்பது அனைவரும் அறிந்த விஷயம்.

மேலும் பைபிளில் இடம் பெற்றுள்ள போதனைகளை தொழுகையில் குர்ஆனுக்குப் பகரமாக ஓதலாம் எனவும் இதில் கூறப்பட்டுள்ளது.

அல்லாஹ்வும், அவனது தூதரும் காட்டியது தான் இஸ்லாம் என்ற இஸ்லாத்தின் அடிப்படையைச் சிறிதளவாவது அறிந்திருந்தால் அனைவரின் தொழுகைகளைப் பாழாக்கும் இப்படி அறிவீனமான சட்டத்தை எழுதி வைத்திருப்பார்களா?

இந்தச் சட்டம் எந்த வசனத்தில் இருந்து எடுக்கப்பட்டது? எந்த ஹதீஸில் இருந்து எடுக்கப்பட்டது என்பதற்கு எந்த ஆதாரத்தையும் இந்த நூலில் குறிப்பிடவில்லை. மத்ஹபுக்கு வக்காலத்து வாங்கும் உலமாக்களாலும் இதற்கான ஆதாரத்தைக் காட்ட முடியாது.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் காலத்தில் தவ்ராத்தையும், இஞ்சீலையும் கற்றறிந்த பலர் இஸ்லாத்தை ஏற்றனர். நீங்கள் தொழுகையில் தவ்ராத்தையும்,

இஞ்சீலையும் ஓதிக்கொள்ளுங்கள் என அவர்களிடம் நபிகள் நாயகம் (ஸல்) கூறினார்களா? அல்லது அவர்கள் ஓதுவதைக் கேட்டு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அங்கீகாரம் கொடுத்தார்களா? அப்படி எதுவும் இல்லை.

## மழைத் தொழுகை இல்லை

மத்ஹப் உலமாக்கள் திருக்குர்ஆனையும், ஹதீஸ்களையும் ஆய்வு செய்துதான் சட்டங்களை வகுத்துத் தந்துள்ளனர் என்று மத்ஹப்வாதிகள் பில்டப் கொடுப்பது வழக்கம்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மழைக்காக தொழுகை நடத்தியதாக ஏராளமான ஹதீஸ்கள் உள்ளன. ஆனால் ஹனஃபி மத்ஹபின் இமாம் அபூஹனீஃபா அவர்கள் மழைத் தொழுகையை மறுத்துள்ளார்கள்.

قَالَ أَبُو حَنِيفَةَ : لَيْسَ فِي الِاسْتِسْقَاءِ صَلَاةٌ مَسْنُونَةٌ فِي جَمَاعَةٍ، فَإِنْ صَلَّى النَّاسُ وُحْدَانًا جَازَ، وَإِنَّمَا الِاسْتِسْقَاءُ الدُّعَاءُ وَالِاسْتِغْفَارُ) لِقَوْلِهِ تَعَالَى فَقُلْتُ اسْتَغْفِرُوا رَبَّكُمْ إِنَّهُ كَانَ غَفَّارًا الْآيَةَ، وَرَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ اسْتَسْقَى وَلَمْ تُرْوَ عَنْهُ الصَّلَاةُ - الهداية

மழைக்காக தொழும் சுன்னத்தான எந்தத் தொழுகையும் கிடையாது. 71:10,11 வசனங்களில் பாவமன்னிப்புத் தேடுங்கள்; அல்லாஹ் மழையை இறக்குவான் என்று சொல்லப்பட்டுள்ளதால் துஆவும், பாவமன்னிப்பு தேடுவதும் மட்டுமே உண்டு. நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மழைக்காக துஆச் செய்தார்களே தவிர மழைக்காக எந்தத் தொழுகையும் தொழவில்லை என்று அபூ ஹனீஃபா கூறுகிறார்.

நூல்: ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய ஹிதாயா

நபிவழியைப் பாருங்கள்.

1012 - حَدَّثَنَا عَلِيُّ بْنُ عَبْدِ اللَّهِ، قَالَ: حَدَّثَنَا سُفْيَانُ، عَنْ عَبْدِ اللَّهِ بْنِ أَبِي بَكْرٍ، أَنَّهُ سَمِعَ عَبَّادَ بْنَ تَمِيمٍ، يُحَدِّثُ أَبَاهُ، عَنْ عَمِّهِ عَبْدِ اللَّهِ بْنِ زَيْدٍ، «أَنَّ النَّبِيَّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ خَرَجَ إِلَى المُصَلَّى فَاسْتَسْقَى فَاسْتَقْبَلَ القِبْلَةَ، وَقَلَبَ رِدَاءَهُ، وَصَلَّى رَكْعَتَيْنِ»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தொழும் திடலுக்குப் புறப்பட்டுச் சென்று மழைவேண்டிப் பிரார்த்திக்கலானார்கள். அப்போது கிப்லாத் திசையில் திரும்பி, தமது தோள் துண்டை மாற்றிப் போட்டுக் கொண்டு (மக்களுடன்) இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள்.

அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் ஸைத் (ரலி)

நூல் : புகாரி 1012, 1024, 1025

இன்னும் இது குறித்து ஏராளமான ஹதீஸ்கள் உள்ளன. அபூஹனீஃபா காலத்தில் ஹதீஸ் தொகுக்கப்படாததால் அவருக்கு இந்த ஹதீஸ்கள் தெரியாமல் இருந்துள்ளது. எனவே அந்தக் கால இமாம்களைப் பின்பற்றினால் சரியான மார்க்கம் நமக்குக் கிடைக்க வழியில்லை.

## கிரகணத் தொழுகையில் குத்பா கிடையாது

கிரகணத் தொழுகையை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கற்றுத் தந்துள்ளனர். அந்தத் தொழுகையில் குத்பா உரை நிகழ்த்தியுள்ளனர். ஆனால் ஹனஃபி மத்ஹபில் குத்பா இல்லை என்று கூறப்பட்டுள்ளது.

(وَلَيْسَ فِي الْكُسُوفِ خُطْبَةٌ) لِأَنَّهُ لَمْ يُنْقَلْ. الهداية شرح البداية

கிரகணத் தொழுகையில் குத்பா கிடையாது. ஏனென்றால் அவ்வாறு ஹதீஸ் பதிவு செய்யப்பட்டவில்லை.

நூல்: ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய ஹிதாயா

மாநபி வழியைப் பாருங்கள்!

1044 - حَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ مَسْلَمَةَ، عَنْ مَالِكٍ، عَنْ هِشَامِ بْنِ عُرْوَةَ، عَنْ أَبِيهِ، عَنْ عَائِشَةَ، أَنَّهَا قَالَتْ: خَسَفَتِ الشَّمْسُ فِي عَهْدِ رَسُولِ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، فَصَلَّى رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ بِالنَّاسِ، فَقَامَ، فَأَطَالَ القِيَامَ، ثُمَّ رَكَعَ، فَأَطَالَ الرُّكُوعَ، ثُمَّ قَامَ فَأَطَالَ القِيَامَ وَهُوَ دُونَ القِيَامِ الأَوَّلِ، ثُمَّ رَكَعَ فَأَطَالَ الرُّكُوعَ وَهُوَ دُونَ الرُّكُوعِ الأَوَّلِ، ثُمَّ سَجَدَ فَأَطَالَ السُّجُودَ، ثُمَّ فَعَلَ فِي الرَّكْعَةِ الثَّانِيَةِ مِثْلَ مَا فَعَلَ فِي الأُولَى، ثُمَّ انْصَرَفَ وَقَدْ انْجَلَتِ الشَّمْسُ، فَخَطَبَ النَّاسَ، فَحَمِدَ اللَّهَ وَأَثْنَى عَلَيْهِ، ثُمَّ قَالَ: «إِنَّ الشَّمْسَ وَالقَمَرَ آيَتَانِ مِنْ آيَاتِ اللَّهِ، لاَ يَخْسِفَانِ لِمَوْتِ أَحَدٍ وَلاَ لِحَيَاتِهِ، فَإِذَا رَأَيْتُمْ ذَلِكَ، فَادْعُوا اللَّهَ، وَكَبِّرُوا وَصَلُّوا وَتَصَدَّقُوا»

ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்தில் சூரிய கிரகணம் ஏற்பட்டது. ...... (கிரகணம் விலகி) வெளிச்சம் வந்ததும் தொழுகையை முடித்து மக்களுக்கு குத்பா உரையாற்றினார்கள். அவர்கள் (தமது உரையில்) ”சூரியனும், சந்திரனும் அல்லாஹ்வின் சான்றுகளில் இரு சான்றுகளாகும். எவரது இறப்புக்காகவும், எவரது பிறப்புக்காகவும் கிரகணம் ஏற்படுவதில்லை. அதை நீங்கள் கண்டால் அல்லாஹ்விடம் பிரார்த்தனை புரியுங்கள்; தக்பீர் சொல்லுங்கள்; தொழுங்கள்; தான தர்மம் செய்யுங்கள்" என்று கூறினார்கள்.

நூல் : புகாரி 1044

கிரகணத் தொழுகையின் போது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் குத்பா உரை நிகழ்த்தினார்கள் என்று அபூஹனீஃபா காலத்து அறிஞர்களுக்குத் தெரியாமல் இருக்கலாம். அப்போது ஹதீஸ் நூல்கள் தொகுக்கப்படவில்லை. ஆனால்

இந்தப் புத்தகத்தை எழுதியவர்களின் காலத்துக்கு பல நூறு ஆண்டுகளுக்கு முன்பே ஹதீஸ்கள் தொகுக்கப்பட்டு விட்டன. மேலும் ஷாஃபி இமாம் மேற்கண்ட ஹதீஸின் அடிப்படையில் குத்பா உண்டு எனக் கூறுகிறார் என்று ஹனஃபி மத்ஹப் நூல்களில் எடுத்துக் காட்டிவிட்டு ஆனாலும் குத்பா இல்லை என்று எழுதி வைத்துள்ளனர்.

நபியின் வழி இதுதான் என்று தெரிந்த பின்பும் எங்கள் இமாம்கள் கூறியதை மாற்ற மாட்டோம் என்று கூறுவோர் இமாம்களா? மக்களை வழிகெடுப்பவர்களா? மக்களுக்குத் தவறான மார்க்கத்தைச் சொல்வதே மத்ஹபுகளின் ஒரே நோக்கம் என்பது இதிலிருந்து தெரிகின்றது.

## மக்ரிப் தொழுகையின் முன் சுன்னத் மக்ரூஹா?

وَلَا يُتَنَفَّلُ بَعْدَ الْغُرُوبِ قَبْلَ الْفَرْضِ) ش: أي قبل صلاة المغرب. م: لِمَا فِيهِ مِنْ تَأْخِيرِ الْمَغْرِبِ ش: وتأخير المغرب مكروه فيكره ما يكون سببا للتأخير.- الهداية

சூரியன் மறைந்த பிறகு மக்ரிப் தொழுவதற்கு முன்னால் எந்த உபரியான தொழுகைகளும் நிறைவேற்றக் கூடாது. அதன் காரணமாக மஃரிப் தாமதமாகிவிடும். மக்ரிபைத் தாமதப்படுத்துவது மக்ரூஹ் ஆகும். மக்ரூஹ் ஏற்படக் காரணமாக உள்ளவையும் மக்ரூஹ் ஆகும்.

நூல்: ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய ஹிதாயா

ஹதீஸ்களைப் படிக்காமல் இஷ்டத்துக்கு இப்படி எழுதி வைத்துள்ளனர் என்பதற்கு இதுவும் ஒரு ஆதாரமாக உள்ளது.

நபி வழியைப் பாருங்கள் :

صحيح مسلم 303 - (837) وحَدَّثَنَا شَيْبَانُ بْنُ فَرُّوخَ، حَدَّثَنَا عَبْدُ الْوَارِثِ، عَنْ عَبْدِ الْعَزِيزِ وَهُوَ ابْنُ صُهَيْبٍ، عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ، قَالَ: «كُنَّا بِالْمَدِينَةِ فَإِذَا أَذَّنَ الْمُؤَذِّنُ لِصَلَاةِ الْمَغْرِبِ ابْتَدَرُوا السَّوَارِيَ، فَيَرْكَعُونَ رَكْعَتَيْنِ رَكْعَتَيْنِ، حَتَّى إِنَّ الرَّجُلَ الْغَرِيبَ لَيَدْخُلُ الْمَسْجِدَ فَيَحْسِبُ أَنَّ الصَّلَاةَ قَدْ صُلِّيَتْ مِنْ كَثْرَةِ مَنْ يُصَلِّيهِمَا»

நாங்கள் மதீனாவில் இருந்தபோது தொழுகை அறிவிப்பாளர் மக்ரிப் தொழுகைக்காக அறிவிப்புச் செய்துவிட்டால் மக்கள் (நபித்தோழர்கள்) தூண்களை நோக்கிச் சென்று (அதன் அருகில் நின்று) தலா இரண்டிரண்டு ரக்அத்கள் தொழுவார்கள். வெளியூரிலிருந்து யாரேனும் பள்ளிவாசலுக்கு வந்தால் அதிகமானவர்கள் அவ்விரு ரக்அத்கள் தொழுவதைக் கண்டு (மஃக்ரிப்) தொழுகை முடிந்துவிட்டது என எண்ணிவிடுவர்.

அறிவிப்பவர் : அனஸ் (ரலி)

நூல் : முஸ்லிம் 1521

صحيح البخاري 1183 - حَدَّثَنَا أَبُو مَعْمَرٍ، حَدَّثَنَا عَبْدُ الوَارِثِ، عَنِ الحُسَيْنِ، عَنْ عَبْدِ اللَّهِ بْنِ بُرَيْدَةَ، قَالَ: حَدَّثَنِي عَبْدُ اللَّهِ المُزَنِيُّ، عَنِ النَّبِيِّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ: «صَلُّوا قَبْلَ صَلاَةِ المَغْرِبِ»، قَالَ: «فِي الثَّالِثَةِ لِمَنْ شَاءَ كَرَاهِيَةَ أَنْ يَتَّخِذَهَا النَّاسُ سُنَّةً»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ”மக்ரிப் தொழுகைக்கு முன் தொழுங்கள்' என்று (மூன்று முறை) கூறினார்கள். மூன்றாம் முறை கூறும்போது அதை மக்கள் அவசியம் பின்பற்ற வேண்டிய ஒரு சுன்னத்தாக எடுத்துக் கொள்வார்களோ என்று அஞ்சி, ”இது விரும்பியவர்களுக்கு மட்டும் தான்" என்றார்கள்.

அறிவிப்பாளர் : அப்துல்லாஹ் பின் ஸைத் (ரலி)

நூல் : புகாரி 1183

இதே விஷயம் புகாரி 1184வது ஹதீஸிலும் இடம் பெற்றுள்ளது.

எதை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அங்கீகரித்துள்ளார்களோ அதை மக்ரூஹ் என்று சொல்வது என்றால் இது அறிவா மடமையா?

## ஒரு கை, ஒருகால் மட்டும் படுமாறு ஸஜ்தாச் செய்யலாம். தலையை மட்டும் தாழ்த்தினாலே ருகூவு செல்லும்

அல்லாஹ் தொழுகையைக் கடமையாக்கியவுடன் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் எவ்வாறு தொழ வேண்டும் என்று கற்றுத் தந்துள்ளார்கள். அந்தத் தொழுகையை மத்ஹபுக்காரர்கள் எந்த அளவுக்குப் பாழாக்கியுள்ளார்கள் என்று பாருங்கள்!

(وَمِنْهَاالرُّكُوعُ) بِحَيْثُ لَوْ مَدّ يَدَيْهِ نَالَ رُكْبَتَيْهِ - الدر المختار

இரு கைகளையும் நீட்டினால் முட்டுக்காலை அடையும் அளவுக்கு ருகூவு செய்தல் தொழுகையின் கடமைகளில் ஒன்றாகும்.

நூல்: ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

(و) الخامس: (السجود) بوضع الجبهة وإحدى اليدين وإحدى الركبتين وشيء من أطراف أصابع إحدى القدمين - اللباب في شرح الكتاب

நெற்றி, இருகைகளில் ஒரு கை, இரு முட்டுக்கால்களில் ஒரு முட்டுக்கால், இரு பாதங்களில் ஒரு பாதத்தின் விரலின் சிறு பகுதி தரையில் படும் வகையில் ஸஜ்தா செய்வது தொழுகையின் ஐந்தாவது கடமையாகும்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய அல் லுபாப்

وَإِنْ طَأْطَأَ رَأْسَهُ فِي الرُّكُوعِ قَلِيلًا وَلَمْ يَعْتَدِلْ فَظَاهِرُ الْجَوَابِ عَنْ أَبِي حَنِيفَةَ أَنَّهُ يَجُوزُ- الدر المختار

ருகூவின் போது ஒருவர் தனது தலையைத் தாழ்த்தினால் அது போதும் என்பது அபூஹனீஃபா இமாமின் கருத்தாகும்.

நூல்: ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

தலையை மட்டும் தாழ்த்தினால் ருகூவு ஆகிவிடும் என்றும், ஒரு கால், ஒரு கை ஒரு பாதம் படும் வகையில் சஜ்தா செய்தால் போதும் என்றும் கடுகளவு மார்க்க அறிவு உள்ள எவராவது கூறுவார்களா?

ஆய்வு என்ற பெயரில் உளறிக் கொட்டியவை தான் மத்ஹப் என்பது இதன் மூலம் உறுதியாகிறது.

1027 - أخبرنا قتيبة قال حدثنا الفضيل عن الأعمش عن عمارة بن عمير عن أبي معمر عن أبي مسعود قال قال رسول الله صلى الله عليه و سلم : لَا تُجْزِئُ صَلَاةٌ لَا يُقِيمُ الرَّجُلُ فيها صُلْبَهُ فِي الرُّكُوعِ وَالسُّجُودِ - سنن النسائي

ருகூவிலும், ஸுஜூதிலும் தமது முதுகுத் தண்டை (வளைவின்றி) நேராக ஆக்காதவருக்கு தொழுகை கூடாது என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர் : அபூ மஸ்வூத் அன்சாரி (ரலி)

நூல்கள் : நஸாயீ, அஹ்மத், அபூதாவூத், திர்மிதி, இப்னுமாஜா

389 - أَخْبَرَنَا الصَّلْتُ بْنُ مُحَمَّدٍ، أَخْبَرَنَا مَهْدِيٌّ، عَنْ وَاصِلٍ، عَنْ أَبِي وَائِلٍ، عَنْ حُذَيْفَةَ، رَأَى رَجُلًا لاَ يُتِمُّ رُكُوعَهُ وَلاَ سُجُودَهُ، فَلَمَّا قَضَى صَلاَتَهُ قَالَ لَهُ حُذَيْفَةُ: «مَا صَلَّيْتَ؟» قَالَ: وَأَحْسِبُهُ قَالَ: «لَوْ مُتَّ مُتَّ عَلَى غَيْرِ سُنَّةِ مُحَمَّدٍ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ»

ருகூவையும், ஸுஜூதையும் முழுமையாகச் செய்யாத ஒரு மனிதரைக் கண்ட ஹுதைஃபா (ரலி) அவர்கள், அவர் தொழுது முடித்ததும் அழைத்து, நீர் தொழவில்லை. இந்த நிலையில் நீ மரணித்தால் முஹம்மத் (ஸல்) அவர்களுக்கு அல்லாஹ் அருளிய இயற்கை மார்க்கத்தை விட்டும் விலகியவனாகவே மரணிப்பாய் எனக் கூறினார்கள்.

நூல் : புகாரி 389

எந்தத் தொழகை கூடாது என்று நபிகள் நாயகம் (ஸல்) கூறினார்களோ அந்தத் தொழுகையைக் கூடும் எனக் கூறி நமது தொழுகைகளைப் பாழாக்கும் மத்ஹபுகள் இனியும் தேவையா?

### அஸ்ஸலாம் என்று மட்டும் கூறி தொழுகையை முடிக்கலாம்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தொழுகையை முடிக்கும் போது அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மதுல்லாஹ் எனக் கூறுவார்கள் என்பதற்கு ஏராளமான சான்றுகள் உள்ளன. ஆனால் மத்ஹபுச் சட்டம் என்ன கூறுகிறது என்று பாருங்கள்!

(وَلَفْظُ السَّلَامِ) مَرَّتَيْنِ فَالثَّانِي وَاجِبٌ عَلَى الْأَصَحِّ بُرْهَانٌ، دُونَ عَلَيْكُمْ - الدر المختار

இரண்டு தடவை அஸ்ஸலாம் என்ற வார்த்தையைக் கூறுவது தொழுகையின் கடமைகளில் ஒன்றாகும். இரண்டாவது தடவை கூறுவது வாஜிபாகும். அலைக்கும் என்பது கடமையன்று.

நூல்: ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

அஸ்ஸலாம் என்று மட்டும் கூறி நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தமது தொழுகையை முடித்துள்ளார்களா? அல்லது அவ்வாறு முடிக்கலாம் என்று அனுமதித்துள்ளார்களா? நிச்சயமாக இல்லை.

மத்ஹபுகள் மார்க்கத்தைக் கேலிப் பொருளாக ஆக்குகிறது. இறைவனைப் பற்றிய அச்சமும், இறைத்தூதர் பற்றி கடுகளவு மரியாதையும் இல்லாத அறிவீனர்களால் தான் மத்ஹபுச் சட்டங்கள் எழுதப்பட்டுள்ளன என்பது இதன் மூலம் தெளிவாகிறது.

## அல்லாஹு அக்பருக்குப் பதிலாக எதையும் கூறி தொழலாம்

(وَصَحَّ شُرُوعُهُ) أَيْضًا مَعَ كَرَاهَةِ التَّحْرِيمِ (بِتَسْبِيحٍ وَتَهْلِيلٍ) وَتَحْمِيدٍ وَسَائِرِ كَلِمِ التَّعْظِيمِ الْخَالِصَةِ لَهُ تَعَالَى وَلَوْ مُشْتَرَكَةً كَرَحِيمٍ وَكَرِيمٍ فِي الْأَصَحِّ، وَخَصَّهُ الثَّانِي بِأَكْبَرُ وَكَبِيرٌ مُنَكَّرًا وَمُعَرَّفًا. زَادَ فِي الْخُلَاصَةِ وَالْكُبَارُ مُخَفَّفًا وَمُثَقَّلًا (كَمَا صَحَّ لَوْ شَرَعَ بِغَيْرِ عَرَبِيَّةٍ) أَيِّ لِسَانٍ كَانَ، وَخَصَّهُ الْبَرْدَعِيُّ بِالْفَارِسِيَّةِ لِمَزِيَّتِهَا بِحَدِيثِ «لِسَانُ أَهْلِ الْجَنَّةِ الْعَرَبِيَّةُ وَالْفَارِسِيَّةُ الدَّرِّيَّةُ» - الدر المختار

சுப்ஹானல்லாஹ் என்றோ, அல்ஹம்து லில்லாஹ் என்றோ, லாயிலாஹ இல்லல்லாஹு என்றோ, அல்லாஹ்வைக் கண்ணியப்படுத்தும் எந்தச் சொல்லைக் கொண்டோ, அல்லாஹ்வுக்கும் மனிதர்களுக்கும் பொதுவான கரீம், ரஹீம் என்றோ, அக்பர், அல்அக்பர், கபீர், அல்கபீர் என்றோ கூறி தொழுகையைத் துவக்கலாம். அரபி அல்லாத எந்த மொழியைக் கொண்டும் தொழுகையைத் துவக்கலாம். ஆனால் பர்தயீ என்பார் பார்சி மொழியில் மட்டும் தான் தொழுகையைத் துவக்கலாம். ஏனெனில் சொர்க்கவாசிகளின் பாஷை அரபியும் பார்சியும் தான் என்று நபிகள் நாயகம் (ஸல்) கூறியுள்ளனர் என்று கூறுகிறார்.

நூல்: ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

ஹனஃபி மதத்தைச் சேர்ந்தவர்கள் இஸ்லாத்துக்கு எதிராக எப்படியெல்லாம் போர் தொடுத்துள்ளனர் என்று பாருங்கள்!

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தமது அனைத்து தொழுகைகளையும் அல்லாஹு அக்பர் என்று கூறியே ஆரம்பித்துள்ளனர். என்னை எவ்வாறு தொழக் கண்டீர்களோ அவ்வாறே நீங்களும் தொழுங்கள் என்று கூறி மற்றவர்களும் அவ்வாறே ஆரம்பிக்க வேண்டும் எனக் கட்டளையிட்டுள்ளனர்.

அதை அப்பட்டமாக மீறும் வகையில் இப்படி மார்க்கத்தில் விளையாடி உள்ளனர். இதன் மூலம் இவர்கள் சொல்ல வருவது என்ன? நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் வழிகாட்டுதல் இல்லாமல் இஷ்டத்துக்கு நாங்கள் எதையும் சொல்வோம்; மக்கள் அதைக் கேட்க வேண்டும் என்ற இறுமாப்பு தவிர வேறு இல்லை.

மத்ஹபுகள் காட்டித் தரும் வழியில் தொழுதால் அந்தத் தொழுகைகள் அல்லாஹ்வால் ஏற்கப்படுமா? அமல்கள் அனைத்தையும் அழித்து நரகத்தில் கொண்டு போய் சேர்ப்பதற்காக உருவாக்கப்பட்ட மத்ஹபு தேவையா?

சொர்க்கவாசிகளின் பாஷை அரபியும், ஃபார்சியுமாகும் என்பது இட்டுக்கட்டப்பட்ட பொய்யான ஹதீஸாகும். அபூஹனீஃபா ஃபார்ஸி மொழியைத் தாய் மொழியாகக் கொண்டவர் என்பதால் இப்படி இட்டுக்கட்டியுள்ளனர்.

## பள்ளிவாசலைக் கட்டியவருக்கே பாங்கு, இகாமத் உரிமை

பள்ளிவாசல்கள் அல்லாஹ்வுக்கு உரியன. ஒருவர் தனது சொந்தச் செலவில் பள்ளிவாசலைக் கட்டினாலும் அதில் அவருக்குக் கூடுதல் உரிமை கிடையாது. இந்த அடிப்படையை ஹனஃபி மத்ஹப் எப்படி தகர்க்கிறது என்று பாருங்கள்!

وِلَايَةُ الْأَذَانِ وَالْإِقَامَةِ لِبَانِي الْمَسْجِدِ مُطْلَقًا وَكَذَا الْإِمَامَةُ لَوْ عَدْلًا- الدر المختار

பள்ளிவாயிலைக் கட்டியவருக்குத்தான் பாங்கு மற்றும் இகாமத் சொல்லும் அதிகாரம் உண்டு. இது பொதுவானதாகும். (அதாவது வேறு தகுதியைப் பார்க்கத் தேவை இல்லை.) அவர் நேர்மையாளராக இருந்தால் இமாமத் செய்யும் அதிகாரமும் அவருக்கே உரியது.

நூல்: ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

ஒருவர் பள்ளிவாயிலைக் கட்டினால் அதற்குரிய கூலி அவருக்கு அல்லாஹ்விடம் உண்டு. ஆனால் பள்ளிவாசலில் அவருக்கென்று பிரத்தியேகமான எந்த உரிமையும் கிடையாது.

ஏனெனில் பள்ளிவாயில்கள் அல்லாஹ்வுக்கே உரியன என்று அல்லாஹ் கூறுகிறான்.

திருக்குர்ஆன் 72 : 18

பள்ளிவாசல்களின் உரிமையாளன் அல்லாஹ் என்றால் அவனது அடியார்கள் அனைவருக்கும் அதில் சமமான உரிமைகள் உள்ளன. கிறித்தவ மதத்தில் வழிபாட்டுத்தலங்கள் மதகுருமார்களின் கட்டுப்பாட்டில் இருக்கும். அதன் வரவு செலவுகள் அனைத்தும் அவர்களுக்கே உரியன. இதனால்தான் பங்குத் தந்தை என்று அவர்கள் அழைக்கப்படுகிறார்கள். அதைப் பார்த்து காப்பியடித்து இந்தச் சட்டத்தை எழுதி வைத்துள்ளார்கள். இதற்கு மார்க்கத்தில் எந்த ஆதாரமும் இல்லை.

பள்ளிவாசலைக் கட்டியவருக்குக் கொடுக்கப்பட்ட இந்தச் சிறப்பு உரிமை அவரோடு முடிந்து விடாதாம். மாறாக பரம்பரை பரம்பரையாக இந்த உரிமை தொடருமாம். அதே நூல் கூறுவதைக் கேளுங்கள்.

وَلَدُ الْبَانِي وَعَشِيرَتُهُ أَوْلَى مِنْ غَيْرِهِمْ - الدر المختار

பள்ளிவாசலைக் கட்டியவரின் மகனும், அவனது குடும்பத்தினரும் மற்றவர்களை விட அதிக உரிமை படைத்தவர்கள்.

நூல்: ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

இஸ்லாத்தைப் பற்றி ஓரளவாவது அறிந்து வைத்திருக்கின்ற எந்த முஸ்லிமாவது இது மாநபி வழியில் அமைந்த சட்டம் என்று கருதமுடியுமா? மத்ஹபு அபிமானிகள் சிந்திக்கட்டும்

## தொழுகையை சலாம் சொல்லி முடிப்பதற்குப் பதிலாக காற்றுப் பிரிய விட்டு முறிக்கலாம்

மத்ஹபு அறிஞர்கள் எவ்வளவு மூடர்களாகவும், அல்லாஹ்வையும் அவனது தூதரையும் மதிக்காதவர்களாகவும் இருந்துள்ளனர் என்பதற்குப் பின்வரும் சட்டம் சிறந்த எடுத்துக்காட்டாக அமைந்துள்ளது.

(قَوْلُهُ وَمِنْهَا الْخُرُوجُ بِصُنْعِهِ إلَخْ) أَيْ بِصُنْعِ الْمُصَلِّي أَيْ فِعْلِهِ الِاخْتِيَارَ، بِأَيِّ وَجْهٍ كَانَ مِنْ قَوْلٍ أَوْ فِعْلٍ يُنَافِي الصَّلَاةَ بَعْدَ تَمَامِهَا كَمَا فِي الْبَحْرِ؛ وَذَلِكَ بِأَنْ يَبْنِيَ عَلَى صَلَاتِهِ صَلَاةً مَا فَرْضًا أَوْ نَفْلًا، أَوْ يَضْحَكُ قَهْقَهَةً، أَوْ يُحْدِثُ عَمْدًا، أَوْ يَتَكَلَّمُ، أَوْ يَذْهَبُ، أَوْ يُسَلِّمُ - رد المحتار

தொழுகையை முடிக்கும் போது (ஸலாம் கொடுப்பதற்குப் பதிலாக) தொழுகையில் செய்யக் கூடாத செயலைச் செய்தோ, அல்லது பேசக் கூடாத பேச்சைப் பேசியோ, அல்லது தனக்கு விருப்பமான செயலை ஏதாவது ஒரு விதத்தில் செய்தோ தொழுகையை விட்டு வெளியேறலாம். உடனே எழுந்து வேறு கடமையான அல்லது உபரியான தொழுகையில் ஈடுபடுதல், அல்லது அஹ்ஹஹ்ஹா என்று வெடிச்சிரிப்பு சிரித்தல், அல்லது வேண்டுமென்றே காற்று விடுவது, பேசுவது, அப்படியே எழுந்து சென்று விடுவது, யாருக்காவது ஸலாம் சொல்வது இது போன்ற செயல்களைச் செய்து தொழுகையை விட்டு வெளியேறிக் கொள்ளலாம்.

நூல்: ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

தொழுகையை எந்த அளவுக்குக் கேலிக் கூத்தாக ஆக்கியுள்ளனர் என்று பாருங்கள்.

3 - حدثنا قتيبة و هناد و محمود بن غيلان قالوا حدثنا وكيع عن سفيان و حدثنا محمد بن بشار حدثنا عبد الرحمن [ بن مهدي] حدثنا سفيان عن عبد الله بن محمد بن عقيل عن محمد بن الحنفية عن علي : عن النبي صلى الله عليه و سلم قال مِفْتَاحُ الصَّلَاةِ الطُّهُورُ، وَتَحْرِيمُهَا التَّكْبِيرُ، وَتَحْلِيلُهَا التَّسْلِيمُ - سنن الترمذي

"தொழுகையின் திறவுகோல் (உளூ எனும்) சுத்தமாகும். அதன் துவக்கம் தஹ்ரீமா (அல்லாஹு அக்பர்) ஆகும். அதன் முடிவு (அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மத்துல்லாஹ் எனும்) தஸ்லீம் ஆகும்" என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அலீ (ரலி)

நூல்கள்: திர்மிதீ 3, அபூதாவூத் 56

ஸலாம் கொடுத்துத் தான் தொழுகையை முடிக்க வேண்டும் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியிருக்க அதைக் கேலி செய்யும் வகையில் ஹாஹாஹா என்று சிரித்தும், காற்று பிரியவிட்டும் தொழுகையை முடிக்கலாம் என்று ஹனஃபி மத்ஹபு கூறுகின்றது. தொழுகையையே விளையாட்டாக ஆக்கிய மத்ஹபுகள் ஒழிக்கப்பட வேண்டாமா?

## தொழுகையில் நாயையும், பூனையையும் அழைக்கலாம்! பேசலாம்!

மத்ஹபுகளின் அறிஞர்கள் தொழுகையை எந்த அளவுக்குக் கேலிக்கூத்தாக ஆக்கியுள்ளனர் என்பதற்கு பின்வரும் சட்டமும் ஆதாரமாக அமைந்துள்ளது.

وَلَوْ اسْتَعْطَفَ كَلْبًا أَوْ هِرَّةً أَوْ سَاقَ حِمَارًا لَا تَفْسُدُ لِأَنَّهُ صَوْتٌ لَا هِجَاءَ لَهُ (عَمْدُهُ وَسَهْوُهُ قَبْلَ قُعُودِهِ قَدْرَ التَّشَهُّدِ سِيَّانِ) وَسَوَاءٌ كَانَ نَاسِيًا أَوْ نَائِمًا أَوْ جَاهِلًا أَوْ مُخْطِئًا أَوْ مُكْرَهًا - الدر المختار

நாய் அல்லது பூனையை, இச் கொட்டி அழைத்தாலோ, கழுதையை ஓட்டினாலோ தொழுகை வீணாகி விடாது. காரணம், அது எழுத்துக்கூட்டி வாசிக்க முடியாத வெறும் சப்தம் தான். அத்தஹிய்யாத் இருப்பு அளவிற்கு அவர் உட்கார்வதற்கு முன்னால் இப்படிச் செய்தாலும் தொழுகை வீணாகாது. தெரிந்து செய்தாலும் தெரியாமல் செய்தாலும் இரண்டும் சமம் தான். மறந்தோ, உறங்கிக் கொண்டோ, அறிந்தோ, தவறியோ, நிர்ப்பந்தமாகவோ எப்படிச் செய்தாலும் தொழுகை வீணாகி விடாது.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

தெரிந்து கொண்டே, வேண்டுமென்றே நாயை அழைத்தால் தொழுகை பாழாகாது என்று இவர்கள் எழுதியுள்ளதில் இருந்து அல்லாஹ்வை இவர்கள் எந்த அளவு இழிவுபடுத்துகின்றனர் என்று தெரிகிறதா? ஹஜ்ரத்துக்கு முன்னால் ஊமையாக இருக்க வேண்டும் என்று சட்டம் எழுதி வைத்துள்ள இந்தக் கயவர்கள் அல்லாஹ்வுக்கு முன்னால் அல்லாஹ்வை எந்த அளவுக்கும் கேலி செய்யலாம் என்று கருதுகின்றனர்.

ஷாஃபி மத்ஹபின் சட்டத்தைப் பாருங்கள்!

ولا تبطل الصلاة بتلفظه بالعربية بقربة توقفت على اللفظ كنذر وعتق كأن قال نذرت لزيد بألف أو أعتقت فلانا فتح المعين

ஜைத் என்பவனுக்கு ஆயிரம் கொடுப்பதாக நான் நே₹₹ர்ச்சை செய்கிறேன்; இன்னாரை அடிமைத் தளையிலிருந்து விடுதலை செய்து விட்டேன் என்பது போன்ற சொற்கள் மூலம் நேர்ச்சை, அடிமையை விடுதலை செய்தல் போன்ற காரியங்களைத் தொழுது கொண்டு இருக்கும் போது அரபு மொழியில் பேசினால் தொழுகை பாழாகாது.

நூல் : ஷாஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய ஃபத்ஹுல் முயீன்

இந்தச் சட்டங்கள் திருக்குர்ஆனின் எந்த வசனத்தில் இருந்து எடுக்கப்பட்டன? எந்த ஹதீஸில் இருந்து எடுக்கப்பட்டன என்று எடுத்துக் காட்டுவார்களா?

1227 - حَدَّثَنَا أَبُو جَعْفَرٍ مُحَمَّدُ بْنُ الصَّبَّاحِ وَأَبُو بَكْرِ بْنُ أَبِى شَيْبَةَ - وَتَقَارَبَا فِى لَفْظِ الْحَدِيثِ - قَالاَ حَدَّثَنَا إِسْمَاعِيلُ بْنُ إِبْرَاهِيمَ عَنْ حَجَّاجٍ الصَّوَّافِ عَنْ يَحْيَى بْنِ أَبِى كَثِيرٍ عَنْ هِلاَلِ بْنِ أَبِى مَيْمُونَةَ عَنْ عَطَاءِ بْنِ يَسَارٍ عَنْ مُعَاوِيَةَ بْنِ الْحَكَمِ السُّلَمِيِّ قَالَ بَيْنَا أَنَا أُصَلِّى مَعَ رَسُولِ اللَّهِ -صلى الله عليه وسلم- إِذْ عَطَسَ رَجُلٌ مِنَ الْقَوْمِ فَقُلْتُ يَرْحَمُكَ اللَّهُ. فَرَمَانِى الْقَوْمُ بِأَبْصَارِهِمْ فَقُلْتُ وَاثُكْلَ أُمِّيَاهْ مَا شَأْنُكُمْ تَنْظُرُونَ إِلَىَّ. فَجَعَلُوا يَضْرِبُونَ بِأَيْدِيهِمْ عَلَى أَفْخَاذِهِمْ فَلَمَّا رَأَيْتُهُمْ يُصَمِّتُونَنِى لَكِنِّى سَكَتُّ فَلَمَّا صَلَّى رَسُولُ اللَّهِ -صلى الله عليه وسلم- فَبِأَبِى هُوَ وَأُمِّى مَا رَأَيْتُ مُعَلِّمًا قَبْلَهُ وَلاَ بَعْدَهُ أَحْسَنَ تَعْلِيمًا مِنْهُ فَوَاللَّهِ مَا كَهَرَنِى وَلاَ ضَرَبَنِى وَلاَ شَتَمَنِى قَالَ « إِنَّ هَذِهِ الصَّلاَةَ لاَ يَصْلُحُ فِيهَا شَىْءٌ مِنْ كَلاَمِ النَّاسِ إِنَّمَا هُوَ التَّسْبِيحُ وَالتَّكْبِيرُ وَقِرَاءَةُ الْقُرْآنِ ». أَوْ كَمَا قَالَ رَسُولُ اللَّهِ -صلى الله عليه وسلم- قُلْتُ يَا رَسُولَ اللَّهِ إِنِّى حَدِيثُ عَهْدٍ بِجَاهِلِيَّةٍ وَقَدْ جَاءَ اللَّهُ بِالإِسْلاَمِ وَإِنَّ مِنَّا رِجَالاً يَأْتُونَ الْكُهَّانَ. قَالَ « فَلاَ تَأْتِهِمْ ». قَالَ وَمِنَّا رِجَالٌ يَتَطَيَّرُونَ. البخاري

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுடன் நான் தொழுது கொண்டிருந்த போது அக்கூட்டத்தில் ஒருவர் தும்மினார். உடனே நான் யர்ஹமுகல்லாஹ் (அல்லாஹ் உமக்கு அருள் செய்யட்டும்) என்று கூறினேன். அனைவரும் என்னைப் பார்வையால் துளைக்கலானார்கள். ஏன் என்னைப் பார்வையால் துளைக்கிறீர்கள் என்று நான் கேட்டேன். உடனே அவர்கள் தமது கைகளால் தமது தொடைகளில் தட்டினார்கள். என்னை மவுனமாக இருக்கச் சொல்கிறார்கள் என்று புரிந்து கொண்டு மவுனமானேன். தொழுது முடித்ததும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் என்னைக் கடிந்து கொள்ளவில்லை. என்னைத் திட்டவில்லை. தொழுகை, மக்களின் பேச்சுகளுக்கு உரியதல்ல. இறைவனைத் துதிப்பதும், பெருமைப்படுத்துவதும், குர்ஆன் ஓதுவதும் தான் தொழுகை" என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் சொன்னார்கள். அவர்களை விட சிறந்த ஆசிரியரை நான் கண்டதில்லை.

அறிவிப்பவர் : முஆவியா பின் அல்ஹகம் அஸ்ஸுலமீ (ரலி)

நூல் : முஸ்லிம் 836

தும்மல் போட்டவர் அல்ஹம்து லில்லாஹ் என்று சொன்னால் யர்ஹமுகல்லாஹ் என்று கூற வேண்டும் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் வழிகாட்டியுள்ளனர். ஆனால் தொழுகையில் இவ்வாறு கூற அனுமதி இல்லை என்றும், பேசுவதற்கு அனுமதியில்லை என்றும் இந்த ஹதீஸ் கூறுகின்றது.

ஆனால் மத்ஹபுச் சட்டமோ தொழுகையில் நாயை அழைப்பதும், கழுதையை விரட்டுவதும் கூடும் என்று கூறுகின்றது.

இறையச்சம் இல்லாமல் மார்க்கத்தில் விளையாடும் மத்ஹபுகளைப் பின்பற்றினால் மறுமையில் வெற்றிபெற முடியுமா என்று சிந்தித்துப் பாருங்கள்!

## பாங்கு சொல்லும் போது எழுந்து நிற்றல்

எந்த ஆதாரமும் இல்லாமல் நினைத்தவாறு சட்டங்களை எழுதி வைத்துள்ளனர் என்பதற்கு பின்வரும் சட்டமும் ஆதாரமாக உள்ளது.

وَيُنْدَبُ الْقِيَامُ عِنْدَ سَمَاعِ الْأَذَانِ - الدر المختار

பாங்கு சப்தத்தைக் கேட்கும் போது எழுந்து நிற்பது சிறப்பிற்குரியதாகும்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

இப்படி அல்லாஹ்வும் சொல்லவில்லை. நபிகள் நாயகம் (ஸல்) அவர்களும் கூறவில்லை.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பாங்கு சொல்லும் போது படுத்துக் கிடந்து விட்டு பாங்கு சொல்லி முடிந்தவுடன் எழுந்துள்ளார்கள் என்பதற்கு ஆதாரம் உள்ளது.

626 - حَدَّثَنَا أَبُو اليَمَانِ، قَالَ: أَخْبَرَنَا شُعَيْبٌ، عَنِ الزُّهْرِيِّ، قَالَ: أَخْبَرَنِي عُرْوَةُ بْنُ الزُّبَيْرِ، أَنَّ عَائِشَةَ، قَالَتْ: «كَانَ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ إِذَا سَكَتَ المُؤَذِّنُ بِالأُولَى مِنْ صَلاَةِ الفَجْرِ قَامَ، فَرَكَعَ رَكْعَتَيْنِ خَفِيفَتَيْنِ قَبْلَ صَلاَةِ الفَجْرِ، بَعْدَ أَنْ يَسْتَبِينَ الفَجْرُ، ثُمَّ اضْطَجَعَ عَلَى شِقِّهِ الأَيْمَنِ، حَتَّى يَأْتِيَهُ المُؤَذِّنُ لِلْإِقَامَةِ»

ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:

ஃபஜ்ரு தொழுகையின் பாங்கை முஅத்தின் சொல்லி முடித்தவுடன் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் எழுவார்கள். ஃபஜ்ரு தொழுகைக்கு முன் இரண்டு ரகஅத்கள் தொழுவார்கள்.

அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)

நூல் : புகாரீ 626

பாங்கு சொல்லி முடியும் வரை படுத்துக் கிடந்த நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பாங்கு சொல்லி முடித்தவுடன் எழுந்துள்ளதாக இந்த ஹதீஸில் சொல்லப்பட்டுள்ளது. எனவே பாங்கு சொல்லும் போது எழுந்திருக்க வேண்டியதில்லை. இந்த ஆதாரத்துக்கு மாற்றமாக மேற்கண்ட மத்ஹபுச் சட்டம் அமைந்துள்ளது.

## தொழுது கொண்டே வியாபாரம்

தொழுகை என்பது அல்லாஹ்விடம் மனிதன் ஏற்படுத்திக் கொள்ளும் உறவாகும். தொழுகையை எந்த அளவுக்கு மத்ஹபுகள் கேலிக் கூத்தாக்குகின்றன என்று பாருங்கள்!

فلو باع في صلاته بالإشارة انعقد البيع ولا تبطل صلاته وبه يلغز ويقال لنا إنسان يبيع ويشتري في صلاته عامدا عالما ولا تبطل صلاته - إعانة الطالبين ج: 4 ص: 16

ஒருவர் தொழுது கொண்டு இருக்கும் போது சைகை மூலம் விற்பனை செய்தால் அந்த வியாபாரம் செல்லும். தொழுகை பாழாகாது. தொழும்போது அறிந்த நிலையில் வேண்டுமென்றே ஒருவன் விற்கிறான்; வாங்குகிறான். அவனது தொழுகை முறியாது என்று இதைத் தான் விடுகதையாகச் சொல்கின்றனர்.

நூல் : ஷாஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய இஆனதுத் தாலிபீன்

ஒருவன் தொழும் போது இன்னொருவன் வந்து உங்கள் வீட்டை எனக்கு விற்கிறீர்களா என்று கேட்கிறான். தொழுபவன் சைகையால் தலையை அசைத்து ஆம் என்கிறான். எவ்வளவு என்று அவன் கேட்கிறான். எட்டு விரலைக் காட்டி எட்டு ரூபாய் என்கிறான். இப்படிச் செய்தால் தொழுகை செல்லுமாம். வியாபாரமும் செல்லுமாம்.

அல்லாஹ்வின் அச்சம் கடுகளவு இருப்பவன் கூட இதை ஏற்பானா? உங்கள் மறுமை வாழ்க்கையைப் பாழாக்கும் மத்ஹபுகள் தேவைதானா? சிந்தித்துப் பாருங்கள்!

## தொழுகையைக் கேலிக்கூத்தாக்கிய மத்ஹபுகள்

தொழுகை மூலம்தான் ஒரு அடியான் அல்லாஹ்வை நெருங்குகிறான். அந்தத் தொழுகையை எந்த அளவுக்கு மத்ஹபு சட்ட வல்லுனர்கள் கேலிக்கூத்தாக்கியுள்ளனர் என்று பாருங்கள்!

مَعَهُ حَجَرٌ فَرَمَى بِهِ طَائِرًا لَمْ تَفْسُدْ، . الدر المختار

தொழுபவனிடம் ஒரு கல் இருக்கிறது. அதை ஒரு பறவை மீது வீசினால் தொழுகை முறியாது.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

لَا بَأْسَ بِتَكْلِيمِ الْمُصَلِّي وَإِجَابَتِهِ بِرَأْسِهِ كَمَا لَوْ طُلِبَ مِنْهُ شَيْءٌ أَوْ أُرِيَ دِرْهَمًا وَقِيلَ أَجَيِّدٌ فَأَوْمَأَ بِنَعَمْ أَوْ لَا أَوْ قِيلَ كَمْ صَلَّيْتُمْ فَأَشَارَ بِيَدِهِ أَنَّهُمْ صَلَّوْا رَكْعَتَيْنِ الدر المختار

தொழுது கொண்டு இருப்பவர் தலை மூலம் பேசுவதும், சைகை செய்வதும் தவறல்ல. உதாரணமாக தொழுகையாளியிடம் ஒரு பொருளை யாராவது கேட்கும் போது, அல்லது ஒரு வெள்ளிக்காசைக் காட்டி இது தரமானதா என்று கேட்கும் போது ஆம் என்றோ இல்லை என்றோ தலையால் சைகை செய்தால் குற்றமில்லை. அல்லது எத்தனை ரக்அத் தொழுதுள்ளீர்கள் என்று கேட்கும் போது இரு விரல்களைக் காட்டி இரு ரக்அத்க்ள் என்று சைகை செய்தால் குற்றமில்லை. தொழுகை முறியாது.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

## கிராமங்களில் பெருநாள் தொழுகை கூடாது

பெருநாள் தொழுகை மிக முக்கியமான தொழுகையாகும். பெண்களும் கட்டாயம் கலந்து கொள்ள வேண்டும் என்று வலியுறுத்தப்பட்ட தொழுகையாகும். அதையும் இல்லாமலாக்கும் மத்ஹபின் மடமையைப் பாருங்கள்!

وَفِي الْقُنْيَةِ: صَلَاةُ الْعِيدِ فِي الْقُرَى تُكْرَهُ تَحْرِيمًا أَيْ لِأَنَّهُ اشْتِغَالٌ بِمَا لَا يَصِحُّ لِأَنَّ الْمِصْرَ شَرْطُ الصِّحَّةِ- الدر المختار

கிராமங்களில் பெருநாள் தொழுகை தொழுவது ஹராமுக்கு நெருக்கமான மக்ரூஹ் ஆகும். இது செல்லத்தகாத காரியத்தில் ஈடுபடுவதாகும். ஏனெனில்

பெருநாள் தொழுகை செல்லத்தக்கதாக ஆவதற்கு பெருநகரத்தில் நடத்தப்பட வேண்டும் என்பது நிபந்தனையாகும்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

## ஒருவரின் செயலால் மற்றவரின் தொழுகை முறியும் சட்டம்

ஷாஃபி மத்ஹபின் சட்டப்படி ஜும்ஆ தொழுகை நிறைவேற நாற்பது பேர் இருப்பது அவசியமாகும். ஆதாரமில்லாமல் இவர்களே எழுதி வைத்துள்ள இந்தச் சட்டத்தையொட்டி உருவாக்கியுள்ள துணைச் சட்டத்தைப் பாருங்கள்!

ونصها ومتى أحدث منهم واحد لم تصح جمعة الباقين وبه يلغز فيقال جمع بطلت صلاتهم بحدث غيرهم مع أنه ليس بإمام لهم ولا مؤتم بأحدهم إعانة الطالبين

நாற்பது பேர் ஜும்ஆ தொழுது கொண்டு இருக்கும் போது அவர்களில் ஒருவருக்கு மட்டும் உளூ நீங்கி விட்டால் மற்ற அனைவரின் ஜும்ஆவும் செல்லாது.

நூல் : ஷாஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய இஆனதுத் தாலிபீன்

இந்தச் சட்டத்துக்கு ஆதாரமான குர்ஆன் வசனம் எது? ஹதீஸ் எது? ஒன்றும் இல்லை.

நாற்பது பேரில் ஒருவரின் உளூ முறிந்து விட்டது என்பதை 39 பேர் எப்படி அறிந்து கொள்வார்கள்? என்ற அறிவு கூட இல்லாமல் இப்படி உளறியுள்ளனர்.

## மடமையான சட்டங்கள்

## இமாமை அறுத்து குர்பானி கொடுக்கலாம்

மத்ஹபு அறிஞர்கள் எந்த அளவு மூடர்களாக இருந்துள்ளனர் என்பதற்கும், ஆபாசமாகச் சிந்திப்பதையே ஆய்வு என்று கருதியுள்ளனர் என்பதற்கும் பின் வரும் அதிசயச் சட்டம் ஆதாரமாக அமைந்துள்ளது.

فإن نزا مأكول على مأكولة فولدت ولدا على صورة الآدمي فإنه طاهر مأكول فلو حفظ القرآن وعمل خطيبا وصلى بنا عيد الأضحى جاز أن يضحى به بعد ذلك وبه يلغز فيقال لنا خطيب صلى بنا العيد الأكبر وضحينا به - إعانة الطالبين

உண்பதற்கு அனுமதிக்கப்பட்ட ஆண் பிராணி (அதாவது ஆடு, மாடு ஒட்டகம் போன்றவை) ஒரு பெண்ணிடம் உடலுறவு கொண்டு அதன் காரணமாக அப்பெண் மனித வடிவில் ஒரு பிள்ளையைப் பெற்றால் அந்தப் பிள்ளையை அறுத்துச் சாப்பிடலாம். அந்தப் பிள்ளை குர்ஆனை மனனம் செய்து, இமாமாகப் பணியாற்றி நமக்கு ஹஜ் பெருநாள் தொழுகை நடத்தலாம். அவ்வாறு நடத்தி முடித்தவுடன் அவரையே குர்பானி கொடுக்கலாம். எங்களுக்கு ஒரு இமாம் ஹஜ் பெருநாள் தொழுகை நடத்தினார். அவரையே நாங்கள் குர்பானி கொடுத்தோம் என்ற விடுகதை இது பற்றியே சொல்லப்படுகிறது.

நூல் : ஷாஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய இஆனதுத்தாலிபீன்

ஆபாசம் பரவலாகாத காலத்திலேயே எவ்வளவு கேவலமாகக் கற்பனை செய்துள்ளனர் என்று பாருங்கள்! ஒரு பெண்ணிடம் ஒரு காளை மாடு உறவு கொண்டு மனிதப் பிள்ளையைப் பெற்றெடுக்க முடியுமா? காளை மாட்டின் தோற்றத்தில் அந்தப் பிள்ளை இருந்தால் கூட காளை மாட்டுக்குப் பிறந்தவன் என்று சொல்ல சிறிதளவாவது இடமிருக்கும். மனித வடிவிலும், மனிதனுக்கு உள்ள பகுத்தறிவுடனும் அந்தக் குழந்தை இருக்கும் போது அது மாட்டுக்குப் பிறந்த குழந்தை என்று எப்படிக் கண்டு பிடித்தார்கள்? மத்ஹபு ஆலிம்சாக்களுக்கு ஆபாசமே ஆய்வாக இருந்துள்ளது என்பது இதிலிருந்து விளங்கவில்லையா? பொது அறிவும், விஞ்ஞான அறிவும் அறவே இல்லாத மூடர்கள் எழுதிய சட்டங்களே மத்ஹப் என்பது இதிலிருந்து புலப்படவில்லையா?

## பன்றிக்குப் பிறந்த மனிதன்

இது போல் அமைந்த மற்றொரு சட்டத்தைப் பாருங்கள்!

وقال أيضا لو نزا كلب أو خنزير على آدمية فولدت آدميا كان الولد نجسا ومع ذلك هو مكلف بالصلاة وغيرها وظاهر أنه يعفى عما يضطر إلى ملامسته وأنه تجوز إمامته إذ لا إعادة عليه ودخوله المسجد حيث لا رطوبة للجماعة ونحوها - فتح المعين

ஒரு நாய், அல்லது பன்றி ஒரு பெண்ணுடன் உடலுறவு கொண்டு அதன் காரணமாக அப்பெண் மனிதப் பிள்ளையைப் பெற்றெடுத்தால் அப்பிள்ளை அசுத்தமானவனாவான். அப்படி இருந்த போதும் தொழுகை உள்ளிட்ட வணக்கங்களைச் செய்யக் கடமைப்பட்டுள்ளான். அவனைத் தொடும் நிலையைத் தவிர்க்க முடியாது என்பதால் தொடுவது மன்னிக்கப்படும். அவன் இமாமாக தொழுகை நடத்துவதும் செல்லும். அவன் மீது ஈரம் இல்லாவிட்டால் ஜமாஅதுக்காக அவன் பள்ளிவாசலுக்குள் நுழையலாம்.

நூல் : ஷாஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய ஃபத்ஹுல் முயீன்

கேடுகெட்ட இந்தப் பன்றிகள் தான் அறிஞர்களா? இதன் பிறகும் மத்ஹபைப் பின்பற்ற உங்கள் மனம் இடம் தருகிறதா?

## ஊரை அடித்து உலையில் போடலாம்

ஒரு மனிதன் தனக்கு உரிமையானதைத் தான் விற்க முடியும். உரிமையில்லாத எதனையும், எவரும் விற்க முடியாது. அறிவுடைய எந்த மனிதரும் இதை மறுக்கமட்டார். ஆனால் ஹனஃபி மத்ஹபின் சட்ட நூல் கூறுவதைப் பாருங்கள்.

وَبَيْعُ الطَّرِيقِ وَهِبَتُهُ جَائِزٌ وَبَيْعُ مَسِيلِ الْمَاءِ وَهِبَتُهُ بَاطِلٌ - الهداية

பொதுவழியை விற்பதும், அன்பளிப்பாக வழங்குவதும் செல்லும்.

நூல்: ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய ஹிதாயா

மத்ஹப் நூலில் உள்ள இந்தச் சட்டம் எந்த வசனத்தில் இருந்து, அல்லது எந்த ஹதீஸில் இருந்து எடுக்கப்பட்டது? இதற்கு எந்த ஆதாரமும் இல்லை.

மத்ஹபு நூல்களை எழுதியவர்கள் எந்த அளவுக்கு அறிவீனர்களாக இருந்துள்ளனர் என்பதற்கு இதுவும் எடுத்துக் காட்டாகும்.

## விற்கக்கூடாதவைகளைப் பிறர் மூலம் விற்கலாம்

இஸ்லாத்தில் தடை செய்யப்பட்ட வியாபாரத்தை முஸ்லிம் அல்லாதவரை வைத்து செய்யலாம் என்று ஹனஃபி மத்ஹபின் சட்ட நூல் கூறுகிறது.

وَإِذَا أَمَرَ الْمُسْلِمُ نَصْرَانِيًّا بِبَيْعِ خَمْرٍ أَوْ شِرَائِهَا فَفَعَلَ جَازَ عِنْدَ أَبِي حَنِيفَةَ - الهداية

சாராயத்தை வாங்கிவருமாறு, அல்லது விற்குமாறு ஒரு கிறித்தவரிடம் முஸ்லிம் கூறுகிறார். அந்தக் கிறித்தவரும் அதைச் செய்கிறார். இது அபூஹனீஃபா அவர்களின் கருத்துப்படி ஆகுமானதாகும்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய ஹிதாயா

மார்க்கத்தில் தடை செய்யப்பட்டவைகளை முஸ்லிமல்லாதவர்கள் மூலம் விற்று சம்பாதிக்கலாம் என்ற இந்தச் சட்டத்தை அபூஹனீஃபா அவர்கள் எந்த ஆதாரத்தில் இருந்து எடுத்தார்?

தடை செய்யப்பட்டவைகளைப் பிறரை வைத்தும் வியாபாரம் செய்து சம்பாதிப்பதும், தானே வியாபாரம் செய்வதும் சமமானவை என்பது கூட மத்ஹப்வாதிகளுக்கு விளங்கவில்லை.

விபச்சார விடுதி, சாராயக் கடை, மற்றும் சினிமா தியேட்டர்களை முஸ்லிம் அல்லாதவர்கள் மூலம் நடத்தி சம்பாதிக்கலாம் என்று மத்ஹப் ஃபத்வாவை நம்பி செயல்பட்டால் நமது மறுமை வாழ்வு என்னாகும்? என்று சிந்தித்துப் பாருங்கள்.

அல்லாஹ் தடை செய்ததற்கு எந்த அர்த்தமும் இல்லாமல் போய்விடுமே?

## மூத்திர வைத்தியம்

لَوْ رَعَفَ فَكَتَبَ الْفَاتِحَةَ بِالدَّمِ عَلَى جَبْهَتِهِ وَأَنْفِهِ جَازَ لِلِاسْتِشْفَاءِ، وَبِالْبَوْلِ أَيْضًا إنْ عَلِمَ فِيهِ شِفَاءً لَا بَأْسَ بِهِ، لَكِنْ لَمْ يُنْقَلْ وَهَذَا؛ لِأَنَّ الْحُرْمَةَ سَاقِطَةٌ عِنْدَ الِاسْتِشْفَاءِ كَحِلِّ الْخَمْرِ وَالْمَيْتَةِ لِلْعَطْشَانِ وَالْجَائِعِ. اهـ الدر المختار

ஒருவருக்கு மூக்கில் இரத்தம் வடிந்தால் அல்ஹம்து அத்தியாயத்தை மூத்திரத்தினாலும், இரத்தத்தினாலும் நிவாரணம் நாடி அவரது நெற்றியிலும், மூக்கிலும் எழுதலாம். அதில் நிவாரணம் இருப்பதாக அறியப்பட்டால் இவ்வாறு செய்யலாம். ஆயினும் அவ்வாறு நிவாரணம் கிடைக்கும் என்று தகவல் இல்லை.

நூல்: ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

அல்லாஹ்வின் வேதத்தை, வேதத்தின் உயிர் நாடியான அல்ஹம்து அத்தியாயத்தை மூத்திரத்தால் நெற்றியில் எழுதச் சொல்வது தான் நேர்வழியா? குர்ஆனை இவ்வளவு அவமதிக்கத் துணிந்தவர்கள் இமாம்களா? அல்லது ஷைத்தானின் வாரிசுகளா?

وَنَصُّ مَا فِي الْحَاوِي الْقُدْسِيِّ: إذَا سَالَ الدَّمُ مِنْ أَنْفِ إنْسَانٍ وَلَا يَنْقَطِعُ حَتَّى يُخْشَى عَلَيْهِ الْمَوْتُ وَقَدْ عُلِمَ أَنَّهُ لَوْ كَتَبَ فَاتِحَةَ الْكِتَابِ أَوْ الْإِخْلَاصَ بِذَلِكَ الدَّمِ عَلَى جَبْهَتِهِ يَنْقَطِعُ فَلَا يُرَخَّصُ لَهُ فِيهِ؛ وَقِيلَ يُرَخَّصُ كَمَا رُخِّصَ فِي شُرْبِ الْخَمْرِ لِلْعَطْشَانِ وَأَكْلِ الْمَيْتَةِ فِي الْمَخْمَصَةِ وَهُوَ الْفَتْوَى - الدر المختار

தாகமாக இருப்பவர் மதுபானம் அருந்த அனுமதிக்கப்படுவது போல் வறுமை நேரத்தில் செத்த பிணத்தைச் சாப்பிட அனுமதிக்கப்படுவது போல் இதற்கும் அனுமதியளிக்கப்படும். இதுதான் ஃபத்வா!

அதே நூல், அதே பக்கம்

இதற்கு அனுமதி வழங்குவது தான் சரியான கருத்து. இதனடிப்படையில் தான் ஃபத்வா கொடுக்க வேண்டும் என்று மிகத் தெளிவாக இந்த நூல் கூறுகின்றது.

## ஹவ்வாவுக்கு மாதவிடாய் ஏற்பட்டது ஏன்?

وَسَبَبُهُ ابْتِدَاءُ ابْتِلَاءِ اللَّهِ لِحَوَّاءَ لِأَكْلِ الشَّجَرَةِ. الدر المختار -

தடுக்கப்பட்ட மரத்திலிருந்து ஹவ்வா சாப்பிட்டது தான் பெண்களுக்கு மாதவிடாய் ஏற்பட்டதற்கான காரணம்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

இப்படி அல்லாஹ்வோ, அவனது தூதரோ கூறியிருக்கின்றார்களா?

அவ்விருவரும் அம்மரத்தைச் சுவைத்த போது அவர்களின் வெட்கத்தலங்கள் அவர்களுக்குத் தெரிந்தன.

திருக்குர்ஆன் 7:19

வெட்கத் தலங்கள் வெளியாகின என்று தான் அல்லாஹ் கூறுகின்றானே தவிர இதனால் தான் மாதவிடாய் ஏற்பட்டது என்று கூறவில்லை. மேலும் இந்த வசனத்தில் இருவருமே மரத்திலிருந்து சுவைத்தார்கள் என்று கூறப்பட்டுள்ளது.

இவர்களது இந்த அற்புதமான கண்டுபிடிப்பின் படி பார்த்தால் ஆதம் (அலை) அவர்களுக்கும் மாதவிடாய் ஏற்பட்டிருக்க வேண்டும்.

மத்ஹபு நூல்களை எழுதியவர்கள் எவ்வளவு பெரிய மடையர்கள் என்பதை இதிலிருந்து அறிய முடிகின்றது.

## கஅபா இடம் பெயர்ந்தால்?

மத்ஹபுச் சட்ட நூல்களை எழுதியவர்களுக்கு கடுகளவு கூட அறிவு இல்லை என்பதை மேலும் காணுங்கள்!

الْكَعْبَةُ إذَا رُفِعَتْ عَنْ مَكَانِهَا لِزِيَارَةِ أَصْحَابِ الْكَرَامَةِ فَفِي تِلْكَ الْحَالَةِ جَازَتْ الصَّلَاةُ إلَى أَرْضِهَا . (رد المحتار -

கராமத் உடையவர்களைச் சந்திப்பதற்காக கஅபா ஆலயம் இடம் பெயர்ந்து விட்டால் அது அமைந்திருந்த இடத்தை நோக்கித் தொழலாம்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

அல்லாஹ்வை வணங்குவதற்காக உலகில் முதன் முதலில் எழுப்பப்பட்ட ஆலயம் என்ற சிறப்பு கஅபாவுக்கு உள்ளது. ஆனால் கஅபா ஆலயத்துக்குப் பகுத்தறிவு கொடுக்கப்படவில்லை.

கஅபாவின் மீது சத்தியமாக என்று நபித்தோழர்கள் கூறியதை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கண்டித்து கஅபாவின் இறைவன் மீது ஆணையாக என்று சொல்லுமாறு வழிகாட்டியுள்ளனர்.

ஆனால் மகான்களைக் கண்டுபிடித்து அவர்களைச் சந்திப்பதற்காக கஅபா இடம் பெயரும் என்று எழுதும் அளவுக்கு இவர்களுக்கு மூளை செயலிழந்து உள்ளது.

கஃபா ஆலயம் எவரையும் சந்திப்பதற்காக இடம் பெயரும் என்று அல்லாஹ் கூறியுள்ளானா?

கஅபா எனும் புனித ஆலயத்தை மக்களுக்காக நிலையானதாக அல்லாஹ் ஆக்கியுள்ளான் என்று திருக்குர்ஆன் கூறுகிறது. (பார்க்க திருக்குர்ஆன் 5: 97)

இருக்கும் இடத்தை விட்டு கஅபா அசையாமல் நிலையானதாக இருக்கும் என்று அல்லாஹ் கூறியிருக்க அதற்கு மாற்றமாகக் கதையளந்துள்ளனர்.

கஅபா இடம் பெயரும் என்றால் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைச் சந்திப்பதற்காக அது மதீனாவிற்குச் சென்றிருக்குமே? நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஹஜ் செய்ய வந்தபோது ஊரின் எல்லையில் அவர்களை வரவேற்கச் சென்றிருக்குமே?

இப்படிப்பட்ட அறிவிலிகள் உருவாக்கிய சட்டம் நம்மை நேர்வழிப்படுத்துமா?

## பிறையைச் சுட்டிக் காட்டக்கூடாது

பிறை பார்த்து நோன்பு வைக்க வேண்டும் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கட்டளையிட்டுள்ளதை நாம் அறிவோம். தலைப்பிறை ஒளி குறைவாகவும் சிறிய அளவிலும் உள்ளதால் எளிதில் அனைவரின் கண்களுக்கும் புலப்படாது. நூற்றுக் கணக்கானோர் திரண்டு பிறை பார்த்தாலும் சிலருக்கு மட்டுமே தென்படும். யாருடைய கண்களுக்குப் பிறை தென்பட்டதோ அவர்கள் பிறை எங்கே இருக்கிறது என்று விரலால் சுட்டிக்காட்டும் போது மற்றவர்களும் அதைப் பார்க்கும் வாய்ப்பு கிடைக்கும்.

ஆனால் மறைகழன்ற மத்ஹப் சட்ட வல்லுனர்கள் வகுத்த சட்டத்தைப் பாருங்கள்!

إِذَا رَأَوْا الْهِلَالَ يُكْرَهُ أَنْ يُشِيرُوا إلَيْهِ لِأَنَّهُ مِنْ عَمَلِ الْجَاهِلِيَّةِ (الدر المختار -

பிறையைப் பார்த்தால் அதன் பக்கம் சுட்டிக் காட்டுவது வெறுக்கத்தக்கதாகும். ஏனென்றால் இது அறியாமைக்கால பழக்கவழக்கங்களில் உள்ளதாகும்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முஹ்தார்

பிறையைப் பார்த்தால் சுட்டிக்காட்டாமல் வேறு எப்படி மற்றவர்களுக்கு காட்ட முடியும்? இது அறியாமைக் காலப் பழக்கம் என்பதற்கு என்ன ஆதாரம்?

## சகுனத்தை நியாயப்படுத்தும் மத்ஹபு

இஸ்லாத்தில் சகுனத்துக்கு இடமில்லை என்பதை சிறிதளவு மார்க்க அறிவு உள்ளவர்களும் அறிந்து வைத்துள்ளனர். ஆனால் மத்ஹபு கூறுவதைப் பாருங்கள்

فَائِدَةٌ يَتَشَاءَمُ النَّاسُ فِي زَمَانِنَا مِنْ الْعِيَادَةِ فِي يَوْمِ الْأَرْبِعَاءِ، فَيَنْبَغِي تَرْكُهَا إذَا كَانَ يَحْصُلُ لِلْمَرِيضِ بِذَلِكَ ضَرَرٌ -رد المحتار -

இப்போது நம்முடைய காலத்தில் புதன் கிழமையன்று நோயாளியை நலம் விசாரிப்பதைக் கெட்ட சகுனமாக மக்கள் கருதுகின்றார்கள். புதன் கிழமையன்று நோயாளியை விசாரிக்கச் செல்வதால் அவருக்கு இதன் மூலம் இடையூறு ஏற்பட்டால் அதை விட்டு விடுவது அவசியமாகும்.

நூல்: ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முஹ்தார்

புதன் கிழமை நோய் விசாரிக்கச் சென்றால் நோய் அதிகமாகும் என்று மக்கள் கருதுவதால் மக்களின் நம்பிக்கைக்கு ஏற்ப நாமும் அதைத் தவிர்க்க வேண்டுமாம்.

سنن أبي داود 3910 - حَدَّثَنَا مُحَمَّدُ بْنُ كَثِيرٍ، أَخْبَرَنَا سُفْيَانُ، عَنْ سَلَمَةَ بْنِ كُهَيْلٍ، عَنْ عِيسَى بْنِ عَاصِمٍ، عَنْ زِرِ بْنِ حُبَيْشٍ، عَنْ عَبْدِ اللَّهِ بْنِ مَسْعُودٍ، عَنْ رَسُولِ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ: «الطِّيَرَةُ شِرْكٌ، الطِّيَرَةُ شِرْكٌ، ثَلَاثًا، وَمَا مِنَّا إِلَّا وَلَكِنَّ اللَّهَ يُذْهِبُهُ بِالتَّوَكُّلِ»

சகுனம் பார்ப்பது இணைகற்பித்தலாகும் என்று மூன்று முறை நபிகள் நாயகம் (ஸல்) கூறினார்கள்.

அறிவிப்பவர் : இப்னு மஸ்ஊது (ரலி)

நூல் : அபூதாவூத் 3411

நபிமொழிக்கு மாற்றமாக மக்களின் நம்பிக்கை இருந்தால் நபிமொழியைத் தூக்கி வீசலாம் என்று இதன் மூலம் சொல்ல வருகின்றனர். மார்க்கம் தடுத்த காரியங்களை மக்கள் செய்தால் அதைத் தடுப்பதுதான் மார்க்கக் கடமை. இவர்களோ மக்கள் தமது நம்பிக்கைப்படி என்ன செய்தாலும் அதை மறுக்கக் கூடாது என்று போதித்து முஸ்லிம்களை நரகில் தள்ளப் பார்க்கின்றனர்.

## ஆலிம்கள் மட்டும் போதைப் பொருள் சாப்பிடலாம்

மத்ஹபு நூல்களில் ஹராம், ஹலாலுக்கு இடையே மக்ரூஹ் என்ற ஒரு வகையை உருவாக்கியுள்ளனர். ஹலால் என்றால் அனுமதிக்கப்பட்டது என்று பொருள். ஹராம் என்றால் தடுக்கப்பட்டது என்று பொருள். மக்ரூஹ் என்றால் அதைச் செய்யலாம்; ஆனால் வெறுக்கத்தக்கது என்று பொருள்.

போதைப் பொருட்களான கஞ்சா, அபின் போன்றவைகளை உட்கொள்வது ஹராம் அல்ல. மக்ரூஹுடன் அனுமதிக்கப்பட்டதாகும் என்று ஷாஃபி மத்ஹப் சட்ட நூல் கூறுவதைப் பாருங்கள்!

والمراد باليسير أن لا يؤثر في العقل، ولو تخديرا وفتورا، وبالكثير ما يؤثر فيه كذلك، فيجوز تعاطي القليل مع الكراهة، ولا يحرم، ولكن يجب كتمه على العوام لئلا يتعاطوا كثيره ويعتقدوا أنه قليل، إعانة الطالبين -

கஞ்சா, அபின் ஆகியவற்றைக் கொஞ்சமாகச் சாப்பிடலாம் என்பதன் கருத்து என்னவெனில், அது அறிவில் தளர்ச்சியையோ, பாதிப்பையோ ஏற்படுத்தாத அளவாகும். அதிகம் என்பதன் கருத்து, அறிவில் பாதிப்பை ஏற்படுத்துவதாகும். எனவே மக்ரூஹுடன் கொஞ்சம் சாப்பிடுவது கூடும். இது ஹராம் ஆகாது. ஆனால் இதைப் பொதுமக்களிடம் மறைப்பது அவசியமாகும். இல்லையெனில் அவர்கள் கொஞ்சம் என்று எண்ணிக் கொண்டு அதிகம் சாப்பிட்டு விடுவார்கள்.

நூல்: ஷாஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய இஆனதுத்தாலிபீன்

போதைப் பொருளைக் கொஞ்சமாக சாப்பிடலாம்; ஆனால் பொதுமக்களிடம் இதைச் சொல்லக் கூடாது என்று இந்த நூல் கூறுகின்றது.

صحيح البخاري 6124 - حَدَّثَنِي إِسْحَاقُ، حَدَّثَنَا النَّضْرُ، أَخْبَرَنَا شُعْبَةُ، عَنْ سَعِيدِ بْنِ أَبِي بُرْدَةَ، عَنْ أَبِيهِ، عَنْ جَدِّهِ، قَالَ: لَمَّا بَعَثَهُ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ وَمُعَاذَ بْنَ جَبَلٍ، قَالَ لَهُمَا: «يَسِّرَا وَلاَ تُعَسِّرَا، وَبَشِّرَا وَلاَ تُنَفِّرَا، وَتَطَاوَعَا» قَالَ أَبُو مُوسَى: يَا رَسُولَ اللَّهِ، إِنَّا بِأَرْضٍ يُصْنَعُ فِيهَا شَرَابٌ مِنَ العَسَلِ، يُقَالُ لَهُ البِتْعُ، وَشَرَابٌ مِنَ الشَّعِيرِ، يُقَالُ لَهُ المِزْرُ؟ فَقَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «كُلُّ مُسْكِرٍ حَرَامٌ»

போதை தரக் கூடிய ஒவ்வொன்றும் தடை செய்யப்பட்டது (ஹராம்) ஆகும் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூ மூஸா அல்அஷ்அரி (ரலி)

நூல் : புகாரி 6124

سنن الترمذي 1865 - حَدَّثَنَا قُتَيْبَةُ قَالَ: حَدَّثَنَا إِسْمَاعِيلُ بْنُ جَعْفَرٍ، ح وَحَدَّثَنَا عَلِيُّ بْنُ حُجْرٍ قَالَ: أَخْبَرَنَا إِسْمَاعِيلُ بْنُ جَعْفَرٍ، عَنْ دَاوُدَ بْنِ بَكْرِ بْنِ أَبِي الفُرَاتِ، عَنْ ابْنِ المُنْكَدِرِ، عَنْ جَابِرِ بْنِ عَبْدِ اللَّهِ، أَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ: «مَا أَسْكَرَ كَثِيرُهُ فَقَلِيلُهُ حَرَامٌ»

"அதிகம் (சாப்பிட்டால்) போதை தரக் கூடிய பொருளில் குறைவானதும் தடுக்கப்பட்டது (ஹராம்) தான்" என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர் : ஜாபிர் (ரலி)

நூல்கள் : திர்மிதீ 1788, நஸாயீ 5513

ஆனால் இந்த நபிமொழிகளுக்கு மாற்றமாக போதைப் பொருளைக் கொஞ்சம் சாப்பிடலாம் என்று மத்ஹபு கூறுகின்றது. அதை மக்களுக்குச் சொல்லாமல் ஆலிம்கள் தமக்குள் வைத்துக் கொள்வது கடமை எனவும் கூறுகிறது. பொதுமக்களுக்குக் கூடுதல் குறைவு என்ற அளவு தெரியாது. ஆலிம்களுக்குத் தான் அதன் சரியான அளவு தெரியும் என்ற கருத்து இதனுள் அடங்கியுள்ளது.

## ஆலிம்களுக்காக எழுந்து நிற்பது சுன்னத்

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்காகக் கூட எழுந்து நிற்கக் கூடாது என்ற இஸ்லாமியச் சட்டத்துக்கு முரணாக மத்ஹப் நூலில் எழுதப்பட்ட சட்டத்தைப் பாருங்கள்!

ويسن القيام له كالعالم بل أولى (فتح المعين

ஆலிம்களுக்காக எழுந்து நிற்பதைப் போன்று குர்ஆனிற்காக எழுந்து நிற்பது சுன்னத்தாகும். அதைவிடச் சிறந்ததாகும்.

நூல் : ஷாஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய ஃபத்ஹுல் முயீன்

சுன்னத் என்றால் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இப்படிச் சொல்லி இருக்க வேண்டும். அப்படி எந்த ஆதாரமும் இல்லை. மற்ற மக்களை விடத் தம்மை உயர்ந்தவர்கள் என்று கருதும் வழிகெட்ட ஆலிம்களால் தான் இச்சட்டம் எழுதப்பட்டிருக்க வேண்டும்.

سنن الترمذي 2755 - حَدَّثَنَا مَحْمُودُ بْنُ غَيْلَانَ قَالَ: حَدَّثَنَا قَبِيصَةُ قَالَ: حَدَّثَنَا سُفْيَانُ، عَنْ حَبِيبِ بْنِ الشَّهِيدِ، عَنْ أَبِي مِجْلَزٍ، قَالَ: خَرَجَ مُعَاوِيَةُ، فَقَامَ عَبْدُ اللَّهِ بْنُ الزُّبَيْرِ وَابْنُ صَفْوَانَ حِينَ رَأَوْهُ. فَقَالَ: اجْلِسَا، سَمِعْتُ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ يَقُولُ: «مَنْ سَرَّهُ أَنْ يَتَمَثَّلَ لَهُ الرِّجَالُ قِيَامًا فَلْيَتَبَوَّأْ مَقْعَدَهُ مِنَ النَّارِ»

முஆவியா (ரலி) அவர்கள் வெளியே சென்ற போது அப்துல்லாஹ் பின் சுபைர் அவர்களும், இப்னு ஸஃப்வான் அவர்களும் அவரைக் கண்டு எழுந்து நின்றார்கள். அப்போது முஆவியா (ரலி) அவர்கள் நீங்கள் இருவரும் உட்காருங்கள். மனிதர்கள் தனக்காக எழுந்து நிற்பது யாருக்கு மகிழ்ச்சி தருமோ அவர்கள் தங்களது இருப்பிடத்தை நரகத்திலாக்கிக் கொள்ளட்டும் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியதாகக் குறிப்பிட்டார்கள்.

நூல் : திர்மிதி 2679

سنن الترمذي 2754 - حَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ عَبْدِ الرَّحْمَنِ قَالَ: أَخْبَرَنَا عَفَّانُ قَالَ: أَخْبَرَنَا حَمَّادُ بْنُ سَلَمَةَ، عَنْ حُمَيْدٍ، عَنْ أَنَسٍ، قَالَ: «لَمْ يَكُنْ شَخْصٌ أَحَبَّ إِلَيْهِمْ مِنْ رَسُولِ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ، وَكَانُوا إِذَا رَأَوْهُ لَمْ يَقُومُوا لِمَا يَعْلَمُونَ مِنْ كَرَاهِيَتِهِ لِذَلِكَ»

நபியவர்களை விடவும் நபித்தோழர்களுக்கு மிக நேசத்திற்குரியவர்கள் யாரும் இருக்கவில்லை. நபியவர்கள் எழுந்து நிற்பதை வெறுக்கிறார்கள் என்ற

காரணத்தினால் நபித்தோழர்கள் யாரும் நபியவர்களைக் காணும் போது எழுந்து நிற்கமாட்டார்கள் .

அறிவிப்பவர் : அனஸ் (ரலி)

நூல் : திர்மிதி 2678

நபிகள் நாயகத்துக்கும், மத்ஹபு சட்டங்களுக்கும் எந்தச் சம்மந்தமும் இல்லை என்பது இதிலிருந்து தெரிகிறதா?

## கத்னா விருந்து சுன்னத்

மத்ஹபு அறிஞர்கள் என்ற பெயரில் மக்களை வழிகெடுத்த மூடர்கள் மார்க்கத்தில் இல்லாத விஷயங்களை எல்லாம் சுன்னத் என்று கூறி மக்களிடம் பரப்பினார்கள். அதற்கான மற்றொரு ஆதாரம் இதோ:

وتسن إجابة سائر الولائم كما عمل للختان فتح المعين

கத்னா விருந்துக்காக செல்வது போல் ஏனைய விருந்துகளை ஏற்பது சுன்னத்தாகும்.

நூல் : ஷாஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய ஃபத்ஹுல் முயீன்

கத்னா செய்வதற்காக நபியவர்கள் எந்த விருந்தையும் ஏற்படுத்தவில்லை. அப்படி செய்யப்பட்ட விருந்தில் கலந்து கொண்டதாக எந்த ஆதாரமும் இல்லை.

அப்படி இருக்கும் போது இது எப்படி சுன்னத்தாகும்?

நபிகள் சம்மந்தப்பட்ட சின்னஞ்சிறு விஷயமும் கூட ஹதீஸ் நூல்களில் பதிவு செய்யப்பட்டுள்ளது. ஆனால் அவர்களின் பேரப்பிள்ளைகளான ஹஸன், ஹுஸைன் ஆகியோருக்கு எந்த ஆண்டு, எந்த மாதம், எந்தத் தேதியில் கத்னா செய்யப்பட்டது என்று எந்த ஹதீஸ் நூலிலும் பதிவு செய்யப்படவில்லை.

பேரப்பிள்ளைகளின் கத்னாவுக்காக நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் விருந்து அளித்து இருந்தால் அது பதிவு செய்யப்பட்டு இருக்கும்.

தமது பேரப்பிள்ளைகளுக்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் எப்போது கத்னா செய்தார்கள் என்ற விபரம் ஒருவருக்கும் தெரியவில்லை என்றால் எந்த அளவுக்கு இரகசியமாக கத்னா செய்து வைத்துள்ளார்கள் என்பது தெரிகிறது.

இந்த நபிவழிக்கு முரணாக கத்னா விருந்து சுன்னத் என்று பத்வா கொடுத்து மக்களுக்குச் சிரமத்தை ஏற்படுத்தி தமது வயிறை வளர்த்துள்ளனர் என்பது தெரிகிறதா?

## மொழிவெறியையும், இனவெறியையும் ஆதரிக்கும் மத்ஹபுகள்

குலத்தாலோ, மொழியாலோ, இனத்தாலோ எந்த மனிதனும் உயர்ந்தவன் அல்லன் என்பது இஸ்லாத்தின் கோட்பாடாகும். இந்தக் கோட்பாட்டுக்கு எதிராக மத்ஹபுகள் நடத்தும் யுத்தத்தைப் பாருங்கள்!

) الْعَجَمِيُّ لَا يَكُونُ كُفُؤًا لِلْعَرَبِيَّةِ وَلَوْ) كَانَ الْعَجَمِيُّ) عَالِمًا) أَوْ سُلْطَانًا (وَهُوَ الْأَصَحُّ الدر المختار -

அரபி அல்லாதவன் அரபிப் பெண்ணுக்கு தகுதியானவனாக மாட்டான். அரபி அல்லாதவன் ஆலிமாக இருந்தாலும் அரசனாக இருந்தாலும் சரியே. இதுவே மிகச் சரியானதாகும்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

فَمِثْلُ حَائِكٍ غَيْرُ كُفْءٍ لِمِثْلِ خَيَّاطٍ وَلَا خَيَّاطٍ لِبَزَّازٍ وَتَاجِرٍ وَلَا هُمَا لِعَالِمٍ وَقَاضٍ- الدر المختار

நெசவுத்தொழில் செய்பவன் தையல் தொழில் செய்பவனுக்கு நிகரில்லை. தையல் தொழில் செய்பவன் வியாபாரிக்கு நிகரில்லை. இவ்விருவரும் ஆலிமுக்கும், காஜிக்கும் நிகரில்லை.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

فَلَا يَكُونُ نَحْوُ الْعَطَّارِ الْعَجَمِيِّ الْجَاهِلِ كُفُؤًا لِنَحْوِ حَلَّاقٍ عَرَبِيٍّ أَوْ عَالِمٍ - الدر المختار

அரபி அல்லாதவனும், பாமரனுமாகிய அத்தர் வியாபாரி அரபியனான நாவிதனுக்கு நிகராக மாட்டான்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

فَالْعَالِمُ الْعَجَمِيُّ يَكُونُ كُفُؤًا لِلْجَاهِلِ الْعَرَبِيِّ - الدر المختار

அரபியன் அல்லாத மார்க்க அறிஞன், அரபியனான பாமரனுக்கு நிகராவான்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

ونصه ولا يكافىء العربية والقرشية والهاشمية إلا مثلها لشرف العرب على غيرهم ولأن الناس تفتخر بأنسابهما أتم فخار إعانة الطالبين

அரபியருக்கும், குரைஷிகளுக்கும், ஹாஷிமிகளுக்கும் அவர்களைப் போன்றவர்களே சமமாவார்கள். இதற்குக் காரணம் அரபுகள் மற்றவர்களைவிட

சிறந்தவர்கள் என்பதாகும். மேலும் மேற்கண்ட இனத்து மக்கள் தம் இனம் குறித்து அதிகம் பெருமை கொள்வார்கள் என்பது மற்றொரு காரணம்.

நூல் : ஷாஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய இஆனதுத் தாலிபீன்

இதோ நபியவர்களின் கூற்றைப் பாருங்கள்.

مسند أحمد ط 23489 - حَدَّثَنَا إِسْمَاعِيلُ، حَدَّثَنَا سَعِيدٌ الْجُرَيْرِيُّ، عَنْ أَبِي نَضْرَةَ، حَدَّثَنِي مَنْ سَمِعَ خُطْبَةَ رَسُولِ اللهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ فِي وَسَطِ أَيَّامِ التَّشْرِيقِ فَقَالَ: " يَا أَيُّهَا النَّاسُ، أَلَا إِنَّ رَبَّكُمْ وَاحِدٌ، وَإِنَّ أَبَاكُمْ وَاحِدٌ، أَلَا لَا فَضْلَ لِعَرَبِيٍّ عَلَى عَجَمِيٍّ (1) ، وَلَا لِعَجَمِيٍّ عَلَى عَرَبِيٍّ، وَلَا أَحْمَرَ (2) عَلَى أَسْوَدَ، وَلَا أَسْوَدَ عَلَى أَحْمَرَ، إِلَّا بِالتَّقْوَى أَبَلَّغْتُ "، قَالُوا: بَلَّغَ رَسُولُ اللهِ، ثُمَّ قَالَ: " أَيُّ يَوْمٍ هَذَا؟ "، قَالُوا: يَوْمٌ حَرَامٌ، ثُمَّ قَالَ: " أَيُّ شَهْرٍ هَذَا؟ "، قَالُوا: شَهْرٌ حَرَامٌ، قَالَ: ثُمَّ قَالَ: " أَيُّ بَلَدٍ هَذَا؟ "، قَالُوا بَلَدٌ حَرَامٌ، قَالَ: " فَإِنَّ اللهَ قَدْ حَرَّمَ بَيْنَكُمْ دِمَاءَكُمْ وَأَمْوَالَكُمْ " - قَالَ: وَلَا أَدْرِي قَالَ: أَوْ أَعْرَاضَكُمْ، أَمْ لَا - كَحُرْمَةِ يَوْمِكُمْ هَذَا، فِي شَهْرِكُمْ هَذَا، فِي بَلَدِكُمْ هَذَا أَبَلَّغْتُ "، قَالُوا: بَلَّغَ رَسُولُ اللهِ، قَالَ: " لِيُبَلِّغِ الشَّاهِدُ الْغَائِبَ "

மக்களே உங்கள் இரட்கன் ஒருவனே. உங்கள் தந்தையும் ஒருவரே. ஒரு அரபிக்கு அரபி அல்லாதவனை விட எந்தச் சிறப்பும் இல்லை. ஒரு அரபி அல்லாதவனுக்கு அரபியை விட எந்தச் சிறப்பும் இல்லை. ஒரு சிகப்பு நிறத்தவனுக்கு கருப்பு நிறத்தவனை விட எந்தச் சிறப்பும் இல்லை. ஒரு கருப்பு நிறத்தவனுக்கு சிகப்பு நிறத்தவனை விட எந்தச் சிறப்பும் இல்லை. இறையச்சத்தைக் கொண்டே தவிர. நான் உங்களுக்கு எடுத்துச் சொல்லி விட்டேனா? என நபியவர்கள் கேட்டார்கள். அதற்கவர்கள் ; அல்லாஹ்வின் தூதர் எங்களுக்கு எடுத்துரைத்து விட்டார் எனக் கூறினார்கள்

நூல் : அஹ்மத் 22391

இனம், மொழி, நிறம் அனைத்தையும் காலில் போட்டு மிதித்த மார்க்கத்தில்தான் இது போன்று இனவெறியை திணிக்க மத்ஹபுகள் முயற்சித்துள்ளன.

صحيح البخاري 5090 - حَدَّثَنَا مُسَدَّدٌ، حَدَّثَنَا يَحْيَى، عَنْ عُبَيْدِ اللَّهِ، قَالَ: حَدَّثَنِي سَعِيدُ بْنُ أَبِي سَعِيدٍ، عَنْ أَبِيهِ، عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ، عَنِ النَّبِيِّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ: " تُنْكَحُ المَرْأَةُ لِأَرْبَعٍ: لِمَالِهَا وَلِحَسَبِهَا وَجَمَالِهَا وَلِدِينِهَا، فَاظْفَرْ بِذَاتِ الدِّينِ، تَرِبَتْ يَدَاكَ "

ஒரு பெண் அவளுடைய செல்வத்திற்காகவும், பாரம்பரியத்திற்காகவும், அழகிற்காகவும், மார்க்கப் பற்றிற்காகவும் திருமணம் முடிக்கப்படுகிறாள். நீ மார்க்கமுடைய பெண்ணைத் திருமணம் செய்து வெற்றியடைந்து கொள். அல்லது

உன்னுடைய இரு கரங்களும் மண்ணாகட்டும் என நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி)

நூல் : புகாரி 5090

## அல்லாஹ்வுக்கு இணையாக மத்ஹபு இமாம்கள்

இஸ்லாத்தின் எந்த வணக்கத்தையும் அல்லாஹ்வுக்கு அஞ்சியே செய்ய வேண்டும். இது பாமரனும் அறிந்துள்ள உண்மையாகும். இந்த உண்மை கூட மத்ஹபு சட்ட வல்லுனர்களுக்குத் தெரியவில்லை என்பதைப் பாருங்கள்!

وَقَالَ بَعْضُهُمْ: أَخَاف إنْ تَرَكْت الْفَاتِحَةَ أَنْ يُعَاتِبَنِي الشَّافِعِيُّ أَوْ قَرَأْتها يُعَاتِبُنِي أَبُو حَنِيفَةَ فَاخْتَرْت الْإِمَامَةَ - الدر المختار

தொழுகையில் அல்ஹம்து அத்தியாயத்தை நான் ஓதாவிட்டால் ஷாஃபி இமாம் என்னைத் தண்டித்து விடுவார் என்றும், அதை ஓதினால் அபூஹனீஃபா என்னைத் தண்டித்து விடுவார் என்றும் அஞ்சியதால் நான் இமாமத் பணியைத் தேர்வு செய்து கொண்டேன் என்று சில அறிஞர்கள் கூறியுள்ளனர்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

ஷாஃபி இமாம் கருத்துப்படி இமாமைப் பின்பற்றித் தொழுபவர் ஒவ்வொரு ரக்அத்திலும் அல்ஹம்து அத்தியாயம் ஓத வேண்டும். அபூஹனீஃபா இமாம் கருத்துப்படி இமாமைப் பின்பற்றுபவர் ஓதக் கூடாது. ஆனால் இரு இமாம்களின் கருத்துப்படியும் இமாமாக இருப்பவர் அல்ஹம்து ஓத வேண்டும்.

இருவரிடமிருந்தும் தப்பிக்க என்ன வழி இமாமாத் பணியில் சேர்ந்தால் தப்பித்துக் கொள்ளலாமாம்.

இது எவ்வளவு பாரதூரமான விஷயம் என்று பாருங்கள்!

ஷாஃபி இமாமோ, ஹனஃபி இமாமோ மறுமையில் தண்டிக்கும் அதிகாரம் பெற்றுள்ளார்களா? அந்த இமாம்கள் மறுமையில் தேறுவார்களா என்பதே சந்தேகமானது. அப்படியே அவர்கள் மறுமை விசாரணையில் தேறினாலும் தனது மத்ஹபைப் பின்பற்றாதாவர்களைத் தண்டிக்கும் அதிகாரம் அவர்களுக்கு இருக்காது.

மற்றவர்களைத் தண்டிக்கும் அதிகாரம் அல்லாஹ்வைத் தவிர யாருக்காவது உள்ளது என்று ஒருவன் நம்பினால் அவன் காஃபிராகி விடுவான். இதுபற்றிக் கூட

கவலைப்படாமல் வாயில் வந்தவாறு உளறியுள்ளனர் என்பது இதிலிருந்து தெரிகிறது.

## வேதத்தின் பெயரால் கட்டுக்கதைகள்

மத்ஹபு அறிஞர்களுக்கும், அறிவுக்கும் எந்தச் சம்மந்தமும் இல்லை என்பதை நிரூபிக்கும் மற்றொரு ஆதாரத்தைக் காணுங்கள்!

وروي أن الكتب المنزلة من السماء إلى الأرض مائة وأربعة أنزل على شيث ستون وعلى إبراهيم ثلاثون وعلى موسى قبل التوراة عشرة والتوراة والإنجيل والزبور والفرقان

வானத்திலிருந்து இறக்கப்பட்ட வேதங்களின் எண்ணிக்கை விபரம்: ஷீத் நபிக்கு அறுபது வேதங்களும், இப்ராஹீம் நபிக்கு முப்பது வேதங்களும், மூஸா நபிக்கு தவ்ராத் அருளப்படுவதற்கு முன்னர் பத்து வேதங்களும், தவ்ராத், இஞ்சீல், ஸபூர், குர்ஆன் ஆகிய நூற்றி நான்காகும்.

நூல் : ஷாஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய இஆனதுத் தாலிபீன்

அல்லாஹ் அருளிய வேதங்கள் நூற்றி நான்கு என்பதற்கு ஆதாரம் என்ன? ஷீத் நபிக்கு அறுபது வேதங்கள் என்பதற்கும், இப்ராஹீம் நபிக்கு முப்பது வேதங்கள் என்பதற்கும், மூஸா நபிக்கு பத்து வேதங்கள் என்பதற்கும் என்ன ஆதாரம்? ஒரு ஆதாரமும் இல்லை.

மார்க்கத்தில் பெயரால் துணிந்து இட்டுக்கட்டும் பொய்யர்களால் தான் மத்ஹபுகள் உருவாக்கப்பட்டுள்ளன என்பதற்கு இது தெளிவான ஆதாரமாகும்.

## எல்லாமே புள்ளியில் அடக்கம்

وأن معاني كل الكتب مجموعة في القرآن ومعانيه مجموعة في الفاتحة ولهذا سميت أم الكتاب ومعانيها مجموعة في البسملة ومعانيها مجموعة في بائها ومعناها بي كان ما كان وبي يكون ما يكون ووجه بعضهم كون معاني البسملة في الباء بأن المقصود من كل العلوم وصول العبد إلى الرب هذه الباء لما فيها من معنى الإلصاق تلصق العبد بجناب الرب زاد بعضهم ومعاني الباء في نقطتها ومعناها أنا نقطة الوجود المستمد مني كل موجود - إعانة الطالبين

மேற்கண்ட நூற்றி நான்கு வேதங்களின் கருத்துக்கள் குர்ஆனில் அடக்கமாகும். குர்ஆனின் கருத்துக்கள் அனைத்தும் ஃபாத்திஹா அத்தியாயத்தில் அடக்கமாகும். ஃபாத்திஹா அத்தியாயத்தின் கருத்துக்கள் பிஸ்மில்லாஹ்வில் அடக்கமாகும். பிஸ்மில்லாஹ்வின் கருத்துக்கள் அனைத்தும் அதன் முதல் எழுத்தாகிய பா வில் அடக்கமாகும். பா என்ற எழுத்தின் கருத்துக்கள் அதன் கீழே உள்ள புள்ளியில் அடக்கமாகும்.

நூல் : ஷாஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய இஆனதுத் தாலிபீன்

மத்ஹபு சட்ட வல்லுனர்கள் எந்த அளவு கூறுகெட்டவர்களாக இருந்துள்ளனர் என்று இதிலிருந்து தெரிகிறது. ஒரு புள்ளி வைத்தால் நூற்றி நான்கு வேதங்களையும் எழுதியதாக ஆகுமா? கத்தம் ஓதப் போகும் போது பா என்று ஏப்பம் விட்டு முழுக்குர்ஆனையும் ஓதி விட்டோம் என்று சொன்னாலும் சொல்வார்கள்.

நாம் சொல்வதற்கு ஏதாவது அர்த்தம் இருக்கிறதா? பா என்பது எத்தனையோ வாக்கியங்களுக்கு முதல் எழுத்தாக இருக்குமே? புள்ளி என்பது எராளமான எழுத்துக்களில் இருக்குமே? என்று கூட சிந்திக்காமல் எழுதி வைத்துள்ளனர்.

## ஒரு மஹ்ரமான பெண் கணக்கில்லாத பெண்களுடன் கலந்து விட்டால்..

மத்ஹபு சட்ட வல்லுனர்களின் மேதாவிலாசத்துக்கு எடுத்துக் காட்டாக அமைந்த மற்றொரு சட்டத்தைப் பாருங்கள்!

فرع لو اختلطت محرمة بنسوة غير محصورات بأن يعسر عدهن على الآحاد كألف امرأة نكح من شاء منهن إلى أن تبقى واحدة على الأرجح وإن قدر ولو بسهولة على متيقنة الحل أو بمحصورات كعشرين بل مائة لم ينكح منهن شيئا - فتح المعين

எண்ணுவதற்கு சிரமமான பெண்களுடன் உதாரணமாக ஆயிரம் பெண்களுடன் ஒருவனது மஹ்ரமான (மணமுடிக்கத் தடை செய்யப்பட்ட) பெண் கலந்து விட்டால் அவர்களில் கடைசியாக ஒருத்தி மிஞ்சும் வரை யாரை வேண்டுமானாலும் திருமணம் செய்யலாம். திருமணம் செய்ய ஹலாலான பெண்ணை எளிதாக கண்டு பிடிக்க முடிந்தாலும் சரியே. இருபது முதல் நூறு வரை உள்ள பெண்களுடன் ஒரு மஹ்ரம் கலந்து விட்டால் அவர்களில் ஒருவரையும் திருமணம் செய்யக் கூடாது.

நூல் : ஷாஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய ஃபத்ஹுல் முயீன்

இந்த அற்புதமான ஆய்வுக்கு என்ன அடிப்படை? இதற்கான ஆதாரம் என்ன? ஒரு ஆதாரமும் இல்லை.

## மனைவியுடன் பயணம் கூடாது

பெண்கள் தனியாகப் பயணம் செய்யக் கூடாது என்றும், அன்னிய ஆண்களுடன் சேர்ந்து பயணம் செய்யக் கூடாது என்றும் கூறினால் அதற்கு ஆதாரம் உண்டு.

மனைவியை அழைத்துக் கொண்டு கணவன் பயணம் செய்யக் கூடாது மத்ஹபு சட்டம் கூறுகிறது.

مَطْلَبٌ فِي السَّفَرِ بِالزَّوْجَةِ - وَفِي الْوَلْوَالِجِيَّةِ أَنَّ جَوَابَ ظَاهِرِ الرِّوَايَةِ كَانَ فِي زَمَانِهِمْ، أَمَّا فِي زَمَانِنَا فَلَا، وَقَالَ: فَجَعَلَهُ مِنْ بَابِ اخْتِلَافِ الْحُكْمِ بِاخْتِلَافِ الْعَصْرِ وَالزَّمَانِ كَمَا قَالُوا فِي مَسْأَلَةِ الِاسْتِئْجَارِ عَلَى الطَّاعَاتِ - حاشية ابن عابدين

மனைவியுடன் கணவன் பயணம் செய்யலாம் என்ற சட்டம் அந்தக் காலத்துக்கான சட்டமாகும். இந்தக் காலத்தில் மனைவியுடன் கணவன் பயணம் செல்லக் கூடாது. காலத்துக்கு ஏற்ப சட்டமும் மாறும் என்பதில் இதுவும் அடக்கமாகும்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

தனியாகவோ, அன்னிய ஆணுடனோ பெண்கள் பயணம் செய்யக் கூடாது என்று சட்டமிருக்க இச்சட்டத்தின் மூலம் பெண்கள் பயணம் செல்வது அறவே கூடாது என்று சொல்லப்படுகிறது. அறிவீனமான இச்சட்டத்தை மார்க்க அறிவு உள்ளவர்கள் இயற்றி இருக்க முடியுமா? ஆதாரமில்லாமல் காலத்துக்கு ஏற்ப நபிவழியை நிராகரிக்கலாம் என்று கூறும் மத்ஹபுகள் மறுமையில் வெற்றி தருமா?

## அல்லாஹ்வின் தன்மையை அடையும் மந்திரம்

அல்லாஹ்வுக்கு இணை கற்பிக்கவும் மத்ஹபுகள் சளைக்கவில்லை என்பதைப் பாருங்கள்!

ولهذا الاسم خواص وعجائب منها أن من داوم عليه في خلوة مجردا بأن يقول الله الله حتى يغلب عليه منه حال شاهد عجائب الملكوت ويقول بإذن الله للشيء كن فيكون إعانة الطالبين

அல்லாஹ் என்ற பெயருக்கு தனித்தன்மைகளும், அதிசயங்களும் உள்ளன. ஒருவன் தனிமையில் அல்லாஹ் அல்லாஹ் என்று சொல்லிக் கொண்டே இருந்து தன்னை மிகைக்கும் நிலையை அடைந்தால் அல்லாஹ்வின் ஆட்சியுடைய

அதிசயங்களை அவர் கண்கூடாகக் காண்பார். மேலும் அவர் ஆகு என்று கூறினால் உடனே ஆகிவிடும் என்பதும் இப்பெயரின் சிறப்புக்களில் ஒன்றாகும்.

நூல் : ஷாஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய இஆனதுத் தாலிபீன்

ஆகு எனக் கூறி ஆக்கும் வல்லமை அல்லாஹ்வுக்கு மட்டுமே உள்ள தனித்தன்மையாகும். அவ்லியாக்கள் இது போன்ற நிலையை அடைய முடியும் என்ற நச்சுக் கருத்தை மார்க்கம் என்ற பெயரில் எழுதி வைத்துள்ளனர்.

இப்படி அல்லாஹ் கூறி இருக்கின்றானா? அல்லது அல்லாஹ்வின் தூதர் கூறி இருக்கிறார்களா? நிச்சயமாக இல்லை.

இப்படி எழுதி வைத்தவன் முஸ்லிமாக இருக்க முடியுமா? அல்லாஹ்வுக்கு இணைகற்பித்த முஷ்ரிக்குகள் தான் மத்ஹபு சட்ட அறிஞர்கள் என்பது இதிலிருந்து தெரிகிறதா?

## பைத்தியத்துக்கு வைத்தியம்

மத்ஹபு சட்ட வல்லுனர்கள் எந்த அளவுக்கு கடைந்தெடுத்த மூடர்களாக உள்ளனர் என்பதை மேலும் பாருங்கள்!

ومن خواص الرحيم أن من كتبه في ورقة إحدى وعشرين مرة وعلقها على صاحب الصداع برىء بإذن الله تعالى ومن كتبه في كف مصروع وذكره في أذنه سبع مرات أفاق من ساعته بإذن الله تعالى إعانة الطالبين

ஒரு காகிதத்தில் 21 தடவை ரஹீம் என்று எழுதி தலைவலி உள்ளவனின் கழுத்தில் தொங்க விட்டால் அல்லாஹ்வின் அனுமதியுடன் அவன் குணமடைவான். பைத்தியம் பிடித்தவனின் உள்ளங்கையில் ஏழு தடவை ரஹீம் என்று எழுதி, அவனது காதில் ஏழுதடவை ரஹீம் என்று கூறினால் அந்த வினாடியில் பைத்தியம் தெளிந்து விடும்.

நூல் : ஷாஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய இஆனதுத் தாலிபீன்

இப்படி அல்லாஹ்வும் சொல்லவில்லை. நபிகள் நாயகம் (ஸல்) அவர்களும் சொல்லவில்லை. இப்படி எந்தப் பைத்தியக்காரனும் குணமடையவுமில்லை.

அப்படி இருந்தும் கொஞ்சம் கூட கூச்சமில்லாமல் இந்தப் பொய்யைச் சட்டமாக எழுதி வைத்துள்ளனர்.

## முஹம்மத் எனப் பெயர் வைத்தல்

ஒவ்வொரு மனிதனும் அவனது செயல்களுக்குத் தான் கூலி கொடுக்கப்படுவான் என்பது இஸ்லாத்தின் அடிப்படை. ஒருவன் சிறந்த பெயர் சூட்டப்படுகிறான் என்றால் பெயர் சூட்டப்பட்டவனுக்கு இதில் எந்தச் சம்மந்தமும் இல்லை. எத்தனையோ கயவர்களுக்கு அழகான பெயர்கள் அமைந்திருப்பதை நாம் காண்கிறோம். ஆனால் மத்ஹபு சட்ட நூல்கள் கூறுவதைப் பாருங்கள்!

قوله بل جاء في التسمية بمحمد فضائل عليه منهما قوله عليه السلام إذا كان يوم القيامة نادى مناد ألا ليقم من اسمه محمد فليدخل الجنة كرامة لنبيه محمد صلى الله عليه وسلم إعانة الطالبين

யாருடைய பெயர் முஹம்மத் என்று உள்ளதோ அவர்கள் எழுந்து சொர்க்கம் செல்லட்டும் என்று கியாமத் நாளில் ஒரு அழைப்பாளரான வானவர் அறிவிப்பார் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள். இது நபிகள் நாயகத்துக்கு அல்லாஹ் அளிக்கும் கண்ணியமாகும்.

நூல் : ஷாஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய இஆனதுத் தாலிபீன்

நபியின் மீது பொய் சொன்ன இந்தக் கயவர்கள் மீது அல்லாஹ்வின் சாபம் இறங்கட்டும். இப்படி நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறவேயில்லை. இது போன்ற மடமைகளுக்கு இஸ்லாத்தில் அறவே இடமில்லை என்பதை அறியாத மூடர்கள் தான் மத்ஹபு சட்டங்களை எழுதியுள்ளனர் என்று தெரிகிறதா?

وينبغي إكرام من اسمه محمد تعظيما له صلى الله عليه وسلم إعانة الطالبين

ஒருவருக்கு முஹம்மத் என்று பெயர் இருந்தால் அவரைக் கண்ணியப்படுத்துவது அவசியமாகும்.

நூல் : ஷாஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய இஆனதுத் தாலிபீன்.

இவர்கள் வீட்டில் முஹம்மத் என்ற பெயர் உள்ளவன் திருடினால் மாலை போட்டு மரியாதை செய்வார்களா? சரியான மடையர்களாக மத்ஹபு சட்ட வல்லுனர்கள் இருந்துள்ளனர்.

# நபிகள் நாயகத்தின் முடிகளுக்கு கணக்கு காட்டும் மூடர்கள்

இவர்களின் வடிகட்டிய முட்டாள்தனத்தை மேலும் பாருங்கள்

واعلم أن لحيته عليه الصلاة والسلام كانت عظيمة ولا يقال كثيفة لما فيه من البشاعة وكان عدد شعرها مائة ألف وأربعة وعشرين ألفا بعدد الأنبياء كما في رواية إعانة الطالبين

மொத்த நபிமார்களின் எண்ணிக்கைக்கு ஏற்ப நபிகள் நாயகத்தின் தலைமுடிகளின் எண்ணிக்கை ஒரு லட்சத்து இருபத்தி நான்காயிரமாகும்.

நூல் ஷாஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய இஆனதுத் தாலிபீன்

ஒருவரின் தலை முடிகளின் எண்ணிக்கையைக் கூறுவது சாத்தியமா? முடிகள் விழுந்தும் முளைத்துக் கொண்டும் இருக்கும். எல்லா நேரத்திலும் குறிப்பிட்ட எண்ணிக்கையில் முடிகள் இருக்காது. ஒருவரது தலையில் உள்ள முடிகளை அவருக்கு நெருக்கமான மனைவியால் கூட சொல்ல முடியாது.

இதை எழுதியவனிடம் போய் உன் மனைவியின் தலையில் உள்ள முடிகள் இத்தனை என்று சொல்ல முடியுமா என்று கேட்டால் முடியாது என்று பதிலளிப்பான்.

துணிந்து பொய் சொல்லும் கூட்டத்தினர் தான் மத்ஹபு சட்ட வல்லுனர்கள் என்பது இதிலிருந்தும் தெரிகிறது.

### எழுதி கரைத்துக் குடிக்கலாம்

தட்டு எழுதிக் கொடுத்தல், மாவிலையில் எழுதிக் கொடுத்தல் போன்ற வழிகளில் ஆலிம்சாக்கள் மக்களை ஏமாற்றி சம்பாதிக்கும் வாசலைத் திறந்து விட்டுள்ளதும் ஆலிம்சாக்கள் மத்ஹபுகளைக் கட்டி அழுவ காரணமாகும்.

وعبارة المغني ولا يكره كتب شيء من القرآن في إناء ليسقى ماؤه للشفاء خلافا لما وقع لابن عبد السلام في فتاويه من التحريم إعانة الطالبين

குர்ஆனின் சில பகுதிகளை ஒரு தட்டில் எழுதி நோய் நிவாரணத்துக்காக கரைத்துக் குடிப்பது வெறுக்கத்தக்கதல்ல.

நூல் : ஷாஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய இஆனதுத் தாலிபீன்

## மலக்குக்களை ஜனாசாவாக்கிய மத்ஹப்கள்

ஜின் என்ற இனத்தினர் நெருப்பால் படைக்கப்பட்டவர்கள் என்பதையும், வானவர்கள் ஒளியால் படைக்கப்பட்டவர்கள் என்பதையும் நாம் அறிவோம்.

மத்ஹபு சட்ட வல்லுனர்கள் மலக்குகளையும், ஜின்களையும் எப்படி நம்புகிறார்கள் என்று பாருங்கள்!

قال ش ق: وكالبشر الجن والملك، بناء على الصحيح من أن كلا منهما أجسام لها ميتة، فهي طاهرة. أما الجن: فلتكليفهم بشرعنا، وإن لم نعلم تفصيل أحكامهم. وأما الملائكة: فلشرفهم. إعانة الطالبين

மனிதனின் செத்த உடலைப் போல் ஜின்கள் மற்றும் வானவர்களின் செத்த உடல்களும் தூய்மையானவையாகும். இதற்குக் காரணம் ஜின்கள் மனிதர்களைப் போலவே பகுத்தறிவு வழங்கப்பட்டுள்ளனர். வானவர்கள் சிறந்த படைப்பாக உள்ளனர் என்பதுதான் இதற்குக் காரணம்.

நூல் : ஷாஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய இஆனதுத் தாலிபீன்

வானவர்களுக்கும், ஜின்களுக்கும் மனிதனைப் போன்ற உடல் கிடையாது என்ற அறிவு இல்லாமல் கற்பனையாகச் சட்டம் எழுதி வைத்துள்ளனர். இத்தகைய மூடர்கள் எழுதிய மத்ஹப் சட்டம் நமக்குத் தேவையா?

## தையல் கூலியை ஆட்டையைப் போடுதல்

மத்ஹபு சட்ட வல்லுனர்களின் கூர்மையான சிந்தனையைப் பாருங்கள்!

فلو دفع ثوبه إلى خياط ليخيط أو قصار ليقصره أو صباغ ليصبغه ففعل ولم يذكر أحدهما أجرة ولا ما يفهمها فلا أجرة له لأنه متبرع فتح المعين

தைப்பதற்காக ஒரு துணியை தையல் தொழிலாளியிடம் ஒருவன் கொடுக்கிறான். அல்லது சலவை செய்வதற்காக சலவைத் தொழிலாளியிடம் கொடுக்கிறான். சாயம் ஏற்றுவதற்காக சாயத் தொழிலாளியிடம் கொடுக்கிறான்.

ஆனால் இருவரில் யாரும் கூலி பேசவில்லை. அப்படியானால் அதைச் செய்து தந்தபின் அதற்கு கூலி கொடுக்க வேண்டியதில்லை. இலவசமாகச் செய்து கொடுத்தான் என்று எடுத்துக் கொள்ள வேண்டும்.

நூல் : ஷாஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய ஃபத்ஹுல் முயீன்

## குடும்பப் பிரச்சனைகள்

## நான்கு வருட கர்ப்பம்

ஒரு குழந்தை கர்ப்ப அறையில் எவ்வளவு நாட்கள் இருக்கும் என்பதில் பல சட்டப்பிரச்சனைகள் உள்ளன. கணவனுடன் தொடர்பு இல்லாத பெண் பெற்றெடுக்கும் குழந்தை அந்தக் கணவனுடைய குழந்தை என்று முடிவு செய்வது முக்கியமான பிரச்சனையாகும்.

இது குறித்து மத்ஹப் சட்டப்புலிகள் கூறுவது என்ன என்பதைப் பாருங்கள்!

فَصْلٌ فِي ثُبُوتِ النَّسَبِ (أَكْثَرُ مُدَّةِ الْحَمْلِ سَنَتَانِ) لِخَبَرِ عَائِشَةَ - رَضِيَ اللَّهُ عَنْهَا - كَمَا مَرَّ فِي الرَّضَاعِ، وَعِنْدَ الْأَئِمَّةِ الثَّلَاثَةِ أَرْبَعُ سِنِينَ (وَأَقَلُّهَا سِتَّةُ أَشْهُرٍ) إجْمَاعًا (فَيَثْبُتُ نَسَبُ) وَلَدِ (مُعْتَدَّةِ الرَّجْعِيِّ) وَلَوْ بِالْأَشْهُرِ لِإِيَاسِهَا - الدر المختار

அதிகபட்ச கர்ப்பகாலம் இரு வருடங்களாகும். ஆயிஷா (ரலி) அறிவிக்கும் ஹதீஸ் தான் இதற்கு ஆதாரம். (ஹனஃபி அல்லாத) மற்ற மூன்று இமாம்களிடம் அதிகபட்ச கர்ப்பகாலம் நான்கு வருடங்களாகும். குறைந்தபட்ச கர்ப்பகாலம் ஆறுமாதங்கள் என்பது ஏகோபித்த முடிவாகும். மீட்டிக் கொள்ளத்தக்க முறையில் தலாக் விடப்பட்டவளின் குழந்தை அவளது கணவனின் குழந்தையாக ஆகும்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலான துர்ருல் முக்தார்

وَأما أَكثر مُدَّة الْحمل فقد اخْتلفُوا فِيهِ فَقَالَ عُلَمَائِنَا رَضِي الله عَنْهُمَا سنتَانِ وَقَالَ الشَّافِعِي أَربع سِنِين وَهُوَ الْمَشْهُور من مَذْهَب مَالك وَأحمد وَقَالَ عبَادَة بن العواد خمس سِنِين وَقَالَ الزُّهْرِيّ سِتّ سِنِين وَقَالَ ربيعَة بن أبي عبد الرَّحْمَن سبع سِنِين وَقَالَ أَبُو عُبَيْدَة لَا حد لأقصاه - لسان الحكام

அதிகபட்ச கர்ப்பகாலம் எவ்வளவு என்பதில் அறிஞர்களிடையே கருத்து வேறுபாடு உள்ளது. நமது ஹனஃபி உலமாக்கள் இரு வருடங்கள் எனக் கூறுகின்றனர். ஷாஃபி, நான்கு வருடங்கள் என்கிறார். மாலிக், அஹ்மத் ஆகியோரின் கருத்தும் இதுதான். உபாதா என்பார் ஐந்து வருடங்கள் என்கிறார். ஸுஹ்ரி என்பார் ஆறு வருடங்கள்

என்கிறார். ரபீஆ என்பார் ஏழு வருடங்கள் என்கிறார். அபூ உபைதா என்பார் இதற்கு எல்லை எதுவும் இல்லை என்கிறார்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய லிஸானுல் ஹுக்காம்

أَكْثَرُ مُدَّةِ الْحَمْلِ أَرْبَعُ سِنِينَ، فَلَوْ أَبَانَهَا بِخُلْعٍ أَوْ بِالثَّلَاثِ، أَوْ بِفَسْخٍ، أَوْ لِعَانٍ وَلَمْ يَنْفِ الْحَمْلَ، فَوَلَدَتْ لِأَرْبَعِ سِنِينَ فَأَقَلَّ مِنْ وَقْتِ الْفِرَاقِ، لَحِقَ الْوَلَدُ بِالزَّوْجِ - روضة الطالبين وعمدة المفتين

அதிகபட்ச கர்ப்ப காலம் நான்கு வருடங்கள் ஆகும். குலா, அல்லது முத்தலாக், அல்லது மனமுறிவு, அல்லது லிஆன் மூலம் இருவரும் பிரிந்த பின்னர் நான்கு வருடத்துக்குள் அவள் குழந்தை பெற்றால் அது அவன் குழந்தை தான்.

நூல் : ஷாஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய ரவ்ளா

இந்தச் சட்டங்கள் சொல்வது என்ன? கணவன் வெளிநாடு சென்று நான்காவது வருடத்தில் அவள் குழந்தை பெற்றாலும் அவன் தான் அக்குழந்தைக்குத் தந்தையாவான். ஹனஃபி மத்ஹப் சட்டப்படி இரு வருடங்களில் அவள் குழந்தை பெற்றால் அவன் தான் அக்குழந்தையின் தந்தையாவானாம்.

அவன் ஊரில் இருந்த போது உருவான குழந்தை நான்கு ஆண்டுகள் ஆனபின் பிறந்துள்ளது என்று எடுத்துக் கொள்ள வேண்டுமாம்.

மனைவியை விவாகரத்து செய்த பின் அவள் மறுமணம் செய்யாமல் நான்காம் வருடம் பிள்ளை பெற்றாலும் அது அவனது குழந்தையாகத் தான் கருதப்படுமாம். மூன்று மத்ஹப்களின் சட்டம் இதுதான்.

மத்ஹபை ஆதரிப்பவர்கள் தமது குடும்பத்தில் இவ்வாறு நேர்ந்தால் இதனடிப்படையில் தான் முடிவு செய்வார்களா? ஒரு குழந்தை கர்ப்ப அறையில் நான்கு வருடங்கள் வரை இருக்க முடியும் என்பதற்கு குர்ஆனிலிருந்தோ, ஹதீஸிலிருந்தோ ஆதாரம் காட்ட முடியுமா?

குழந்தையின் கர்ப்பகாலம் அதிகபட்சம் 278 நாட்கள் தான். இதில் விதிவிலக்காக பத்துநாள் வரை அதிகமாகக் கூடும். வருடக் கணக்கிலெல்லாம் அதிகமாகாது என்பது சந்தேகமின்றி நிரூபிக்கப்பட்ட உண்மை.

இவ்வாறு நிரூபிக்கப்படாத காலத்தில் கூட குழந்தையின் கர்ப்ப காலம் பத்து மாதம் என்பதை அனுபவ அறிவின் மூலம் மக்கள் அறிந்து வைத்திருந்தனர்.

அவனை அவனது தாய் சிரமத்துடன் சுமந்தாள். சிரமத்துடன் ஈன்றெடுத்தாள். அவனைச் சுமந்ததும் பால் குடியை மறக்கச் செய்ததும் முப்பது மாதங்களாகும்!

திருக்குர்ஆன் 46:15

கர்ப்பகாலமும், பால்குடி மறக்கச் செய்யும் காலமும் சேர்த்து முப்பது மாதங்கள் என்று திருக்குர்ஆன் கூறும்போது கர்ப்பகாலம் மட்டும் 48 மாதங்கள் என்பது குர்ஆனுக்கு முரணில்லையா?

மார்க்க அறிவும், பொதுஅறிவும் இல்லாதவர்கள் தான் மத்ஹப் சட்டங்களை எழுதியவர்கள் என்பது இதிலிருந்து மேலும் தெளிவாகின்றது.

## கணவனின் பொருளை எடுக்கும் மனைவிக்கு தண்டனை

ولا بِمالِ صَدقةٍ وهو مُستحقٌ لها و لاَ بِمَالِ مَصَالِحَ والأظهَر قَطْعُ أحَدِ الزَّوجين بالآخرِ (فتح المعين -

சதகாவின் பொருளைத் திருடினால் அவனது கை வெட்டப்படாது. ஏனெனில் அதில் அவனுக்கும் உரிமை உண்டு. பொது நன்மைக்குரிய பொருளைத் திருடினால் எப்போதும் கைவெட்டப்படாது. தெளிவான சொல்லின் பிரகாரம் கணவன் மனைவியரில் ஒருவர் பொருளை மற்றவர் திருடினால் அவரது கை வெட்டப்பட வேண்டும்.

நூல் : ஷாஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய ஃபத்ஹுல் முயீன்

பொதுப் பணத்தையும் ஸதகாப் பொருட்களையும் திருடுவதற்கு மத்ஹபுகள் தூண்டுவதைப் பாருங்கள். இவ்வாறு தீர்ப்பு வழங்க எந்த ஒரு ஹதீஸையும் இந்நூல் முன்வைக்கவில்லை. அதே நேரத்தில் எந்த விஷயத்தில் திருட்டுக் குற்றமாக நபியவர்கள் கருதவில்லையோ அந்த விஷயத்திற்கு கைவெட்டச் சொல்வதையும் பாருங்கள்.

அந்த நபிவழி இதோ

صحيح البخاري 5364 - حَدَّثَنَا مُحَمَّدُ بْنُ المُثَنَّى، حَدَّثَنَا يَحْيَى، عَنْ هِشَامٍ، قَالَ: أَخْبَرَنِي أَبِي، عَنْ عَائِشَةَ، أَنَّ هِنْدَ بِنْتَ عُتْبَةَ، قَالَتْ: يَا رَسُولَ اللَّهِ إِنَّ أَبَا سُفْيَانَ رَجُلٌ شَحِيحٌ وَلَيْسَ يُعْطِينِي مَا يَكْفِينِي وَوَلَدِي، إِلَّا مَا أَخَذْتُ مِنْهُ وَهُوَ لاَ يَعْلَمُ، فَقَالَ: «خُذِي مَا يَكْفِيكِ [ص:66] وَوَلَدَكِ، بِالْمَعْرُوفِ»

ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் :

ஹிந்த் பின்த் உத்பா (ரலி) அவர்கள் வந்து ”அல்லாஹ்வின் தூதரே! (என் கணவர்) அபூ சுஃப்யான் கருமியான ஒரு மனிதர்; எனக்கும், என் குழந்தைகளுக்கும் போதுமானதை அவர் தருவதில்லை. நான் அவரிடமிருந்து அவருக்குத் தெரியாமல் எடுத்துக் கொண்டதைத் தவிர" என்று கூறினார். அப்போது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் "உனக்கும் உன் குழந்தைக்கும் போதுமானதை நியாயமான அளவுக்கு நீ எடுத்துக்கொள்! “என்று சொன்னார்கள்.

நூல் : புகாரி 5364

## கணவன் காணாமல் போய் விட்டால்?

மத்ஹபுகள் பெண்களுக்கு இழைத்து வரும் அநீதிகளில் மிக முக்கியமானது, காணாமல் போன கணவன் பற்றிய சட்டமாகும். மனைவியை விட்டு விட்டு கணவன் காணாமல் போய் விட்டான். அவனது மனைவி என்ன செய்வாள்? இதோ ஹனஃபி மத்ஹப் கூறுவதைக் கேளுங்கள்.

ولا يفرّق بينه وبينها وحكم بموته بعد تسعين سنةً وتعتدّ امرأته وورث منه حينئذٍ لا قبله- كنز الدقائق

இருவரது திருமண உறவைப் பிரிக்கக் கூடாது, தொன்னூறு ஆண்டுகள் கழிந்த பின் அவன் இறந்து விட்டதாக முடிவு செய்யப்படும். அவனது மனைவி அப்போது இத்தா இருப்பாள். அப்போதுதான் கணவனின் சொத்துக்கும் வாரிசாக ஆவாள்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய கன்ஸுத்தகாயிக்

قَالَ رَحِمَهُ اللَّهُ (وَحُكِمَ بِمَوْتِهِ بَعْدَ تِسْعِينَ سَنَةً) لِأَنَّ الْغَالِبَ لَا يَعِيشُ أَكْثَرَ مِنْ ذَلِكَ وَهُوَ مَرْوِيٌّ عَنْ أَبِي بَكْرٍ الْفَضْلِيِّ وَعَنْ أَبِي بَكْرٍ مُحَمَّدِ بْنِ حَامِدٍ وَأَبُو يُوسُفَ قَدَّرَهُ بِمِائَةِ سَنَةٍ وَرَوَى الْحَسَنُ عَنْ أَبِي حَنِيفَةَ أَنَّهُ قَدَّرَهُ بِمِائَةٍ وَعِشْرِينَ سَنَةً- تبيين الحقائق شرح كنز الدقائق

தொண்ணூறு ஆண்டுகளுக்கு மேல் பெரும்பாலும் ஒருவன் வாழ முடியாது. இது அபூபக்ர் அல்ஃப்ழ்லீ, முஹம்மத் பின் ஹாமித் ஆகியோரின் கருத்தாகும். அபூயூசுஃப்

அவர்கள் நூறு ஆண்டுகள் என்று கணித்துள்ளார்கள். அபூஹனீஃபா அவர்கள் நூற்றி இருபது ஆண்டுகள் என்று கணித்துள்ளார்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய தப்யீனுல் ஹகாயிக்

30 வயதிலுள்ள ஒருவனுக்கு 20 வயது மனைவி இருக்கின்றாள் என்று வைத்துக் கொள்வோம். இப்போது கணவன் காணாமல் போய் விட்டால் அந்தப் பெண் 60 வருடங்கள், அல்லது 90 வருடங்கள் காத்திருக்க வேண்டும். அதன் பிறகு அவள் வேறு திருமணம் செய்து கொள்ள வேண்டும். இது நடைமுறைக்குச் சாத்தியமா? பெண் என்பவள் எந்த உணர்ச்சியும் அற்ற மரக் கட்டையா? அவளுக்கென்று எந்த ஆசையும் கிடையாதா? என்ன அர்த்தத்தில் இவர்கள் இவ்வாறு உளறியுள்ளார்கள்?

சொத்துக்களைப் பிரிப்பதற்கு அவன் மரணிப்பது உறுதியாவதற்காக இப்படி காலக்கெடு நிர்ணயித்தால் அதில் ஓரளவு நியாயம் உள்ளது. ஆனால் பெண் என்பவள் உணர்வு இல்லாத மரக்கட்டையாக இருந்தால் 90 ஆண்டுகள் காத்திருக்கலாம். உணர்வுள்ள பெண்கள் வழிதவறி விடாமல் இருப்பதற்காக வாழ்க்கைத் துணை தேவை இல்லையா?

அவன் சாகவில்லை; உயிருடன் இருக்கிறான் என்றே முடிவு செய்து தொலைக்கட்டும். அவனது மனைவிக்கு இல்லற சுகம் தேவை என்பதைக் கருத்தில் கொண்டு திருமணத்தை முறிப்பதற்கான காரணமாக இதை அறிவிப்பதற்கும் மூளை வரண்டு விட்டதா?

காணாமல் போனவனின் மனைவி 90 வருடம் வரை திருமணம் செய்யக் கூடாது என்று அல்லாஹ் கூறவில்லை. நபிகள் நாயகம் (ஸல்) அவர்களும் கூறவில்லை.

மனைவியை விட்டு விட்டுக் கணவன் காணாமல் போய்விட்டால் குர்ஆன், ஹதீஸ் அடிப்படையில் என்ன தான் தீர்வு?

மனைவியை விட்டு கணவன் காணாமல் போய் விட்டால் அந்த மனைவி எவ்வளவு நாட்கள் மறுமணம் செய்யாமல் காத்திருக்க வேண்டும் என்பது குறித்து நேரடியாக குர்ஆன் ஹதீஸில் எந்த ஆதாரமும் இல்லை.

இது குறித்து நேரடியாக குர்ஆன் ஹதீஸில் எந்த ஆதாரமும் இல்லை என்பதற்காக இடிந்து போகத் தேவையில்லை. ஏனெனில் கணவன் காணாமல் போகாது இருக்கும் போதே திருமண பந்தத்தில் இருந்து மனைவி விடுபட முடியும். அதே உரிமையைப் பயன்படுத்தி கணவன் காணாமல் போகும் போதும் திருமண பந்தத்தில் இருந்து விடுபடலாம்.

صحيح البخاري 5273 - حَدَّثَنَا أَزْهَرُ بْنُ جَمِيلٍ، حَدَّثَنَا عَبْدُ الوَهَّابِ الثَّقَفِيُّ، حَدَّثَنَا خَالِدٌ، عَنْ عِكْرِمَةَ، عَنِ ابْنِ عَبَّاسٍ، أَنَّ امْرَأَةَ ثَابِتِ بْنِ قَيْسٍ أَتَتِ النَّبِيَّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، فَقَالَتْ: يَا رَسُولَ اللَّهِ، ثَابِتُ بْنُ قَيْسٍ، مَا أَعْتِبُ عَلَيْهِ فِي خُلُقٍ وَلاَ دِينٍ، وَلَكِنِّي أَكْرَهُ الكُفْرَ فِي الإِسْلاَمِ، فَقَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «أَتَرُدِّينَ عَلَيْهِ حَدِيقَتَهُ؟» قَالَتْ: نَعَمْ، قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «اقْبَلِ الحَدِيقَةَ وَطَلِّقْهَا تَطْلِيقَةً»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் காலத்தில் ஸாபித் பின் கைஸ் (ரலி)யின் மனைவி நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! எனது கணவரின் நன்னடத்தையையோ நற்குணத்தையோ நான் குறை கூற மாட்டேன். ஆனாலும் இஸ்லாத்தில் இருந்து கொண்டே (இறைவனுக்கு) மாறு செய்வதை நான் வெறுக்கிறேன்" என்றார். (அதாவது கணவர் நல்லவராக இருந்தாலும் அவருடன் இணைந்து வாழத் தனக்கு விருப்பமில்லை என்கிறார்) உடனே நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் "அப்படியானால் (அவர் உனக்கு மஹராக வழங்கிய) அவரது தோட்டத்தைத் திருப்பிக் கொடுத்து விடுகிறாயா?" என்று கேட்டார்கள். அதற்கு அப்பெண்மணி "சரி" என்றார். உடனே நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அவரது கணவரிடம் "தோட்டத்தைப் பெற்றுக் கொண்டு அவளை ஒரேயடியாக விடுவித்து விடு" என்றார்கள்.

அறிவிப்பவர் : இப்னு அப்பாஸ் (ரலி)

நூல்கள் : புகாரி 5273, நஸயீ 3409

மேற்கண்ட செய்தியிலிருந்து நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் காலத்திலிருந்த நடைமுறையை அறியலாம்.

ஒரு பெண்ணுக்கு, கணவனைப் பிடிக்கா விட்டால் அவள் சமுதாயத் தலைவரிடம் முறையிட வேண்டும். அந்தத் தலைவர், கணவனிடமிருந்து பெற்றிருந்த மஹர் தொகையை அவள் திரும்பக் கொடுக்குமாறும் அந்த மஹர்

தொகையைப் பெற்றுக் கொண்டு கணவன் அவளை விட்டு விலகுமாறும் கட்டளையிட வேண்டும்; திருமணத்தையும் ரத்துச் செய்ய வேண்டும் என்பதை இந்தச் செய்தியிலிருந்து அறியலாம்.

பெண் என்பவள் உணர்ச்சிகள் இல்லாத கட்டை அல்ல. கணவன் இருக்கும் போதே அவளது உணர்வுகள் கணவனின் உணர்வுகளுடன் ஒத்துப் போகாவிட்டால் திருமணத்தை ரத்து செய்ய சமுதாயத் தலைவருக்கு அனுமதி உண்டு எனும் போது கணவன் காணாமல் போய் விடும் போது தாராளமாக ரத்து செய்யலாம்.

ஒரு பெண் தவறான வழியில் செல்வதற்கான வாசலை இஸ்லாம் அடைக்காமல் இருக்குமா? என்று சிந்தித்துப் பார்த்தால் கணவனுக்காக காலமெல்லாம் காத்திருக்க வேண்டும் என்று கூற மாட்டார்கள்.

இவ்வாறு கூறும் ஹனஃபி மத்ஹபினர் தங்கள் மகளுக்கு இது போன்ற நிலை ஏற்பட்டால் நபிவழியைப் பின்பற்ற முன்வருகின்றனர்.

எத்தனையோ மவ்லவிமார்கள் தங்கள் மகளுக்கோ, சகோதரிக்கோ இதுபோன்ற நிலை ஏற்படும் போது மத்ஹபைத் தூக்கி எறிந்து விட்டு நபிவழியைத் தேடுகின்றனர். மக்களுக்கு மட்டும் அந்த உரிமையை மறுப்பது சரிதானா? என்பதைச் சிந்திக்க வேண்டும்.

## குழந்தைத் திருமணம் கூடும்

சிறுவயதினரைத் திருமணம் செய்வது இஸ்லாத்தின் துவக்க காலத்தில் தடுக்கப்படாமல் இருந்தது. பின்னர் அது தடுக்கப்பட்டு விட்டது. ஆனால் மத்ஹபுச் சட்டப்படி குழந்தைகளுக்குத் திருமணம் செய்து வைக்கலாம்.

- قال فإن زوجهما الأب أو الجد يعني الصغير والصغيرة فلا خيار لهما بعد بلوغهما -الهداية شرح البداية

தந்தையோ, பாட்டனோ, சிறுவனுக்கும் சிறுமிக்கும் திருமணம் செய்து வைக்கலாம். அவர்கள் பருவ வயது அடைந்து விட்டால் திருமணத்தை முறிக்கும் உரிமை கிடையாது

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய ஹிதாயா

உங்களிடம் கடுமையான உடன்படிக்கையை அவர்கள் எடுத்து, நீங்கள் ஒருவர் மற்றவருடன் இரண்டறக் கலந்திருக்கும் நிலையில் எப்படி நீங்கள் அதைப் பிடுங்கிக் கொள்ள முடியும்?

திருக்குர்ஆன் 4:21

இந்த வசனத்தில் திருமணத்தை ஒரு கடுமையான ஒப்பந்தம் என்று திருக்குர்ஆன் கூறுகின்றது. அந்த ஒப்பந்தம் செய்வதற்கான தகுதியும், முதிர்ச்சியும் பருவ வயதை அடைந்தால் தான் ஏற்படும். ஆனால் மத்ஹபோ சிறுவர், சிறுமியிடம் அதுவும் அவர்கள் அறியாத நிலையிலேயே அந்த ஒப்பந்தத்தைத் திணிக்கலாம் என்று கூறுகின்றது.

பருவ வயதை அடைந்த பெண்ணாக இருந்தாலும், அவளது விருப்பம் இல்லாமல் திருமணம் செய்து வைத்தால் செல்லாது என்று மார்க்கம் வலியுறுத்துகின்றது.

صحيح البخاري 6968 - حَدَّثَنَا مُسْلِمُ بْنُ إِبْرَاهِيمَ، حَدَّثَنَا هِشَامٌ، حَدَّثَنَا يَحْيَى بْنُ أَبِي كَثِيرٍ، عَنْ أَبِي سَلَمَةَ، عَنْ أَبِي هُرَيْرَةَ، عَنِ النَّبِيِّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، قَالَ: «لاَ تُنْكَحُ البِكْرُ حَتَّى تُسْتَأْذَنَ، وَلاَ الثَّيِّبُ حَتَّى تُسْتَأْمَرَ» فَقِيلَ: يَا رَسُولَ اللَّهِ، كَيْفَ إِذْنُهَا؟ قَالَ: «إِذَا سَكَتَتْ»

"கன்னிப் பெண்ணிடம் அனுமதி கோரப்படாத வரை அவளுக்கு மணமுடித்து வைக்கக் கூடாது. கன்னி கழிந்த பெண்ணிடம் உத்தரவு பெறாத வரை அவளுக்கு மணமுடித்து வைக்கக் கூடாது" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி)

நூல்: புகாரி 6968

ஆனால் அறியாத பருவத்தில், அவர்களது விருப்பம் என்ன என்பதே தெரியாத நிலையில் திருமணம் முடித்து வைக்கலாம் என்று மத்ஹபு கூறுகின்றது.

## மாதத்தில் மூன்று நாள் குடும்பக் கட்டுப்பாடு

وفي المغني قال في الإحياء يكره الجماع في الليلة الأولى من الشهر والأخيرة منه وليلة النصف منه فيقال إن الشيطان يحضر الجماع في هذه الليالي اه -إعانة الطالبين

மாதத்தில் முதல் நாள் இரவிலும், கடைசி இரவிலும், மாதத்தின் நடு இரவிலும் உடலுறவு கொள்வது வெறுப்பிற்குரியதாகும். காரணம் இந்நாட்களில் உடலுறவு கொள்ளும் போது ஷைத்தான் விஜயம் செய்கின்றான் என்று இஹ்யாவில் வருவதாக முக்னி என்ற நூலில் பதிவாகியுள்ளது.

நூல்: ஷாஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய இஆனதுத்தாலிபீன்

மாதத்தில் சில குறிப்பிட்ட நாட்களில் இல்லறத்தில் ஈடுபடக் கூடாது என்று இந்த மத்ஹபுச் சட்டம் கூறுகின்றது. ஆனால் அல்லாஹ் என்ன கூறுகின்றான் என்று பாருங்கள்.

மாதவிடாய் பற்றியும் உம்மிடம் கேட்கின்றனர். அது ஒரு தொல்லை. எனவே மாதவிடாயின் போது பெண்களை விட்டும் (உடலுறவு கொள்ளாமல்) விலகிக் கொள்ளுங்கள்! அவர்கள் தூய்மையாகும் வரை அவர்களை நெருங்காதீர்கள்! அவர்கள் தூய்மையாகி விட்டால் அல்லாஹ் உங்களுக்குக் கட்டளையிட்டவாறு அவர்களிடம் செல்லுங்கள்! திருந்திக் கொள்வோரை அல்லாஹ் விரும்புகிறான். தூய்மையாக இருப்போரையும் விரும்புகிறான் எனக் கூறுவீராக!

திருக்குர்ஆன் 2:222

மாதவிலக்கு ஏற்படும் நாட்களைத் தவிர மற்ற நாட்களில் எப்போது வேண்டுமானாலும் இல்லறத்தில் ஈடுபடலாம் என்று அல்லாஹ் கூறுகின்றான். ஆனால் கஸ்ஸாலி என்பவர் தனக்கு ஏதோ வஹீ வந்தது போன்று தன் இஷ்டத்திற்கு சில நாட்களைக் குறிப்பிட்டு இல்லறத்தில் ஈடுபடக் கூடாது என்று தடை விதிக்கின்றார்.

மேலும் அல்லாஹ் தடை செய்யாதவற்றைத் தங்கள் இஷ்டத்திற்குத் தடை செய்வதை அல்லாஹ் மிகக் கடுமையாகக் கண்டிக்கின்றான்.

"இது அனுமதிக்கப்பட்டது; இது விலக்கப்பட்டது" என்று உங்கள் நாவுகள் வர்ணிக்கும் பொய்யை அல்லாஹ்வின் மீது இட்டுக் கட்டிக் கூறாதீர்கள்! அல்லாஹ்வின் மீது பொய்யை இட்டுக் கட்டியோர் வெற்றி பெற மாட்டார்கள்.

திருக்குர்ஆன் 16:116

"அல்லாஹ்வே இதைத் தடை செய்தான் என சாட்சியமளிக்கும் உங்கள் சாட்சிகளைக் கொண்டு வாருங்கள்!"'என்று கேட்பீராக! அவர்கள் (பொய்யாக) சாட்சியமளித்தால் அவர்களுடன் சேர்ந்து நீரும் சாட்சியமளிக்காதீர்! நமது வசனங்களைப் பொய்யெனக் கருதி, மறுமையை நம்பாதோரின் மனோ இச்சைகளைப் பின்பற்றாதீர்! அவர்கள் தம் இறைவனுக்கு (மற்றவர்களை) சமமாக்குகின்றனர்.

திருக்குர்ஆன் 6:150

கஸ்ஸாலி என்பவர் இதற்குக் கூறும் காரணம் மடமையின் உச்சகட்டமாக உள்ளது. இம்மூன்று நாட்களிலும் உடலுறவு கொள்ளும் போது ஷைத்தான் ஆஜராகிறான் என்பது தான் அந்தக் காரணம்.

ஷைத்தான் மனிதனுடன் இரண்டறக் கலக்காத நேரம் எதுவும் இல்லை. மற்ற 27 நாட்களில் ஷைத்தானுக்கு மனிதனின் மீது ஆதிக்கம் இல்லையா? அந்த மூன்று நாட்களில் ஒருவர் உடலுறவு கொள்ளாவிட்டால் அவர் ஷைத்தானின் தாக்கத்தால் பாதிக்கப்படாமல் மலக்குகளின் தன்மையை அடைந்து விடுவாரா?

மடமையின் மறுபெயர் தான் மத்ஹப் என்பது தெரிகிறதா?

## மிரட்டி தலாக் வாங்கலாம்

எந்தக் கொடுக்கல் வாங்கலாக இருந்தாலும், ஒப்பந்தமாக இருந்தாலும் அதை மனப்பூர்வமாகச் செய்தால் தான் மார்க்கத்தில் செல்லும். ஒருவனைக் கட்டாயப்படுத்தி ஒப்பந்தம் செய்யப்பட்டு இருந்தால் அது செல்லாது. ஒருவன் தனது மனைவியை விவாகரத்துச் செய்ய மறுக்கிறான் என்றால் அவனைக் கத்தியைக் காட்டி மிரட்டி தலாக் என்று சொல்ல வைத்து தலாக் வாங்கலாம் என்று மத்ஹப் சட்டம் சொல்கிறது.

وجميع ما يثبت مع الإكراه أحكامه عشرة تصرفات النكاح والطلاق والرجعة والإيلاء والفئ والظهار والعتاق والعفو عن القصاص واليمين والنذر -شرح فتح القدير -

திருமணம், விவாகரத்து, விவாகரத்தைத் திரும்பப் பெறுதல், மனைவியுடன் உறவு கொள்ள மாட்டேன் என்று சத்தியம் செய்தல், போர் இன்றியே எதிரிகளிடமிருந்து கிடைக்கும் வெற்றிப் பொருளை எடுத்துக் கொள்ளுதல், லிஹார் (மனைவியைத் தாய்க்கு ஒப்பாக்குதல்), அடிமையை விடுதலை செய்தல், பழிக்குப் பழி வாங்காது மன்னித்தல், சத்தியம், நேர்ச்சை ஆகிய பத்து காரியங்களையும் நிர்ப்பந்தப்படுத்தி செய்யலாம்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய ஷரஹ் பத்ஹுல் கதீர்

உனக்குப் பிடிக்காத இப்பெண்ணை திருமணம் செய்கிறாயா இல்லையா என்று ஒருவனை மிரட்டலாம். அந்த மிரட்டலுக்கு அஞ்சி, நான் இவளைத் திருமணம் செய்து கொண்டேன் என்று இரு சாட்சிகள் முன்னிலையில் அவன் கூறினால் அது திருமணமாகி விடுமாம்.

உன் மனைவியை தலாக் சொல் என்று கத்தியைக் காட்டி மிரட்டும் போது அதற்குப் பயந்து தலாக் என்று கூறிவிட்டால் அது தலாக் ஆகிவிடுமாம்.

அதாவது இந்த மத்ஹப் ஆலிமுடைய மனைவி அழகாக இருப்பதை அறிந்து அவளை அடைய ஒருவன் விரும்பினால் மிரட்டி தலாக் சொல்ல வைக்கலாம்.

அதன்பின் மிரட்டி அவளைத் திருமணம் செய்து கொள்ளலாம் என்பது இதன் கருத்தாகும்.

ஹனஃபி மத்ஹபின் இந்தச் சட்டத்தின் படி யாரும், யாருடைய மனைவியையும் அல்லது எந்தப் பெண்ணையும் நிர்பந்தப்படுத்தி தலாக் விடச் செய்து திருமணம் செய்து கொள்ளலாம். இந்தச் சட்டம் சரியானது என்று வைத்துக் கொண்டால் ஊரில் எந்தப் பெண்ணும் நிம்மதியாக நடமாட முடியாது என்ற நிலை ஏற்பட்டு விடும்.

உதாரணமாக நிர்ப்பந்தத்தின் காரணமாக ஒருவர் தனது மனைவியைத் தலாக் கூறி விட்டார் என்றால், அது வெறும் வாயளவில் சொன்னதாகத் தான் ஆகுமே தவிர உண்மையில் தலாக் ஆகாது.

அல்லாஹ்வை நம்பிய பின் அவனை மறுப்போர் மீதும், மறுப்பிற்கு உள்ளத்தில் தாராளமாக இடமளிப்போர் மீதும் அல்லாஹ்வின் கோபமும், கடும் வேதனையும் உண்டு. உள்ளத்தில் நம்பிக்கை வலுப் பெற்ற நிலையில் நிர்பந்திக்கப்பட்டவர் தவிர.

திருக்குர்ஆன் 16:106

நிர்ப்பந்தத்தின் காரணமாக அல்லாஹ்வை மறுத்து, குஃப்ரான வார்த்தைகளைச் சொல்லி விட்டால் கூட அதனால் அவர் காஃபிராகி விட மாட்டார் என்பதை இந்த வசனம் விளக்குகின்றது.

எனவே திருமணம், தலாக் என்று சொல்லி விடுவதால் மட்டுமே தலாக்காகவோ, திருமணம் முடித்ததாகவோ ஆகி விடாது என்பதை இந்த வசனத்திலிருந்து அறியலாம்.

## கணவன் மனைவிக்கிடையே ஒரு வருட பயண தூரம் இருந்தாலும் அவனது குழந்தையே!

மத்ஹபு சட்டவல்லுனர்கள் முழு மூடர்களாக இருந்துள்ளனர் என்பதற்குப் பின்வரும் சட்டமும் ஆதாரமாக அமைந்துள்ளது.

كَتَزَوُّجِ الْمَغْرِبِيِّ الْمَشْرِقِيَّةَ وَبَيْنَهُمَا مَسِيرَةُ سَنَةٍ فَجَاءَتْ بِوَلَدٍ لِسِتَّةِ أَشْهُرٍ مِنْ يَوْمِ تَزَوَّجَهَا لِلْإِمْكَانِ الْعَقْلِيِّ، وَهُوَ أَنْ يَصِلَ إلَيْهَا بِخُطْوَةٍ كَرَامَةً مِنْ اللَّهِ تَعَالَى - تبيين الحقائق شرح كنز الدقائق

கிழக்கு நாட்டில் இருப்பவன் மேற்கு நாட்டில் இருப்பவளைத் திருமணம் செய்தான். இரண்டு நாடுகளுக்கும் இடையே ஒரு வருட பயணத் தொலைவு உள்ளது. இந்த நிலையில் திருமணம் ஆன ஆறாவது மாதம் அவள் பிள்ளையைப் பெற்றால் அது அவனுடைய குழந்தைதான். ஏனெனில் இதற்கு அறிவுப்பூர்வமாக சாத்தியம் உள்ளது. காரமத் என்ற அற்புதம் மூலம் அவன் ஒரு எட்டு எடுத்து வைத்து ஒரு வருட பயணத் தொலைவை அடந்திருக்க முடியும்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய கன்ஸுத் தகாயிக்

மனைவியுடன் உடலுறவு கொள்ள கணவனுக்கு வாய்ப்பே இல்லாவிட்டாலும் கராமத் மூலம் ஒரு வினாடியில் அத்தூரத்தைக் கடந்து வந்து மனைவியிடம் சேர்ந்திருக்க முடியும் என்பதால் அது அவனுக்குப் பிறந்த குழந்தையாகத் தான் இருக்க முடியும் என்கிறது இச்சட்டம்.

வெளிநாடு சென்ற கணவன் பல ஆண்டுகளாக தாயகம் வரவில்லை. ஆனால் அவனது மனைவி குழந்தை பெற்று விட்டாள். அந்தக் குழந்தையை அவன் தலையில் தான் கட்ட வேண்டுமாம். கராமத் மூலம் அவன் யாருக்கும் தெரியாமல் வந்து மனைவியுடன் உடலுறவு கொண்டிருக்கலாம் என்ற முடிவை மத்ஹபை ஆதரிப்பவர்களே நீங்கள் ஏற்றுக் கொள்கிறீர்களா?

தவறான தொடர்பு மூலம் ஹராத்தில் பிறக்கும் பிள்ளைகளை கராமத்தில் பிறந்தவர்கள் என்று சொல்வதற்கு இது வழிவகுக்காதா? விபச்சாரம் செய்து குழந்தை பெற்றாலும் அதைக் கராமத் மூலம் கணவனால் ஏற்பட்ட குழந்தை என்று சொல்லி விடலாம் என்ற எண்ணத்தைச் சில பெண்களுக்கு இது ஏற்படுத்தாதா?

கடுகளவு மூளையுள்ளவன் கூட இது போல் சொல்வானா? இந்தச் சட்டம் எழுதியவனின் மகள், கணவன் இல்லாத போது குழந்தை பெற்றிருக்க வேண்டும். அதை அவளது கணவன் தலையில் கட்டுவதற்காகவே இதுபோல் எழுதப்பட்டு இருக்க வேண்டும்.

ஒரு வருட பயணத் தொலைவில் உள்ள இருவர் எப்படி திருமணம் செய்திருக்க முடியும்? அதுவும் கராமத்தில் நடந்ததா? என்பதும் கவனத்தில் கொள்ள வேண்டும்.

## மகளைத் தொட்டால் தாய் ஹராமாவாள்

மத்ஹபு சட்ட வல்லுனர்களுக்கு சிந்தனாசக்தி அறவே இல்லை என்பதற்கு இந்தச் சட்டமும் ஆதாரமாக அமைந்துள்ளது.

فَلَوْ أَيْقَظَ زَوْجَتَهُ أَوْ أَيْقَظَتْهُ هِيَ لِجِمَاعِهَا فَمَسَّتْ يَدُهُ بِنْتَهَا الْمُشْتَهَاةَ أَوْ يَدُهَا ابْنَهُ حَرُمَتْ الْأُمُّ أَبَدًا- الدر المختار

உடலுறவு கொள்வதற்காக மனைவியை கணவன் எழுப்புகிறான். அல்லது அவள் கணவனை எழுப்புகிறாள். அப்போது (அருகில் படுத்துக் கிடக்கும்) மகள் மீது அவன் கை பட்டால் அவனது மனைவி அவனுக்கு நிரந்தரமாக ஹராமாகி விடுவாள்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

பன்றி, நாய்களுடன் உடலுறவு கொள்வதைக் கூட சாதாரணமாகச் சித்தரிக்கும் கேடுகெட்ட மத்ஹபுகள், மகள் மீது தந்தையின் கை தெரியாமல் பட்டால் மனைவி நிரந்தரமாகப் பிரிந்து விட வேண்டுமாம்.

கடுகளவு மூளயில்லாத மூடர்கள் தான் இச்சட்டத்தை எழுதியிருக்க வேண்டும் என்று தெரிகிறதா?

## தலாக் என்ற பெயரால் மடமைச் சட்டங்கள்

விவாகரத்து சம்மந்தமாக மத்ஹபு சட்ட வல்லுனர்கள் எழுதிய சட்டங்களை மனநல நிபுணர்களிடம் காட்டினால் இதை எழுதியவன் மறை கழன்றவனாக இருப்பான் என்று சொல்வார்கள். அந்த அளவுக்கு தலாக் சட்டம் என்ற பெயரில் உளறிக் கொட்டி உள்ளனர்.

(أَنْتِ طَالِقٌ مَا لَمْ أُطَلِّقْك أَوْ مَتَى لَمْ أُطَلِّقْك أَوْ مَتَى مَا لَمْ أُطَلِّقْك وَسَكَتَ طَلُقَتْ) لِلْحَالِ بِسُكُوتِهِ (وَفِي إنْ لَمْ أُطَلِّقْك لَا) تَطْلُقُ بِالسُّكُوتِ بَلْ يَمْتَدُّ النِّكَاحُ (حَتَّى يَمُوتَ أَحَدُهُمَا قَبْلَهُ) أَيْ قَبْلَ تَطْلِيقِهِ فَتَطْلُقُ قُبَيْلَ الْمَوْتِ لِتَحَقُّقِ الشَّرْطِ وَيَكُونُ فَارًّا . الدر المختار

நான் உன்னை தலாக் விடாத போது அல்லது எப்போது உன்னை தலாக் விடவில்லையோ அப்போது நீ தலாக் என்று ஒருவன் கூறினால் உடனே அவள் தலாக்காகி விடுவாள். உன்னை நான் தலாக் விடாவிட்டால் நீ தலாக் என்று கூறிவிட்டு மவுனமாக இருந்தால் அவள் தலாக்காக மாட்டாள். இருவரில் ஒருவர் மரணிக்கும் வரை திருமணம் நீடிக்கும். இருவரில் ஒருவர் மரணிப்பதற்கு சற்று முன்னர் அவள் தலாக் ஆவாள்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

தலாக் விடாத போது நீ தலாக் என்று கூறினால் உடனே தலக்காகி விடுவாளாம். தலாக் விடாவிட்டால் நீ தலாக் என்று கூறினால் உடனே தலாக்காக மாட்டாளாம். விடாவிட்டால் என்று அவன் கூறியதால் அதற்கான வாய்ப்பு சாகும் வரை உள்ளதாம். என்னே அறிவு! என்னே ஆராய்ச்சி!

إنْ لَمْ أُطَلِّقْك الْيَوْمَ ثَلَاثًا فَأَنْتِ طَالِقٌ ثَلَاثًا فَحِيلَتُهُ أَنْ يُطَلِّقَهَا عَلَى أَلْفٍ وَلَا تَقْبَلُ الْمَرْأَةُ، فَإِنْ مَضَى الْيَوْمُ لَا تَطْلُقُ بِهِ يُفْتَى الدر المختار

இன்று நான் உன்னை மூன்று தலாக் கூறாவிட்டால் நீ மூன்று தலாக் விடப்பட்டவளாவாய் என்று ஒருவன் கூறிவிட்டான். (இப்போது தலாக் விட்டாலும் அவள் தலாக்காகி விடுவாள். தலாக் விடாவிட்டாலும் தலாக்காகி விடுவாள்.) இதிலிருந்து தப்பிக்க ஒரு தந்திரம் உள்ளது. நீ ஆயிரம் ரூபாய் வாங்கிக் கொண்டு மூன்று தலாக்காகிக் கொள் என்று மனைவியிடம் கூற வேண்டுமாம். மனைவி அந்தப் பேரத்தை மறுக்க வேண்டுமாம். இப்படி ஒரு நாள் கழிந்து விட்டால் அவள் தலாக்காக மாட்டாள். இதுதான் ஃபத்வாவுக்குரிய கருத்தாகும்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

மூன்று தலாக் என்று அவன் சொல்லி விட்டதால் அவள் தலாக் ஆகும் நிலை ஏற்பட்டாலும் ஆயிரம் ரூபாயுடன் சம்மந்தப்படுத்தி அதை மனைவி ஏற்காததால் அவன் கூறிய மூன்று தலாக் செல்லாததாகி விட்டதாம். ஆயிரம் ரூபாயுடன் சம்மந்தப்படுத்தாமல் தலாக் என்று கூறி இருந்தால் மனைவி அதை ஏற்க வேண்டும் என்ற பிரச்சனை வராது. ஆயிரம் ரூபாய் பேரம் பேசியதால் அவள் அதை ஏற்றால் தான் தலாக் நிகழுமாம்.

மறைகழன்றவர்கள் தான் இதை எழுதியிருப்பார்கள் என்பது இதிலிருந்து தெரிகிறது.

(أَنْتِ طَالِقٌ بَائِنٌ أَوْ أَلْبَتَّةَ) وَقَالَ الشَّافِعِيُّ: يَقَعُ رَجْعِيًّا لَوْ مَوْطُوءَةً (أَوْ أَفْحَشَ الطَّلَاقِ أَوْ طَلَاقَ الشَّيْطَانِ أَوْ الْبِدْعَةِ، أَوْ أَشَرَّ الطَّلَاقِ، أَوْ كَالْجَبَلِ أَوْ كَأَلْفٍ، أَوْ مِلْءَ الْبَيْتِ، أَوْ تَطْلِيقَةً شَدِيدَةً، أَوْ طَوِيلَةً، أَوْ عَرِيضَةً أَوْ أَسْوَهُ، أَوْ أَشَدَّهُ، أَوْ أَخْبَثَهُ) أَوْ أَخْشَنَهُ (أَوْ أَكْبَرَهُ أَوْ أَعْرَضَهُ أَوْ أَطْوَلَهُ، أَوْ أَغْلَظَهُ أَوْ أَعْظَمَهُ وَاحِدَةً بَائِنَةً) فِي الْكُلِّ لِأَنَّهُ وَصَفَ الطَّلَاقَ بِمَا يَحْتَمِلُهُ (إنْ لَمْ يَنْوِ ثَلَاثًا) فِي الْحُرَّةِ وَثِنْتَيْنِ فِي الْأَمَةِ، فَيَصِحُّ لِمَا مَرَّ، الدر المختار

உன்னை ஆபாச தலாக் விடுகிறேன்; அல்லது ஷைத்தானின் தலாக் விடுகிறேன்; அல்லது பித்அத்தான தலாக் விடுகிறேன்; அல்லது கெட்ட தலாக் விடுகிறேன்; அல்லது மலை போன்ற தலாக் விடுகிறேன்; ஆயிரம் தலாக் விடுகிறேன்; அல்லது வீடு நிரம்பிய தலாக் விடுகிறேன்; அல்லது கடும் தலாக் விடுகிறேன்; அல்லது நீளமான தலாக் விடுகிறேன்; அல்லது அகலமான தலாக் விடுகிறேன்; அல்லது கெட்ட தலாக் விடுகிறேன்; அல்லது கொடுமையான தலாக் விடுகிறேன்; அல்லது அருவருப்பான தலாக் விடுகிறேன்; அல்லது சொரசொரப்பான தலாக் விடுகிறேன்; அல்லது மிகப்பெரிய தலாக் விடுகிறேன்; அல்லது மிக அகலமான தலாக் விடுகிறேன்; அல்லது மிக நீளமான தலாக் விடுகிறேன்; அல்லது மிகக் கடினமான தலாக் விடுகிறேன்; அல்லது மிகப்பிரம்மாண்டமான தலாக் விடுகிறேன் என்று ஒருவன் தன் மனைவியை நோக்கி கூறினால் மீட்டிக் கொள்ள முடியாத வகையில் ஒரு தலாக் ஆகிவிடுவாள்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

இப்படியெல்லாம் மத்ஹபுச் சட்ட மன நோயாளிகள் தான் பேசுவார்களே தவிர சராசரியான மனிதர்கள் பேச மாட்டார்கள்.

يَقَعُ بِأَنْتِ طَالِقٌ كُلَّ التَّطْلِيقَةِ وَاحِدَةٌ، وَكُلَّ تَطْلِيقَةٍ ثَلَاثٌ، وَعَدَدَ التُّرَابِ وَاحِدَةٌ، وَعَدَدَ الرَّمْلِ ثَلَاثٌ، وَعَدَدَ شَعْرِ إبْلِيسَ أَوْ عَدَدَ شَعْرِ بَطْنِ كَفِّي وَاحِدَةٌ، وَعَدَدَ شَعْرِ ظَهْرِ كَفِّي أَوْ سَاقِي أَوْ سَاقِك أَوْ فَرْجِك أَوْ عَدَدَ مَا فِي هَذَا الْحَوْضِ مِنْ السَّمَكِ وَقَعَ بِعَدَدِهِ إنْ وُجِدَ وَإِلَّا لَا. الدر المختار

உன்னை அனைத்து தலாக் விடுகிறேன் என்று கூறினால் ஒன்று நிகழும். உன்னை ஒவ்வொரு தலாக் விடுகிறேன் என்று கூறினால் மூன்று நிகழும். மண் எண்ணிக்கையளவு தலாக் என்று கூறினால் ஒரு தலாக் நிகழும். மணல் எண்ணிக்கையளவு தலாக் என்று கூறினால் மூன்று நிகழும். இப்லீசின் முடியின் எண்ணிக்கையளவு அல்லது உள்ளங்கை முடியின் எண்ணிக்கையளவு தலாக் என்று கூறினால் ஒன்று நிகழும். என் உள்ளங்கையின் மேற்புற முடி எண்ணிக்கையளவு, அல்லது என் கெண்டைக்கால் முடி எண்ணிக்கையளவு, அல்லது உன் கெண்டைக்கால் முடியின் எண்ணிக்கையளவு, அல்லது உன் பிறப்புறுப்பில் உள்ள முடிகளின் எண்ணிக்கையளவு, அல்லது இந்தத் தடாகத்தில் உள்ள மீன்களின் எண்ணிக்கையளவு தலாக் என்று கூறினால் அந்த எண்ணிக்கைக்கு ஏற்ப தலாக் நிகழும். அந்த முடிகள் இல்லாவிட்டால் தலாக் நிகழாது.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

قَالَ لِامْرَأَتِهِ: هَذِهِ الْكَلْبَةُ طَالِقٌ طَلُقَتْ- الدر المختار

ஒருவன் தன் மனைவியைப் பார்த்து இந்த நாய் தலாக் என்று கூறினால் தலாக் ஆகிவிடும்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

قَالَ: نِسَاءُ الدُّنْيَا أَوْ نِسَاءُ الْعَالَمِ طَوَالِقُ لَمْ تَطْلُقْ امْرَأَتُهُ، بِخِلَافِ نِسَاءِ الْمَحَلَّةِ وَالدَّارِ وَالْبَيْتِ- الدر المختار

உலகத்துப் பெண்கள், அல்லது அகிலத்துப் பெண்கள் தலாக் என்று ஒருவன் கூறினால் அவனது மனைவி தலாக் ஆக மாட்டாள். இந்த மஹல்லாவின் பெண்கள், இந்த வீட்டின் பெண்கள் தலாக் என்று கூறினால் அவனது மனைவி தலாக் ஆவாள்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

وَمَتَى تَعَدَّدَ الِاسْتِثْنَاءُ بِلَا وَاوٍ كَانَ كُلٌّ إسْقَاطًا مِمَّا يَلِيهِ فَيَقَعُ ثِنْتَانِ بِأَنْتِ طَالِقٌ عَشَرًا إلَّا تِسْعًا إلَّا ثَمَانِيَةً إلَّا سَبْعَةً، وَيَلْزَمُهُ خَمْسَةٌ بِلَهُ عَلَيَّ عَشَرَةٌ إلَّا (9) إلَّا (8) إلَّا (7) إلَّا (6) إلَّا (5) إلَّا (4) إلَّا (3) إلَّا (2) إلَّا وَاحِدَةً، وَتَقْرِيبُهُ أَنْ تَأْخُذَ الْعَدَدَ الْأَوَّلَ بِيَمِينِك وَالثَّانِيَ بِيَسَارِك وَالثَّالِثَ بِيَمِينِك وَالرَّابِعَ بِيَسَارِك وَهَكَذَا، ثُمَّ تُسْقِطَ مَا بِيَسَارِك مِمَّا بِيَمِينِك، فَمَا بَقِيَ فَهُوَ الْوَاقِعُ- الدر المختار

ஒன்பதைத் தவிர, எட்டைத் தவிர, ஏழைத் தவிர நீ பத்து தலாக் என்று கூறினால் இரு தலாக் நிகழும். ஒன்பதைத் தவிர, எட்டைத் தவிர, ஏழைத் தவிர, ஆறைத்தவிர, ஐந்தைத் தவிர, நான்கைத் தவிர, மூன்றைத் தவிர, இரண்டைத் தவிர, ஒன்றைத் தவிர இவனுக்கு நான் பத்து கொடுக்க வேண்டும் என்று கூறினால் என்று கூறினால் ஐந்து கொடுக்க வேண்டும்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

இப்படி உலகில் யாரும் ஆய்வு செய்த சரித்திரம் உண்டா?

لَهُ امْرَأَةٌ جُنُبٌ وَحَائِضٌ وَنُفَسَاءُ فَقَالَ أَخْبَثَكُنَّ طَالِقٌ طَلُقَتْ النُّفَسَاءُ، وَفِي أَفْحَشِكُنَّ طَالِقٌ فَعَلَى الْحَائِضِ- الدر المختار

குளிப்பு கடமையான மனைவி, மாதவிடாய் ஏற்பட்ட மனைவி, பிரசவத்தீட்டுள்ள மனைவி ஆக மூன்று மனைவியர் ஒருவனுக்கு இருக்கும் போது உங்களில் மிக அருவருப்பானவள் தலாக் என்று அவன் கூறினால் பிரசவத்தீட்டுள்ள மனைவி தலாக் ஆவாள். உங்களின் அசிங்கமானவள் தலாக் என்று அவன் கூறினால் மாதவிடாய் ஏற்பட்டவள் தலாக் ஆவாள்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

## தந்திரங்கள் மூலம் சட்டத்தை வளைத்தல்

மார்க்கச் சட்டங்கள் மறுமை வாழ்வுக்கு அஞ்சி கடைப்பிடிக்க வேண்டியவை என்பது தான் முஸ்லிம்களின் நம்பிக்கையாக இருக்க வேண்டும். ஆனால் மார்க்கச் சட்டம் இதுதான் என்று தெரிந்து கொண்டு அதை மீறுவதற்காக மத்ஹப் நூல்களில் தந்திரங்கள் சொல்லித் தரப்படுகின்றன.

அல்லாஹ்வையே ஏமாற்ற முடியும் என்ற நம்பிக்கை எவன் உள்ளத்தில் உள்ளதோ அவன் தான் தந்திரங்களைக் கையாண்டு அல்லாஹ்வின் சட்டங்களை மீறுவான். அத்தகைய கேடுகெட்டவர்களால் தான் மத்ஹப்

சட்டங்கள் உருவாக்கப்பட்டுள்ளன. இத்தகைய சட்டங்கள் மத்ஹபு் நூல்களில் மலிந்து காணப்படுகின்றன.

## பிறமதத்தவர் மூலம் ஹராமான வியாபாரத்தைச் செய்யலாம்.

மதுபானத்தையும், போதைப் பொருட்களையும் பயன்படுத்துவதும் விற்பதும் மார்க்கத்தில் தடை செய்யப்பட்டுள்ளது. ஆனால் இச்சட்டத்தை மீறி மதுபான வியாபாரம் செய்ய மத்ஹப்கள் சொல்லித் தரும் தந்திரத்தைப் பாருங்கள்!

قال وإذا أمر المسلم نصرانيا ببيع خمر أو بشرائها ففعل ذلك جاز عند أبي حنيفة -الهداية شرح البداية -

சாராயத்தை வாங்கவோ, விற்கவோ ஒரு கிறித்தவருக்கு முஸ்லிம் கட்டளையிடுகிறார். அந்தக் கிறித்தவரும் அதைச் செய்கிறார். இது அபூஹனீஃபா அவர்களின் கருத்துப்படி ஆகுமானதாகும்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய ஹிதாயா

சாராயக் கடை வட்டிக் கடை போன்றவற்றை முஸ்லிமல்லாதவர் வழியாகச் செய்து சம்பாதிக்கலாம் என்று கூறி முஸ்லிம்களைப் பாவிகளாக்கும் இந்த மத்ஹபுகளை நம்பலாமா?

## தந்திரம் செய்து ஜகாத் கொடுக்காமல் இருத்தல்

, وَإِذَا فَعَلَهُ حِيلَةً لِدَفْعِ الْوُجُوبِ كَأَنْ اسْتَبْدَلَ نِصَابَ السَّائِمَةِ بِآخَرَ أَوْ أَخْرَجَهُ عَنْ مِلْكِهِ ثُمَّ أَدْخَلَهُ فِيهِ , قَالَ أَبُو يُوسُفَ لَا يُكْرَهُ ; لِأَنَّهُ امْتِنَاعٌ عَنْ الْوُجُوبِ لَا إبْطَالُ حَقِّ الْغَيْرِ . وَفِي الْمُحِيطِ أَنَّهُ الْأَصَحُّ . وَقَالَ مُحَمَّدٌ : يُكْرَهُ (رد المحتار -

ஜகாத் கடமையாவதைத் தடுப்பதற்காக கால்நடைகளின் ஜகாத்திற்குரிய அளவை மற்றவற்றுடன் கலப்பது, அல்லது தனது கைவசத்தில் இருந்து நீக்கி பிறகு தனது கைவசத்தில் எடுத்துக் கொள்வது போன்ற தந்திரங்களைச் செய்தால் அது வெறுக்கத்தக்கதல்ல என்று அபூ யூசுஃப் கூறுகிறார்கள். ஏனென்றால் இது ஜகாத் கடமையாவதை விட்டும் தடுப்பதுதான். அடுத்தவரின் உரிமையை நாசமாக்குவதல்ல. முஹீத் என்ற நூலில் இதுதான் மிகச் சரியானது என உள்ளது. முஹம்மத் அவர்கள் மக்ரூஹ் (சிறுகுற்றம்) எனக் கூறியுள்ளார்கள்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

ஹனஃபி மத்ஹப் சட்டப்படி ஒரு வருடம் ஆனால் ஜகாத் கடமையாகும். ஒருவருடம் முழுமையடையும் நேரத்தில் தனது செல்வத்தை மனைவிக்கோ, மற்றவருக்கோ கொடுத்து விட்டால் அந்த ஆண்டுக்கான ஜகாத் கொடுக்கத் தேவை இல்லை. அடுத்த நாள் அந்தப் பொருளை மீண்டும் வாங்கிக் கொள்ளலாம். இனி ஒரு வருடம் நிறையும் போது தான் ஜகாத் கடமையாகும். அப்போதும் இதே தந்திரத்தைச் செய்யலாம். தனது சொத்துக்களுக்கு வாழ்நாள் முழுவதும் ஜகாத் கொடுக்காமல் இருக்கலாம் என்று தந்திரம் சொல்லித் தருகின்றனர். அதாவது அல்லாஹ்வையும் ஏமாற்ற முடியும் என்ற இறைமறுப்புக் கொள்கை உடையவர்களாக மக்களை மாற்றத் துணிந்துள்ளனர் என்று தெளிவாகிறதா?

நாற்பது ஆடுகள் முதல் நூற்றி இருபது ஆடுகள் வரை இருந்தால் ஒரு ஆடு ஜகாத் கொடுக்க வேண்டும்.

அதற்கு மேல் 200 வரை இருந்தால் இரு ஆடுகள் ஜகாத் கொடுக்க வேண்டும்.

மூன்று நபர்களிடம் தலா நாற்பது ஆடுகள் இருந்தால் அவர்கள் ஒவ்வொருவரும் ஒரு ஆடு ஜகாத் கொடுக்க வேண்டும். இதிலிருந்து தப்பிக்க மூவருடைய பங்கையும் தற்காலிகமாக ஒருவருக்கு உரியது என்று ஆக்கினால் 120 ஆடுகளுக்கும் ஒரு ஆடுதான் ஜகாத் ஆகும். இப்படி ஒரு ஆட்டை ஜகாத் கொடுத்த மூவரும் தத்தமது நாற்பது ஆடுகளை எடுத்துக் கொண்டால் ஜகாத்தில் இருந்து தப்பிக்காலாம் என்று தந்திரம் சொல்லித் தருகின்றனர்.

அல்லாஹ்வைப் பற்றி ஓரளவு அச்சம் உள்ளவர்கள் கூட இதை ஏற்க முடியுமா? எத்தகைய கயவர்கள் மத்ஹப் அறிஞர்களாக இருந்துள்ளனர் என்பது தெரிகிறதா?

## பவர் கொடுத்து ஏமாற்றுதல்

ஒருவருக்கு ஒரு பொருளை அன்பளிப்பாகக் கொடுப்பதாக ஏமாற்ற மத்ஹபுகள் சொல்லித்தரும் தந்திரத்தைப் பாருங்கள்!

وَلَوْ أَحَالَتْ بِهِ إنْسَانًا ثُمَّ وَهَبَتْهُ لِلزَّوْجِ لَمْ تَصِحَّ، وَهَذِهِ حِيلَةُ مَنْ يُرِيدُ أَنْ يَهَبَ وَلَا تَصِحُّ الدر المختار

ஒரு பொருளின் அதிகாரத்தை – பவரை – இன்னொருவருக்குக் கொடுத்து விட்டு அதன்பின் அதைக் கணவனுக்கு அன்பளிப்பாகக் கொடுத்தால் அது செல்லாது. அன்பளிப்பு கொடுத்து விட்டு அதைச் செல்லாததாக ஆக்கும் தந்திரம் இதுவே!

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

இன்னொருவனுக்கு பவர் கொடுத்து விட்டு அதை அன்பளிப்பாக மற்றவருக்குக் கொடுப்பதாகச் சொல்வது மோசடி அல்லவா? இப்படிச் செய்யக் கூடாது என்று போதிக்காமல் அதைச் செய்யத் தூண்டும் கேடுகெட்ட சட்டம் நமக்குத் தேவையா? பித்தலாட்டம் செய்யும் கயவர்களால் தான் மத்ஹபுகள் உருவாக்கப்பட்டன என்பது இதிலிருந்து தெரிகிறதல்லவா?

## வாடகைதாரரை கொடூரமாக வெளியேற்றுதல்

மக்களுக்கு கொடுமை செய்வதற்காக மத்ஹப் சட்ட நிபுணர்கள் எப்படி எல்லாம் ஆய்வு செய்துள்ளனர் என்பதைப் பாருங்கள்!

آجَرَ دَارَهُ كُلَّ شَهْرٍ بِكَذَا فَلِكُلٍّ الْفَسْخُ عِنْد تَمَامِ الشَّهْرِ، فَلَوْ غَابَ الْمُسْتَأْجِرُ قَبْلَ تَمَامِ الشَّهْرِ وَتَرَكَ زَوْجَتَهُ وَمَتَاعَهُ فِيهَا لَمْ يَكُنْ لِلْآجِرِ الْفَسْخُ مَعَ الْمَرْأَةِ؛ لِأَنَّهَا لَيْسَتْ بِخَصْمٍ، وَالْحِيلَةُ إجَارَتُهَا لِآخَرَ قَبْلَ تَمَامِ الشَّهْرِ، فَإِذَا تَمَّ تَنْفَسِخُ الْأُولَى فَتَنْفُذُ الثَّانِيَةُ فَتَخْرُجُ مِنْهَا الْمَرْأَةُ وَتُسَلَّمُ لِلثَّانِي خَانِيَّةٌ اهـ الدر المختار

ஒருவன் தனது வீட்டை மாதம் இவ்வளவு வாடகை என்றும், மாதத்தின் இறுதியில் ஒவ்வொருவருக்கும் இந்த ஒப்பந்தத்தை முறிக்கும் உரிமை உள்ளது என்றும் பேசி வாடகைக்கு விடுகிறான். வாடகைக்கு எடுத்தவன் மாதம் முடிவதற்கு முன் மனைவியையும், தனது பொருட்களையும் அவ்வீட்டில் விட்டு விட்டு ஊரைவிட்டு போய்விட்டான். இப்போது வாடகை ஒப்பந்தத்தை அவனது மனைவியிடம் முறிக்க முடியாது. ஏனெனில் அவளிடம் ஒப்பந்தம் செய்யப்படவில்லை. அவளை வெளியேற்ற தந்திரம் உள்ளது. அதாவது மாதம் முடிவதற்குள் மற்றொருவரிடம் வாடகை ஒப்பந்தம் செய்ய வேண்டும். மாதம் பிறந்த உடன் முதல் ஒப்பந்தம்

காலாவதியாகிவிடும். இப்போது அவளையும் அவ்வீட்டில் உள்ள பொருட்களையும் இரண்டாவதாக வாடகைக்கு எடுத்தவன் காலி செய்யலாம்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

கணவன் காணாமல் போய்விட்ட நிலையில் பாதுகாப்பற்ற நிலையில் அவனது மனைவி இருக்கிறாள். வீட்டை விட்டு காலி செய்தால் அவளது பாதுகாப்பு இன்னும் கேலிக்குரியதாக ஆகும். அவளுக்கு என்ன மாற்று ஏற்பாடு செய்ய வேண்டும் என்பதைப் பற்றி சிந்திக்காமல் தந்திரமாக அவளைத் தெருவில் நிறுத்துவது பற்றி சிந்திக்கும் இவர்கள் சட்ட நிபுணர்களா? சதிகாரர்களா? சிந்தியுங்கள்!

## ஒரே பிரச்சனையில் மூன்று மத்ஹபுகளைப் பின்பற்றும் மடமை

மார்க்கத்தைக் கேலிக்கூத்தாக்குவதே மத்ஹபுகளின் நோக்கம் என்பதைக் கீழ்க்காணும் கேடுகெட்ட சட்டம் தக்க ஆதாரமாக அமைந்துள்ளது.

ஒருவன் மனைவியை மூன்று தலாக் கூறிவிட்டால் அவளுடன் இணைய முடியாது. மூன்று விவாகரத்து முடிந்த பின் அவளை இன்னொருவன் திருமணம் செய்து அவன் அவளை விவாகரத்து செய்து அவளது இத்தா காலம் முடிந்து விட்டால் அப்போது முதல் கணவன் அவளைத் திருமணம் செய்யலாம்.

மூன்று தலாக் கூறி விட்டு உடனே அவளை மீண்டும் திருமணம் செய்ய விரும்பினால் அதற்கு ஒரு தந்திரம் உள்ளது என்று கூறி அல்லாஹ்வின் சட்டத்தை எப்படிக் கேலி செய்கிறார்கள் என்று பாருங்கள்!

(قَوْلُهُ: وَتَمْضِي عِدَّتُهُ) ذَكَرَ بَعْضُ الشَّافِعِيَّةِ حِيلَةً لِإِسْقَاطِ الْعِدَّةِ، بِأَنْ تُزَوَّجَ لِصَغِيرٍ لَمْ يَبْلُغْ عَشْرَ سِنِينَ وَيَدْخُلَ بِهَا مَعَ انْتِشَارِ آلَتِهِ وَيَحْكُمَ بِصِحَّةِ النِّكَاح شَافِعِيٌّ ثُمَّ يُطَلِّقَهَا الصَّبِيُّ وَيَحْكُمَ حَنْبَلِيٌّ بِصِحَّةِ طَلَاقِهِ وَأَنَّهُ لَا عِدَّةَ عَلَيْهَا أَمَّا لَوْ بَلَغَ عَشْرًا لَزِمَتْ الْعِدَّةُ عِنْدَ الْحَنْبَلِيِّ، أَوْ يُطَلِّقَهَا وَلِيُّهُ إذَا رَأَى فِي ذَلِكَ الْمَصْلَحَةَ وَيَحْكُمَ بِهِ مَالِكِيٌّ وَبِعَدَمِ وُجُوبِ الْعِدَّةِ بِوَطْئِهِ ثُمَّ يَتَزَوَّجَهَا الْأَوَّلُ وَيَحْكُمَ شَافِعِيٌّ بِصِحَّتِهِ لِأَنَّ حُكْمَ الْحَاكِمِ يَرْفَعُ الْخِلَافَ بَعْدَ تَقَدُّمِ الدَّعْوَى مُسْتَوْفِيًا شَرَائِطَهُ فَتَحِلُّ لِلْأَوَّلِ.
اهـ. الدر المختار

இதற்கு ஷாஃபி மத்ஹபில் ஒரு தந்திரம் உள்ளது. அதாவது பத்து வயதுக்கு உட்பட்ட சிறுவனுக்கு அவளைத் திருமணம் செய்து கொடுக்க வேண்டும். அவன் அவளுடன் உடலுறவு கொள்வான். இந்தத் திருமணம் செல்லும் என்று ஷாஃபி

மத்ஹப் அறிஞர் ஒருவர் ஃபத்வா கொடுக்க வேண்டும். சிறுவன் திருமணம் ஷாஃபி மத்ஹபில் செல்லும். இதன் பின் அச்சிறுவன் அவளைத் தலாக் கூற வேண்டும். ஹம்பலி மத்ஹபில் சிறுவன் தலாக் சொன்னால் இத்தா இல்லை என்பதால் அவ்வாறு ஒரு ஹம்பலி அறிஞர் ஃபத்வா கொடுக்க வேண்டும். அல்லது அந்தச் சிறுவன் சார்பில் அவனது பொறுப்பாளர் தலாக் சொல்லலாம்; இதற்கு இத்தா இல்லை என்று மாலிக் அறிஞர் ஃபத்வா கொடுக்க வேண்டும். இதன் பிறகு உடனே முதல் கணவன் அவளை மீண்டும் திருமணம் செய்து கொள்ளலாம். இத்திருமணம் செல்லும் என்று ஷாஃபி அறிஞர் ஃபத்வா கொடுக்க வேண்டும்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்.

மூன்று தலாக் சொன்னால் இரண்டாம் கணவன் அவளை தலாக் சொல்லி இத்தாவும் முடிந்து இருக்க வேண்டும் என்று இவர்கள் ஒப்புக் கொண்ட சட்டமாகும். ஆனால் இரண்டாம் கணவன் தலாக் சொன்ன மறுகனமே அவளை முதல் கணவன் திருமணம் செய்யலாம் என்று கூறி அல்லாஹ்வின் சட்டத்தைக் கேலிக்கூத்தாக்குகிறார்கள்.

ஒவ்வொரு விஷயத்துக்கும் சாதகமான ஒரு மத்ஹப் சட்டத்தை எடுத்துக் காட்டி அல்லாஹ்வின் சட்டத்தை எப்படி ஏமாற்றலாம் என்று கற்றுக் கொடுக்கும் மத்ஹபுகள் ஒழிக்கப்பட வேண்டாமா?

## உம்ராவுக்கு சட்டத்தை உடைத்தல்

ஷாஃபி மத்ஹப் சட்டப்படி மக்காவைச் சேர்ந்த பெண்கள் நஃபிலான உம்ராக்கள் செய்யக் கூடாது. இப்படி இவர்களே சட்டத்தை எழுதி வைத்து விட்டு அதை எப்படி ஏமாற்றுவது என்று சொல்லித் தருவதைப் பாருங்கள்!

وقوله يحرم على المكية التطوع بالعمرة والحيلة إذا أرادت العمرة أن تنذر التطوع فحينئذ لا يحرم عليها الخروج لأنها صارت واجبة قوله خلافا لمن نازع فيه أي في تحريم خروج المكية للتنعيم إعانة الطالبين

மக்காவைச் சேர்ந்த பெண்கள் நஃபிலான உம்ராக்கள் செய்வது ஹராமாகும். இதற்கு ஒரு தந்திரம் உள்ளது. மக்காவைச் சேர்ந்த பெண் உம்ரா செய்வதாக நேர்ச்சை செய்ய வேண்டும். நேர்ச்சை செய்து விட்டால் அது கடமை என்ற நிலையை அடைந்து விடும். எனவே இப்போது அவள் உம்ரா செய்யலாம்.

நூல் : ஷாஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய இஆனதுத் தாலிபீன்

## பிள்ளைகள் மத்தியில் பாரபட்சம் காட்ட தந்திரம்

பெற்றோர்கள் தமது பிள்ளைகளுக்கு மத்தியில் பாரபட்சமாக நடக்கக் கூடாது; குறிப்பாக பொருதாரத்தை வழங்குவதில் பாரபட்சம் காட்டக்கூடாது. இச்சட்டத்தை மீறுவதற்கு மத்ஹப் சொல்லித் தரும் தந்திரத்தைப் பாருங்கள்!

والحيلة في أخذه الخ يعني إذا أراد المورث أن يخص أحد أولاده بشيء بعد موته ويأخذه من غير توقف على إجازة بقية الورثة فليوص لأجنبي ويعلق الوصية على تبرعه لولده بشيء فإذا مات الموصي وقبل الأجنبي الوصية وتبرع لولده صحت الوصية وأخذ الولد ما تبرع به عليه من غير توقف على الإجازة فهذه حيلة - إعانة الطالبين

ஒருவன் தனது மரணத்துக்குப் பின் தனது பிள்ளைகளில் ஒருவருக்கு மட்டும் அதிகப்படியாக செய்ய நாடுகிறான். மற்ற வாரிசுகளின் சம்மதமில்லாமலே அந்த ஒரு மகன் மட்டும் அதை எடுத்துக் கொள்ள வேண்டும் என்றும் விரும்புகிறான். இதற்கு ஒரு தந்திரம் உள்ளது. குறிப்பிட்ட சொத்தை ஒரு அன்னியனுக்கு வஸிய்யத் செய்ய வேண்டும். அந்த அன்னியன் அந்தச் சொத்தில் எனது இந்த மகனுக்கு இவ்வளவு கொடுக்க வேண்டும் என்ற நிபந்தனையின் அடிப்படையில் இவ்வாறு கொடுக்க வேண்டும். இவன் மரணித்ததும் அந்த சொத்தை அன்னியன் டஹ்னதாக்கிக் கொண்டு அதில் இவனது மகனுக்கு குறிப்பிட்ட சொத்தை தானமாக கொடுப்பான். இவ்வாறு பிள்ளைகள் மத்தியில் பாரபட்சம் காட்டலாம்.

நூல் ஷாஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய இஆனதுத் தாலிபீன்

பிள்ளைகள் மத்தியில் பாரபட்சம் காட்டக் கூடாது என்றும் அதுபாவம் என்றும் போதிக்கும் மார்க்கத்தில் அதை மீறுவதற்கு தந்திரம் சொல்லித் தருகின்றனர்.

பெற்ற பிள்ளைகளைப் பாரபடமாக நடக்க ஊக்குவிக்கும் இந்த மத்ஹபுகள் தேவையா?

## குற்றவியல் சட்டங்கள்

## திருட்டை ஊக்குவிக்கும் மத்ஹபுகள்

(وَإِنْ) نَقَبَ ثُمَّ (نَاوَلَهُ آخَرَ مِنْ خَارِجِ) الدَّارِ (أَوْ أَدْخَلَ يَدَهُ فِي بَيْتٍ وَأَخَذَ) وَيُسَمَّى اللِّصَّ الظَّرِيفَ. وَلَوْ وَضَعَهُ فِي النَّقْبِ ثُمَّ خَرَجَ وَأَخَذَهُ لَمْ يُقْطَعْ فِي الصَّحِيحِ . الدر المختار

ஒருவன் சுவற்றில் துளை போட்டு உள்ளே சென்று, மற்றொருவன் வீட்டுக்கு வெளியில் இருந்து பொருளை வாங்கினால், அல்லது வீட்டுக்குள் கையை விட்டு எடுத்தால் அவனது கை வெட்டப்படாது. துவாரம் போட்டு உள்ளே சென்று பொருளைத் திருடி அந்தத் துளையில் வைத்து விட்டு பின்னர் வெளியே வந்து அப்பொருளை எடுத்தாலும் அவனது கை வெட்டப்படாது.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

ஹிதாயா, மப்ஸூத், துஹ்ஃபா உள்ளிட்ட ஹனஃபி மத்ஹப் நூல்களிலும் இந்த அற்புதச் சட்டம் எழுதப்பட்டுள்ளது.

وإذا نقب اللص البيت فدخل فأخذ المال وناوله آخر خارج البيت فلا قطع عليهما -المختصر للقدوري -

( وَإِذَا نَقَبَ اللِّصُّ الْبَيْتَ فَدَخَلَ وَأَخَذَ الْمَالَ وَنَاوَلَهُ آخَرَ خَارِجَ الْبَيْتِ فَلَا قَطْعَ عَلَيْهِمَا) لِأَنَّ الْأَوَّلَ لَمْ يُوجَدْ مِنْهُ الْإِخْرَاجُ لِاعْتِرَاضِ يَدٍ مُعْتَبَرَةٍ عَلَى الْمَالِ قَبْلَ خُرُوجِهِ . وَالثَّانِي لَمْ يُوجَدْ مِنْهُ هَتْكُ الْحِرْزِ فَلَمْ تَتِمَّ السَّرِقَةُ مِنْ كُلٍّ وَاحِدٍ . الهداية -

ஒரு வீட்டில் திருடுவதற்காக இரண்டு திருடர்களில் ஒருவன் வீட்டுக்கு உள்ளே சென்று விட்டான். மற்றொருவன் வெளியே நின்று கொள்கிறான். உள்ளே சென்றவன் உள்ளே இருந்து கொண்டே ஒவ்வொரு பொருளாக வெளியில் இருப்பவனிடம் கொடுக்கிறான். வெளியில் இருப்பவன் வாங்கிக் கொள்கிறான். இவ்வாறு திருடினால் அவர்கள் தண்டிக்கப்பட மாட்டார்கள்.

காரணம் என்ன தெரியுமா? உள்ளே சென்றவன் எந்தப் பொருளையும் எடுத்துக் கொண்டு வெளியே வரவில்லையாம். அதுபோல் வெளியில் இருப்பவன் வெளியே வந்த பொருட்களைத்தான் எடுத்தானே தவிர அவன் உள்ளே நுழையவில்லையாம். அதனால் இருவரும் தண்டிக்கப்படக்கூடாது.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய குதூரி

உங்கள் வீட்டில் இவ்வாறு யாரேனும் திருடினால் விட்டு விடுவீர்களா? திருட்டை விட இது கொடூரமான செயல் அல்லவா?

இதற்கு ஆதாரமாக அமைந்த குர்ஆன் வசனம் எது? நபிமொழி எது? ஒரு ஆதாரமும் இல்லை.

பைத்தியக்காரர்களால் உருவாக்கப்பட்ட இந்த மத்ஹபுகள் தேவையா?

( وَلَا يُقْطَعُ السَّارِقُ مِنْ بَيْتِ الْمَالِ) لِأَنَّهُ مَالُ الْعَامَّةِ وَهُوَ مِنْهُمْ . قَالَ (وَلَا مِنْ مَالٍ لِلسَّارِقِ فِيهِ شَرِكَةٌ) لِمَا قُلْنَا . (الهداية شرح البداية

பைத்துல் மாலிலிருந்து திருடினால் கை வெட்டப்படாது. ஏனென்றால் அது பொதுச் சொத்தாகும். அவனும் பொதுமக்களில் ஒருவன். இவன் பங்குதாரராக உள்ள செல்வத்திலிருந்து திருடினாலும் கைவெட்டப்படாது.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய ஹிதாயா

இப்படி ஊழல் செய்வதற்கான சட்டத்தை எங்கிருந்து எடுத்தார்கள்.? இப்படி ஒரு சட்டத்தை நடைமுறைப்படுத்தினால் நாடு நாடாக இருக்குமா?

( وَلَا قَطْعَ عَلَى سَارِقِ الصَّبِيِّ الْحُرِّ وَإِنْ كَانَ عَلَيْهِ حُلِيٌّ) لِأَنَّ الْحُرَّ لَيْسَ بِمَالٍ وَمَا عَلَيْهِ مِنْ الْحُلِيِّ تَبَعٌ لَهُ , وَلِأَنَّهُ يَتَأَوَّلُ فِي أَخْذِهِ الصَّبِيَّ إسْكَاتَهُ أَوْ حَمْلَهُ إلَى مُرْضِعَتِهِ -الهداية شرح البداية -

நகைகள் அணிந்துள்ள குழந்தையை (நகையுடன்) யாரேனும் திருடிச் சென்றால் அவனது கைகளை வெட்டக் கூடாது. ஏனெனில் குழந்தை என்பது செல்வமல்ல. குழந்தையின் மீதுள்ள நகை (அவனை திருடும் போது) அவனோடு தொடர்ந்து செல்கிறது. ஏனெனில் திருடியவன் குழந்தையை அமைதிப்படுத்துவதற்காக அல்லது பாலூட்டுவபளின் பக்கம் தூக்கிச் செல்வதற்காக தூக்கிச் சென்றேன் என வியாக்கியானம் செய்யலாம்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய ஹிதாயா

( لَا) يُقْطَعُ) لَوْ سَرَقَ ضَيْفٌ مِمَّنْ أَضَافَهُ - (الدر المختار

விருந்தாளிகள் மற்றும் அவரோடு சம்பந்தப்பட்டவர்கள் திருடினால் கை வெட்டப்படாது

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முஹ்தார்

( وَلَوْ سَرَقَ شَاةً فَذَبَحَهَا وَأَخْرَجَهَا لَمْ يُقْطَعْ لِأَنَّ السَّرِقَةَ تَمَّتْ عَلَى اللَّحْمِ وَلَا قَطْعَ فِيهِ (الهداية

ஒருவன் ஒரு ஆட்டைத் திருடி அதை (அவ்விடத்திலேயே) அறுத்து பிறகு அதை வெளியே கொண்டுவந்தால் திருட்டுக் குற்றத்திற்காக அவனது கை வெட்டப்படாது. ஏனெனில் மாமிசத்தையே திருடியுள்ளான். மாமிசத்தைத் திருடினால் அதற்காக கையை வெட்டுவது இல்லை.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய ஹிதாயா

அயோக்கியர்களுக்கு புகலிடம் அளித்து அவர்களைப் பாதுகாக்கவே மத்ஹபுகள் தோன்றின என்பதற்கு இதைவிட வேறு சான்று தேவையில்லை.

## விபச்சாரத்தை ஊக்குவிக்கும் மத்ஹப்கள்

மரண தண்டனைக்குரிய கடும் குற்றமாக விபச்சாரத்தை இஸ்லாம் கருதுகிறது. விபச்சாரத்தின் பால் நெருங்கக் கூடாது என்று கடுமையான கட்டளைகளையும் பிறப்பித்துள்ளது. ஆனால் மத்ஹபு நூல்கள் விபச்சாரத்தை மென்மையான குற்றமாகச் சித்தரித்து விபச்சாரம் செய்பவர்களை தண்டனையில் இருந்து காப்பாற்றும் வகையில் சட்டங்களை உருவாக்கியுள்ளன. உதாரணமாகப் பின்வரும் சட்டத்தைப் பாருங்கள்!

رَجُلٌ اسْتَأْجَرَ امْرَأَةً لِيَزْنِيَ بِهَا فَزَنَى بِهَا فَلَا حَدَّ عَلَيْهِمَا فِي قَوْلِ أَبِي حَنِيفَةَ - المبسوط للسرخسي

ஒரு ஆண் விபச்சாரம் செய்வதற்காக ஒரு பெண்ணை வாடகைக்குப் பேசி அவளுடன் விபச்சாரம் செய்தால் அபூஹனீஃபாவின் கருத்துப்படி அவனுக்குத் தண்டனை இல்லை.

நூல்கள் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூல்களான மப்ஸூத், ஃபத்ஹுல் கதீர், கன்ஸுத்தகாயிக்

காசு கொடுக்காமல் ஓசியாக விபச்சாரம் செய்வது தான் கூடாது. காசு கொடுத்து விட்டால் அதற்குத் தண்டனை இல்லை என்று அபூஹனீஃபாவின் பெயரில் இட்டுக்கட்டியுள்ளனர்.

விபச்சாரம் செய்யும் முஸ்லிம் மன்னர்களையும், பணக்காரர்களையும் காப்பாற்றுவதற்காகவே இந்தச் சட்டம் உருவாக்கப்பட்டுள்ளது.

இதற்கு திருக்குர்ஆனிலோ, ஹதீஸ்களிலோ ஆதாரம் உண்டா என்றால் அறவே இல்லை.

இதற்கான ஆதாரம் என்ன தெரியுமா?

திருமணத்தின் போது பெண்ணுக்கு ஆண் மஹர் கொடுக்கிறான். பணம் கொடுத்து விபச்சாரம் செய்வது மஹர் கொடுத்து திருமணம் செய்வது போல் உள்ளதால் இதற்கு விபச்சாரத்துக்கான தண்டனை அளிக்கக் கூடாது.

எவ்வளவு அருமையான ஆய்வு பாருங்கள்!

விபச்சாரம் செய்து ஒருவன் மாட்டிக் கொண்டால் நான் ஓசியில் விபச்சாரம் செய்யவில்லை; அதற்கான கூலியைக் கொடுத்து விட்டுத்தான் விபச்சாரம் செய்தேன் என்று சொன்னால் அவனைத் தண்டிக்க முடியாது. உரிய கட்டணத்தைப் பெற்றுக் கொண்டு தான் நான் விபச்சாரம் செய்தேன் என்று விபச்சாரம் செய்த பெண் கூறினால் தண்டிக்கப்பட மாட்டாள்.

மஹர் கொடுப்பது மட்டும் தான் திருமணமா?

*திருமணத்திற்கு பெண்ணின் வலி எனும் பொறுப்பாளன் இருக்க வேண்டும்.

*சாட்சிகள் இருக்க வேண்டும்.

*ஊரறிய ஒப்பந்தம் நடைபெற வேண்டும்.

*இவ்வொப்பந்தத்தினால் அவளது எல்லாச் செலவுகளையும் இவன் ஏற்க வேண்டும்.

*அவள் பெற்றெடுக்கும் குழந்தைகளையும் அவன் ஏற்றுக் கொள்ள வேண்டும்.

*அவன் திடீரென்று மரணித்துவிட்டால் அப்பெண் அவனது சொத்துக்களுக்கு வாரிசாவாள்.

என்றெல்லாம் முக்கியமான பல அம்சங்களைக் கொண்டது திருமணம். மஹர் வாங்க ஒரு பெண்ணுக்கு விருப்பம் இல்லாவிட்டால் மஹர் வாங்காமலும் திருமணம் செய்யலாம்.

இப்படி பல அம்சங்கள் திருமணத்தில் அடங்கியுள்ளன. ஆனால் இவர்களின் மூளை எப்படி வேலை செய்கிறது என்று பாருங்கள்! விபச்சாரத்தின் போது கூலி கொடுத்து விட்டதால் அது விபச்சாரம் தானா? என்று இவர்களுக்குச் சந்தேகம் வருகிறதாம்! அதனால் தண்டிக்க முடியாதாம்.

இத்தகைய சந்தேகம் மூளைக்குப் பதிலாக மண்டையில் களிமண் இருப்பவர்களுக்குத் தான் வருமே தவிர மூளையுள்ள ஒரு மனிதனுக்குக் கூட வராது.

இன்னும் ஒருபடி மேலே போய் பேசுவதென்றால் கூலி இல்லாமல் ஒரு பெண் விபச்சாரம் செய்தால் உணர்ச்சி வசப்பட்டுச் செய்தாள் என்று கருதலாம். கூலிக்குச் செய்தால் அதை ஒரு தொழிலாகச் செய்கிறாள் என்று தான் கருத முடியும்.

விபச்சாரத்தைக் குற்றச் செயல் என்று கருதாத இந்தியா போன்ற பல நாடுகளில் கூலிக்கு விபச்சாரம் செய்வது குற்றமாக்கப்பட்டுள்ளதைக் காண்கிறோம்.

இந்தச் சாதாரண அறிவு கூட இல்லாதவர்களால் எழுதப்பட்ட நூல்களைத் தான் இவர்கள் சட்ட நூலாக வைத்துள்ளனர்.

மார்க்க அறிவும், இறையச்சமும் உள்ள ஒருவரால் இப்படிக் கூற முடியுமா? தரம் கெட்ட இவர்கள் காட்டிய வழியில் நமது தொழுகை உள்ளிட்ட வணக்கங்களை அமைத்துக் கொண்டால் மறுமையில் வெற்றி பெற முடியுமா?

## விபச்சாரம் செய்துவிட்டு தப்பிப்பது எப்படி?

விபச்சாரம் என்ற பெரும்பாவம சமுதாயத்தில் இருக்கக் கூடாது என்பதற்காகவே இஸ்லாம் இதற்குக் கடுமையான தண்டனையை வழங்குகிறது. ஆனால் மத்ஹபுச் சட்டத்தின் படி விபச்சாரம் செய்யும் யாரும் தண்டிக்கப்பட மாட்டார்கள். அதற்கான குறுக்கு வழியை மத்ஹபு நூல்கள் சொல்லித் தருகின்றன.

وَفِي الْبَحْرِ لَوْ ادَّعَى أَنَّهَا زَوْجَتُهُ فَلَا حَدَّ وَإِنْ كَانَتْ زَوْجَةً لِلْغَيْرِ وَلَا يُكَلَّفُ إقَامَةَ الْبَيِّنَةِ- رد المحتار

(விபச்சாரம் செய்யும் போது பிடிபட்டவன் விபச்சாரியை) எவ்வித ஆதாரமும் இல்லாமல் இது எனது மனைவி என்று சொன்னால் அவனுக்குத் தண்டனை இல்லை. அவள் அடுத்தவரின் மனைவியாக இருந்தாலும் சரியே.

நூல்: ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முஹ்தார்

விபச்சாரம் செய்யும் போது மாட்டிக் கொண்டு விட்டால் பிரச்சனையே இல்லை. அவளைத் தன் மனைவி என்று சொல்லி விட்டால் போதும். ஹனஃபி மத்ஹபின் படி அவர்களைத் தண்டிக்கக் கூடாது.

இன்றைக்கு லாட்ஜ்களில் விபச்சாரம் செய்து போலீஸில் மாட்டிக் கொள்ளும் போது, ரெடிமேட் தாலியைக் காட்டி, இவள் என் மனைவி என்று கூறுகின்றார்களே! ஹனஃபி மத்ஹபின் இந்தத் தந்திரத்தைத் தான் அவர்கள் கையாள்கின்றார்களோ என்ற ஐயம் ஏற்படுகின்றது.

## ஊமையைச் சீரழித்தால் தண்டனை இல்லை

لو زَنَى بِامْرَأَةٍ خَرْسَاءَ لَا حَدَّ على وَاحِدٍ مِنْهُمَا البحر الرائق -

ஒருவன் ஓர் ஊமைப் பெண்ணிடம் விபச்சாரம் செய்து விட்டால் இருவரில் எவர் மீதும் தண்டனை இல்லை.

நூல்: ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய அல்பஹ்ருர் ராயிக்

قال ولا يؤخذ الأخرس بحد الزنا ولا بشيء من الحدود وإن أقر به بإشارة أو كتابة أو شهدت به عليه شهود وعند الشافعي رحمه الله تعالى يؤخذ بذلك لأنه نفس مخاطبة فهو كالأعمى أو أقطع اليدين أو الرجلين ولكنا نقول إذا أقر به بالإشارة فالإشارة بدل عن العبارة والحد لا يقام بالبدل ولأنه لا بد من التصريح بلفظة الزنا في الإقرار وذلك لا يوجد في إشارة الأخرس إنما الذي يفهم من إشارته الوطء فلو أقر الناطق بهذه العبارة لا يلزمه الحد فكذلك الأخرس وكذلك إن كتب به لأن الكتابة تتردد والكتابة قائمة مقام العبارة والحد لا يقام بمثله وكذلك إن شهدت الشهود عليه بذلك لأنه لو

كان ناطقا ربما يدعي شبهة تدرأ الحد وليس كل ما يكون في نفسه يقدر على إظهاره بالإشارة فلو أقمنا عليه كان إقامة الحد مع تمكن الشبهة ولا يوجد مثله في الأعمى والأقطع لتمكنه من إظهار دعوى الشبهة المبسوط للسرخسي

(ஊமையல்லாத) ஒருவன் ஓர் ஊமைப் பெண்ணிடம் விபச்சாரம் செய்து விட்டால் அல்லது ஓர் ஊமையானவன், (ஊமையல்லாத) ஒரு பெண்ணிடம் விபச்சாரம் செய்து விட்டால் தண்டனை இல்லை.

தான் விபச்சாரம் செய்ததாக சைகை அல்லது எழுத்து மூலம் ஒப்புக் கொண்டாலும், அல்லது விபச்சாரம் செய்ததாக சாட்சிகள் அவனுக்கு எதிராக சாட்சி சொன்னாலும் விபச்சாரத் தண்டனை கொண்டோ மற்ற தண்டனைகளைக் கொண்டோ அவன் தண்டிக்கப்பட மாட்டான்.

ஆனால் இமாம் ஷாஃபி (ரஹ்) அவர்கள், "அவனுக்குத் தண்டனை வழங்க வேண்டும். காரணம், அவன் குருடன் அல்லது கைநொண்டியை அல்லது கால்நொண்டியைப் போன்று தண்டனை பெறுவதற்குத் தகுதியானவன் தான்" என்று கூறுகின்றார்கள்.

இமாம் ஷாஃபியின் வாதத்திற்கு நாம் அளிக்கும் பதில் இது தான்.

ஊமை தனது குற்றத்தை சைகை மூலம் தான் ஒப்புக் கொள்கிறான். வாக்கு மூலத்திற்குப் பதிலாக வந்து நிற்கும் இந்த சைகையை வைத்துக் கொண்டு இவனைத் தண்டிக்க முடியாது. தண்டனை நிறைவேற்றப்படும் வேளையில் ஒருவன், தான் விபச்சாரம் செய்ததாகத் தெளிவான வாக்குமூலம் அளிப்பது மிகவும் இன்றியமையாத ஒன்றாகும்.

இது ஊமையின் சைகையில் பெறப்படுவதில்லை. இவனுடைய சைகையின் மூலம் பெறப்படுவது உடலுறவு என்பது மட்டும் தான். எப்படி, வாய் பேசக் கூடிய ஒருவன் கூட இதே வார்த்தையைச் சொல்லி விடுவதால் தண்டனை கடமையாகி விடாதோ அது போல் ஊமையின் சைகை மூலமும் தண்டனை கடமையாகி விடாது.

இது போலத் தான் ஊமையின் எழுத்துப்பூர்வமான விண்ணப்பம். ஏனெனில் எழுத்து தடுமாறும். இவ்வாறு வாக்கு மூலத்திற்குப் பதிலாக வந்து நிற்கும் இந்த எழுத்தைக் கொண்டு தண்டனை வழங்கக் கூடாது.

அது போலவே விபச்சாரம் செய்தான் என்று அவனுக்கு எதிராக சாட்சிகள் சாட்சி சொன்னாலும் ஊமை தண்டிக்கப்பட மாட்டான். ஏனெனில் அந்த ஊமை வாய் திறந்து பேசினால் சட்டப்படி தன்னைப் பிடிக்க முடியாத வாதத்தை எடுத்து வைத்து, தன்னைத் தண்டனையின் பிடியிலிருந்து விடுவித்துக் கொள்ளலாம் அல்லவா?

அவன் தன்னுடைய மனதில் பட்டதையெல்லாம் சைகை மூலம் வெளிப்படுத்த முடியாதல்லவா? இதன் பின்னரும் நாம் தண்டனை நிறைவேற்றினால், தண்டனையிலிருந்து அவன் தன்னை விடுவித்துக் கொள்ளக் கூடிய வாய்ப்பு அவனுக்கு இருந்தும் அவனை நாம் (முறையற்று) தண்டித்ததாக ஆகி விடும்.

குருடர், நொண்டியின் நிலை இது போன்றதல்ல. காரணம், அவர்களுக்குத் தங்களை தண்டனையின் பிடியிலிருந்து விடுவித்துக் கொள்ளும் வாய்ப்பு இருக்கிறது.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய மப்சூத்

எவ்வளவு கொடூரமாக சிந்தித்து ஆய்வு செய்துள்ளனர் என்று தெரிகிறதா?

மத்ஹப் ஆலிம்சாக்களின் மகளை ஊமை ஒருவன் சீரழித்து விட்டால் அவரால் இந்த ஃபத்வாவை மனப்பூர்வமாக ஒப்புக் கொள்ள முடியுமா? மத்ஹபைப் பின்பற்றும் ஒருவனது குடும்பத்தில் ஊமைப் பெண்ணுக்கு இது போல் கொடுமை இழைக்கப்படும் போது இந்த பத்வாவைக் கொடுத்தால் அவன் ஏற்றுக் கொள்வானா?

வடிகட்டிய மூடர்களாலும் கொடியவர்களாலும் உருவாக்கப்பட்ட மத்ஹபை தலைமுழுக வேண்டாமா?

## சிறுமியைச் சீரழித்தால் தண்டனை இல்லை

பொதுவாகப் பெண்களைச் சீரழிப்பது உலகம் முழுவதும் குற்றமாகக் கருதப்படுகிறது. அதிலும் குறிப்பாக வயதுக்கு வராத சிறுமிகளைச் சீரழிப்பது மிகப்பெரும் குற்றமாகக் கருதப்படுகிறது. ஆனால் இந்த மத்ஹறப் சட்டத்தைப் பாருங்கள்!

وَإِنْ زَنَى بِصَبِيَّةٍ لَا يُجَامَعُ مِثْلُهَا فَأَفْضَاهَا فَلَا حَدَّ عَلَيْهِ ؛ لِأَنَّ وُجُوبَ حَدِّ الزِّنَا يَعْتَمِدُ كَمَالَ الْفِعْلِ، وَكَمَالُ الْفِعْلِ لَا يَتَحَقَّقُ بِدُونِ كَمَالِ الْمَحَلِّ، فَقَدْ تَبَيَّنَ أَنَّ الْمَحَلَّ لَمْ يَكُنْ مَحَلًّا لِهَذَا الْفِعْلِ حِينَ أَفْضَاهَا بِخِلَافِ مَا إذَا زَنَى بِهَا وَلَمْ يُفْضِهَا ؛ لِأَنَّهُ تَبَيَّنَ أَنَّهَا كَانَتْ مَحَلًّا لِذَلِكَ الْفِعْلِ حِين احْتَمَلَتْ الْجِمَاعَ، وَلِأَنَّ الْحَدَّ مَشْرُوعٌ لِلزَّجْرِ، وَإِنَّمَا يُشْرَعُ الزَّجْرُ فِيمَا يَمِيلُ الطَّبْعُ إلَيْهِ، وَطَبْعُ الْعُقَلَاءِ لَا يَمِيلُ إلَى وَطْءِ الصَّغِيرَةِ الَّتِي لَا تُشْتَهَى وَلَا تَحْتَمِلُ الْجِمَاعَ فَلِهَذَا لَا حَدَّ عَلَيْهِ وَلَكِنَّهُ يُعَزَّرُ لِارْتِكَابِهِ مَا لَا يَحِلُّ لَهُ شَرْعًا - المبسوط

உடலுறவுக்குத் தகுதியில்லாத சிறுமியிடம் ஒருவன் விபச்சாரம் செய்து, உள்ளே செலுத்தி விட்டால் அவனுக்குத் தண்டனை இல்லை. ஏனெனில், முதலாவதாக, விபச்சாரத்திற்கான தண்டனை உறுதி பெறுவது முழுமையான உடலுறவு மூலமாகத் தான். முழுமையான உடலுறவு முழுக்கத் தகுதியான இடத்திலேயே தவிர ஏற்படாது. இரண்டாவதாக, தண்டனை விதியாக்கப்படுவது அச்சுறுத்துவதற்காகவே! அச்சுறுத்தல் என்பது மனித மனம் மையல் கொள்ளும் போது தான் அவசியமாகும். அறிவாளிகளின் மனம், பார்த்தால் ஆசை வராத, உடலுறவுக்குத் தகுதியில்லாத சிறுமியிடம் உடலுறவு கொள்ள விரும்பாது. எனவே சிறுமியிடம் விபச்சாரம் செய்தவனுக்குத் தண்டனை இல்லை.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய மப்ஸூத்

நிபுணர்கள் என்ற பெயரில் சட்டம் இயற்றும் இவர்கள் எந்த அளவுக்கு மூடர்களாகவும், கொடியவர்களாகவும் உள்ளனர் என்பதற்கு இது தக்க சான்றாக உள்ளது.

உடலுறவுக்குத் தகுதியில்லாத சிறுமிக்கு மிகப்பெரும் கொடுமையை இழைத்தவனுக்கு முழு இன்பம் கிடைக்காததால் தண்டனை இல்லை என்று எழுதியவன் மனித இனத்தில் சேர்க்கவே தகுதியற்றவனாவான்.

இம்மத்ஹபைச் சேர்ந்த ஒருவரின் குடும்பத்தில் ஒரு பெண்ணுக்கு இதுபோல் கொடுமை இழைக்கப்பட்டு இதற்காக தண்டனை இல்லை என்று ஃபத்வா

வழங்கினால் அதை அவரால் ஏற்க முடியுமா? சிந்தித்துப் பார்த்து மத்ஹபைத் தூக்கி எறியுங்கள்!

### முஸ்லிமல்லாதவருடன் விபச்சாரம் செய்தால் தண்டனை இல்லை!

விபச்சாரம் கொடிய குற்றமாக இருந்தாலும் முஸ்லிம் ஒருத்தி முஸ்லிமல்லாத ஒருவருடன் விபச்சாரம் செய்வதை மிகக் கடுமையாகக் கருத வேண்டும். ஆனால் முஸ்லிம் பெண்களுடன் முஸ்லிமல்லாதவன் விபச்சாரம் செய்தால் அதற்கான தண்டனை குறித்து மத்ஹப் கூறுவதைப் பாருங்கள்!

وَلَوْ زَنَى حَرْبِيٌّ مُسْتَأْمَنٌ بِمُسْلِمَةٍ أَوْ ذِمِّيَّةٍ لَا يُحَدُّ الْحَرْبِيُّ وَهُوَ كَغَائِبٍ عِنْدَ أَبِي حَنِيفَةَ وَتُحَدُّ الذِّمِّيَّةُ أَوْ الْمُسْلِمَةُ، وَعِنْدَ مُحَمَّدٍ لَا يُحَدَّانِ جَمِيعًا كَمَجْنُونٍ زَنَى بِعَاقِلَةٍ وَعِنْدَ أَبِي يُوسُفَ يُحَدَّانِ جَمِيعًا كَذِمِّيٍّ زَنَى بِذِمِّيَّةٍ فَإِنَّهُمَا يُحَدَّانِ جَمِيعًا بِالْإِجْمَاعِ ثُمَّ الْأَصْلُ أَنَّ الْحَدَّ مَتَى سَقَطَ عَنْ أَحَدِ الزَّانِيَيْنِ بِالشُّبْهَةِ سَقَطَ عَنْ الْآخَرِ لِلشَّرِكَةِ كَمَا إذَا ادَّعَى أَحَدُهُمَا النِّكَاحَ، وَالْآخَرُ يُنْكِرُ وَمَتَى سَقَطَ لِقُصُورِ الْفِعْلِ فَإِنْ كَانَ الْقُصُورُ مِنْ جِهَتِهَا سَقَطَ الْحَدُّ عَنْهَا وَلَمْ يَسْقُطْ عَنْ الرَّجُلِ كَمَا إذَا كَانَتْ صَغِيرَةً أَوْ مَجْنُونَةً أَوْ مُكْرَهَةً أَوْ نَائِمَةً وَإِنْ كَانَ الْقُصُورُ مِنْ جِهَتِهِ سَقَطَ عَنْهُمَا جَمِيعًا كَمَا إذَا كَانَ مَجْنُونًا أَوْ صَبِيًّا أَوْ مُكْرَهًا ثُمَّ حَدُّ السَّرِقَةِ، وَالزِّنَا لَا يُقَامُ عَلَى الْمُسْتَأْمَنِ عِنْدَهُمَا.الجوهرة النيرة

لَا يَجِبُ الْحَدُّ بِزِنَا رَجُلٍ حَرْبِيِّ مُسْتَأْمِنٍ بِذِمِّيَّةٍ فِي حَقِّ الْحَرْبِيِّ الْمُسْتَأْمِنِ وَأَمَّا الذِّمِّيَّةُ فَتُحَدُّ وَهَذَا عِنْدَ أَبِي حَنِيفَةَ رَحِمَهُ اللَّهُ وَكَذَا لَوْ زَنَى بِمُسْلِمَةٍ تُحَدُّ الْمُسْلِمَةُ دُونَهُ عِنْدَهُ وَعِنْدَ أَبِي يُوسُفَ يُحَدُّ الْمُسْتَأْمِنُ أَيْضًا وَعِنْدَ مُحَمَّدٍ لَا يُحَدُّ وَاحِدٌ مِنْهُمَا- تبيين الحقائق

அபயமளிக்கப்பட்ட எதிரி நாட்டைச் சேர்ந்தவன், அல்லது இஸ்லாமியக் குடியரசின் கீழ் வாழும் பிற மதத்தைச் சேர்ந்தவன் முஸ்லிம் பெண்ணிடம் விபச்சாரம் செய்தால் முஸ்லிம் பெண்ணுக்குத் தான் விபச்சாரத் தண்டனை! அவனுக்குக் கிடையாது என்பது அபூஹனீஃபாவின் கருத்தாகும்.

இருவரில் எவருக்கும் தண்டனை கிடையாது என்பது ஹனஃபி அறிஞர் முஹம்மதின் கருத்தாகும்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய மப்ஸூத்

முஸ்லிம் பெண்களுடன் விபச்சாரம் செய்தால் தண்டனை இல்லை என்ற சட்டத்தால் ஏற்படும் விளைவுகள் என்ன? முஸ்லிமல்லாதவர்கள் முஸ்லிம் பெண்களுடன் விபச்சாரம் செய்ய அது ஊக்கமளிக்கும். இருவருக்கும் தண்டனை இல்லை என்றால் அதனால் என்ன விளைவு ஏற்படும்? முஸ்லிம் ஆணுடன் விபச்சாரம் செய்தால் தண்டிக்கப்படுவோம். முஸ்லிமல்லாத

ஆணுடன் விபச்சாரம் செய்தால் எந்த தண்டனையும் இல்லை என்று அறியும் போது நல்ல பெண்களும் விபச்சாரத்தை துணிந்து செய்ய ஊக்கமளிக்கும்.

முஸ்லிம்களை அழிக்க நினைக்கும் கூட்டத்தினர் தான் இச்சட்டத்தை இயற்றி இருக்க முடியும். சராசரி முஸ்லிம் கூட இதை இயற்றி இருக்க முடியாது என்று பளிச்சென்று தெரிகிறது.

## பிறன் மனைவியை தன் மனைவி என்று கூறினால் தண்டனை இல்லை

பிறர் மனைவியுடன் ஒருவன் விபச்சாரம் செய்து சாட்சிகளுடன் கையும் களவுமாகப் பிடிபட்டாலும் அவன் தண்டனையில் இருந்து தப்பிக்க வழி இருக்கிறது என்று மத்ஹப் சட்டங்கள் கூறுகின்றன.

இதோ அந்தச் சட்டத்தைப் பாருங்கள்!

ادَّعَى الزَّانِي أَنَّهَا زَوْجَتُهُ سَقَطَ الْحَدُّ عَنْهُ وَإِنْ) كَانَتْ (زَوْجَةً لِلْغَيْرِ) بِلَا بَيِّنَةٍ- الدر المختار

விபச்சாரம் செய்தவன் அவள் தன் மனைவி என்று எவ்வித ஆதாரமும் இல்லாமல் வாதிட்டாலும், அவள் மற்றொருவனின் மனைவியாக இருந்தாலும் அவனுக்குத் தண்டனை இல்லை.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

وَلَوْ قَالَ هِيَ امْرَأَتِي أَوْ أَمَتِي لَا حَدَّ عَلَيْهِ وَلَا عَلَى الشُّهُودِ. اهـ. وَفِي الْبَحْرِ لَوْ ادَّعَى أَنَّهَا زَوْجَتُهُ فَلَا حَدَّ وَإِنْ كَانَتْ زَوْجَةً لِلْغَيْرِ وَلَا يُكَلَّفُ إقَامَةَ الْبَيِّنَةِ لِلشُّبْهَةِ- الدر المختار

அவள் என் மனைவி என்றோ என் அடிமை என்றோ அவன் கூறினால் அவன் மீதும் தண்டனை இல்லை. அவனுக்கு எதிராக சாட்சி சொன்னவர்கள் மீதும் தண்டனை இல்லை. அவள் பிறன் மனைவியாக இருந்தாலும் சரியே. உன் மனைவி என்பதற்கான ஆதாரத்தைக் காட்டு என்று அவனைக் கட்டாயப்படுத்தக் கூடாது.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

இந்தச் சட்டத்தை இயற்றியவர்கள் அறிவாளிகள் என்றோ, இறையச்சமுடையவர்கள் என்றோ கருத முடியுமா?

விபச்சாரம் செய்து மாட்டிக் கொண்டால் இவள் என் மனைவி என்று சொல்வதன் மூலம் தண்டனையில் இருந்து அவன் தப்பித்துக் கொள்ளலாம். அவள் என் மனைவி தான் என்பதற்கு எந்த ஆதாரத்தையும் கேட்காமல் அப்படியே நம்பி அவனை விட்டுவிட வேண்டுமாம். நான்கு சாட்சிகள் இவன் செய்த விபச்சாரத்துக்கு சாட்சி கூறினாலும், அந்தப் பெண் மற்றவனின் மனைவியாக இருந்தாலும் அதை எல்லாம் கண்டு கொள்ளக் கூடாதாம்.

இந்தச் சட்டத்தை உங்கள் மனசாட்சி ஏற்குமா? இப்படி ஒரு சட்டம் இருந்தால் விபச்சாரம் செய்த ஒருவனாவது தண்டிக்கப்படுவானா? மனிதகுலத்தை நாசமாக்குக்கும் மத்ஹபு என்ற நச்சுக் கிருமியை ஒழித்துக்கட்ட வேண்டாமா?

## ஆபாச சட்டங்கள்

### விபச்சாரத்துக்கான தண்டனையில் இருந்து தப்பிக்க தந்திரம்

விபச்சாரம் செய்பவர்களுக்கு 100 கசையடி அடிக்க வேண்டும். இது திருக்குர்ஆன் கூறும் சட்டம். அவ்வாறு கசையடிப்பதால் விபச்சாரம் குறையும் என்பது இதற்கான காரணம்.

ஷாஃபி மத்ஹபின் சட்ட நூலான மஙானி எனும் தமிழ்நூலில் இது குறித்து எழுதியுள்ள சட்டத்தைப் பாருங்கள்!

ஐம்பது சிறு குச்சிகளுள்ள ஒரு கட்டினால் இரண்டு தடவை அடித்தாலும் நூறு அடிகள் நிறைவேறிவிடும். ஆனால், அதிலுள்ள ஒவ்வொரு குச்சியும் அவனுடைய மேனியில் பட வேண்டும்.

விபச்சாரம் செய்தவனுக்கு நூறு கசையடிகள் கொடுப்பதற்குப் பதிலாக ஐம்பது மெல்லிய குச்சிகளை ஒன்றாக இணைத்துக் கட்ட வேண்டுமாம்! ஐம்பது குச்சிகளும் விபச்சாரம் செய்தவனின் மேனியில் படுமாறு இரண்டு தடவை குத்த வேண்டுமாம். இவ்வாறு செய்தால் நூறு கசையடி அடித்ததாக ஆகிவிடுமாம்.

இந்தக் குற்றத்துக்கு இதுதான் தண்டனையா? இவ்வாறு செய்தால் விபச்சாரம் ஒழிந்து விடுமா? நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இவ்வாறு தான் கசையடி அடித்தார்களா?

இதை நியாயப்படுத்த மத்ஹபு உலமாக்கள் பின்வரும் ஹதீஸை ஆதாரமாகக் காட்டுகின்றனர்.

مسند أحمد 21935 - حَدَّثَنَا يَعْلَى بْنُ عُبَيْدٍ، (2) حَدَّثَنَا مُحَمَّدٌ يَعْنِي ابْنَ إِسْحَاقَ، عَنْ يَعْقُوبَ بْنِ عَبْدِ اللهِ بْنِ الْأَشَجِّ، عَنْ أَبِي أُمَامَةَ بْنِ سَهْلٍ، عَنْ سَعِيدِ بْنِ سَعْدِ بْنِ عُبَادَةَ، قَالَ: كَانَ بَيْنَ أَبْيَاتِنَا إِنْسَانٌ مُخْدَجٌ ضَعِيفٌ، لَمْ يُرَعْ أَهْلُ الدَّارِ إِلَّا وَهُوَ عَلَى أَمَةٍ مِنْ إِمَاءِ الدَّارِ يَخْبُثُ بِهَا، وَكَانَ مُسْلِمًا، فَرَفَعَ شَأْنَهُ سَعْدٌ إِلَى رَسُولِ اللهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ فَقَالَ: " اضْرِبُوهُ حَدَّهُ " قَالُوا: يَا رَسُولَ اللهِ، إِنَّهُ أَضْعَفُ مِنْ ذَلِكَ، إِنْ ضَرَبْنَاهُ مِائَةً قَتَلْنَاهُ قَالَ: " فَخُذُوا لَهُ عِثْكَالًا فِيهِ مِائَةُ شِمْرَاخٍ، فَاضْرِبُوهُ بِهِ ضَرْبَةً وَاحِدَةً، وَخَلُّوا سَبِيلَهُ "

"நான், என்னிடம் வந்த ஒரு பெண்ணிடம் உடலுறவு கொண்டு விட்டேன்" என்று ஒருவர் கூறினார். விபச்சாரம் புரிந்த அந்த மனிதரைப் பற்றி நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் தகவல் தெரிவித்த ஸஹாபாக்கள், "அவரை உங்களிடம் தூக்கிக் கொண்டு வந்தால் அவருடைய எலும்புகள் நொறுங்கிப் போய்விடும் அளவுக்குக் கடும் நோய் வாய்ப்பட்டவராக அவர் இருக்கிறார்" என்றும் "இவருக்கு ஏற்பட்டுள்ளது போன்ற துன்பம் வேறு எந்த மனிதருக்கும் ஏற்பட்டதாக நாங்கள் கருதவில்லை" என்றும் "எலும்பில் தோல் மட்டுமே உள்ளது" (சதையே இல்லை) என்றும் கூறினார்கள். அப்போது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், 100 குச்சிகளை எடுத்து அவற்றைக் கொண்டு ஓர் அடி அடிக்குமாறு கட்டளையிட்டார்கள்.

நூல் : அஹ்மது

எந்த மனிதரும் சந்தித்திராத அளவுக்கு அம்மனிதர் மோசமாக நோய்வாய்ப் பட்டிருக்கிறார்; சதை என்பது அறவே இல்லை; அவரைத் தூக்கிக் கொண்டு வந்தால் எலும்பு நொறுங்கி விடும் என்று இதில் சொல்லப்பட்டுள்ளது.

இந்த நிலையில் உள்ள ஒருவரால் எப்படி விபச்சாரம் செய்ய முடியும்? தூக்கிக்கொண்டு வந்தால் எலும்பு முறிந்து விடும் என்றால் அவர் விபச்சாரம் செய்யும் போதே எலும்புகள் முறிந்திருக்குமே?

விபச்சாரம் செய்யும் அளவுக்கு அந்த மனிதர் திடகாத்திரமாக இருந்தார் என்றும், தூக்கினாலே எலும்பு முறிந்து விடும் என்ற நிலையில் இருந்தார் என்றும் தனக்குத் தானே இந்த ஹதீஸ் முரண்படுவதால் இதை ஆதாரமாகக் கொள்ள முடியாது.

அப்படி ஆதாரமாகக் கொண்டாலும் மஙானி என்ற நூலில் பொதுவாக விபச்சாரம் செய்யும் எவருக்கும் இந்தச் சட்டத்தை அமுல்படுத்தலாம் என்று தான் உள்ளது.

விபச்சாரம் செய்யும் பிரமுகர்களைத் தண்டனையில் இருந்து காப்பாற்றவே இது போல் ஃபத்வாக்களை எழுதி வைத்துள்ளனர் என்பது தான் உண்மையாகும்.

## மிருகத்தனமான சட்டம்

உளுவை முறிக்கும் காரியங்கள் யாவை? குளிப்பைக் கடமையாக்கும் காரியங்கள் யாவை என்பதை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் விளக்கியுள்ளனர்.

ஆனால் மத்ஹபு நூல்கள் இச்சட்டத்தைக் கூறும் சாக்கில் எவ்வளவு கேவலமாகவும், ஆபாசமாகவும் கற்பனை செய்துள்ளனர்.

பெண்கள் எந்தக் காரியத்தைச் செய்தால் அவர்களுக்கு குளிப்பு கடமையாகாது என்பதை மத்ஹபு நூல் எப்படி விளக்குகிறது என்பதைப் பாருங்கள்!

(وَ) لَا عِنْدَ (إدْخَالِ إصْبَعٍ وَنَحْوِهِ) كَذَكَرٍ غَيْرِ آدَمِيٍّ وَذَكَرِ خُنْثَى وَمَيِّتٍ وَصَبِيٍّ لَا يَشْتَهِي وَمَا يُصْنَعُ مِنْ نَحْوِ خَشَبٍ (فِي الدُّبُرِ أَوْ الْقُبُلِ) عَلَى الْمُخْتَارِ (وَ) لَا عِنْدَ (وَطْءِ بَهِيمَةٍ أَوْ مَيْتَةٍ أَوْ صَغِيرَةٍ غَيْرِ مُشْتَهَاةٍ) بِأَنْ تَصِيرَ مُفْضَاةً بِالْوَطْءِ وَإِنْ غَابَتْ الْحَشَفَةُ وَلَا يَنْتَقِضُ الْوُضُوءُ، فَلَا يَلْزَمُ إلَّا غَسْلُ الذَّكَرِ- الدر المختار

விரலையோ, மனிதனல்லாத உயிரினங்களின் ஆணுறுப்பையோ, அரவாணியின் ஆணுறுப்பையோ, பினத்தின் ஆணுறுப்பையோ, ஆசை வைக்க முடியாத சிறுவனின் ஆணுறுப்பையோ, மரத்தால் செய்யப்பட்ட செயற்கை ஆணுறுப்பையோ ஒரு பெண் தனது முன் துவாரத்திலோ, பின் துவாரத்திலோ நுழைத்தால் அவளுக்கு குளிப்பு கடமையாகாது. மிருகத்துடனோ, செத்த பிணத்துடனோ, ஆசை வைக்க முடியாத சிறுமியுடனோ, ஒரு ஆண் உடலுறவு

கொண்டால் அவன் மீது குளிப்பு கடமை இல்லை. உளூவும் முறியாது. உறுப்பைக் கழுவினால் போதும்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

அல்லாஹ்வுக்கு அஞ்சி நடக்கும் மூமினான பெண்கள் செய்ய அஞ்சும் கேவலமான காரியங்களை மூமினான பெண்கள் செய்வார்கள் என்று சித்தரித்துள்ளனர். ஒரு மூமினான பெண் செத்தவனின் ஆணுறுப்பை, அல்லது மிருகங்களின் ஆணுறுப்பை, பச்சிளம் பாலகனின் ஆணுறுப்பை, அல்லது செயற்கையான ஆணுறுப்பை தனது முன் துவாரத்தில் நுழைத்தால், அல்லது பின் துவாரத்தில் நுழைத்தால் குளிப்பு கடமையில்லை என்று எழுதியவன் இமாமாக இருப்பானா? கஞ்சா போதையில் காமவெறியில் ஊறித்திளைத்தவனாக இருப்பானா? இப்படி அசிங்கம் பிடித்த செய்திகளை மார்க்கம் என்ற பெயரில் படித்தவர்கள் ஆலிம்களாக இருப்பார்களா? காம லோலன்களாக இருப்பார்களா? சிந்தித்துப் பாருங்கள்!

அது போல் மூமினான ஆண்கள், செத்த பெண்ணுடன், அல்லது பச்சிளம் குழந்தையுடன் உறவு கொள்வார்களா?

இப்படிச் செய்யத் துணிந்தவன் குளிப்பு எப்போது கடமை என்று மார்க்கத்தை அறியத் துடிப்பானா?

தங்களின் ஆபாச வக்கிர எண்ணங்களுக்குத் தீனி போடுவதற்கே இவ்வாறு எழுதி வைத்துள்ளனர்.

அட கேடுகெட்ட மூடர்களே இந்தக் கேடு கெட்ட செயலைச் செய்தால் குளிப்பு கடமை இல்லை என்றும் உளூ முறியாது என்றும் இயற்றிய சட்டத்துக்கு எந்தக் குர்ஆன் வசனம் ஆதாரம்? எந்த ஹதீஸ் ஆதாரம்?

இதுபோல் செக்ஸ் கதைகளைப் பாடத்திட்டத்தில் வைத்து வெட்கமில்லாமல் இதைப் படித்துக் கொடுத்து ஆலிம் பட்டம் வழங்குகிறார்கள்.

மத்ஹபு இமாம்களின் வக்கிர புத்திக்கு மற்றொரு உதாரணம் பாருங்கள்!

## கற்பனைக்கும் எட்டாத ஆபாசக் கற்பனை

يَعْنِي لَوْ فِي دُبُرِ غَيْرِهِ، أَمَّا فِي دُبُرِ نَفْسِهِ فَرَجَّحَ فِي النَّهْرِ عَدَمَ الْوُجُوبِ إلَّا بِالْإِنْزَالِ الدر المختار

ஒருவன் தனது ஆணுறுப்பை தனது பின் துவாரத்தில் நுழைத்தால், விந்து வெளிப்படாவிட்டால் குளிப்பு கடமையில்லை.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

இறையச்சமுடைய எந்த மனிதனாவது இப்படியெல்லாம் கற்பனை செய்வானா? இந்தச் சட்டம் எந்த வசனத்தின் அடிப்படையில் உருவாக்கப்பட்டது? எந்த நபிமொழியின் அடிப்படையில் இது இயற்றப்பட்டது?

சில ஆபாச சட்டங்களைப் பற்றி நாம் கேள்வி எழுப்பும் போது அப்படி யாராவது நடந்து விட்டால் அதற்கான சட்டம் என்ன என்பதைச் சொல்ல வேண்டாமா? அதற்காகத் தான் எங்கள் இமாம்கள் இப்படி தூரநோக்குடன் ஆய்வு செய்துள்ளனர் என்று உளறுவார்கள்.

இந்தச் சட்டத்துக்கு அப்படி உளறக் கூட முடியாது. தனது ஆணுறுப்பை தனது பின் துவாரத்தில் நுழைத்தல் என்பது யாருக்கும் நடக்காத நடக்க சாத்தியமில்லாத ஒன்றாகும்.

ஒருவன் மிருக உணர்வு மேலோங்கியவனாக இருந்தாலும் இப்படி நடக்க சாத்தியமில்லை என்று தெரிந்து கொண்டே ஆபாசமாகக் கற்பனை செய்கிறார்கள் என்றால் இவர்கள் மார்க்க அறிஞர்களா? மஞ்சள் பத்திரிகையில் எழுதுபவர்களா?

இதற்குப் போட்டியாக ஷாஃபி மத்ஹப் கூறுவதைப் பாருங்கள்!

وشمل الفرج فرج نفسه كأن أدخل ذكره في دبره فيحد به. - إعانة الطالبين -

ஆணுறுப்பு என்ற வார்த்தை தன்னுடைய ஆணுறுப்பையும் குறிக்கும். எனவே ஒருவன் தன்னுடைய ஆணுறுப்பைத் தனது பின் துவாரத்தில் விட்டான் என்றால் அதற்காக அவனுக்குத் தண்டனை கொடுக்கப்படும்.

நூல் : ஷாஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய இஆனா

இரண்டும் வெவ்வேறு சட்டங்களைக் கூறினாலும் தனது ஆண்குறியை தனது பின் துவாரத்தில் நுழைக்கும் சாத்தியமற்றதைப் பற்றி ரொம்ப ஆய்வு செய்துள்ளனர். இதன் பிறகும் இவர்களை நல்லறிஞர்களாக உங்களால் மதிக்க முடிகிறதா?

## நோன்புக்குக் கேவலம்

நோன்பு என்பது ஒரு கேடயம் என்று மார்க்கம் சொல்கிறது. திருமணம் ஆகாமல் இருப்பவர் வழி தவறிவிடாமல் இருப்பதற்கு நோன்பு நோற்பது கேடயம் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் வழிகாட்டியுள்ளனர்.

அந்த நோன்பை எந்த அளவுக்கு கொச்சைப் படுத்தியுள்ளனர் என்று பாருங்கள்!

فَإِنْ جَامَعَ بَهِيمَةً، أَوْ مَيْتَةً فَلَيْسَ عَلَيْهِ الْكَفَّارَةُ أَنْزَلَ أَوْ لَمْ يُنْزِلْ عِنْدَنَا خِلَافًا لِلشَّافِعِيِّ رَحِمَهُ اللَّهُ تَعَالَى فَإِنَّ السَّبَبَ عِنْدَهُ الْجِمَاعُ الْمُعْدِمُ لِلصَّوْمِ وَقَدْ وُجِدَ وَلَكِنَّا نَقُولُ الْجِنَايَةُ لَا تَتَكَامَلُ إلَّا بِاقْتِضَاءِ شَهْوَةِ الْمَحَلِّ، وَهَذَا الْمَحَلُّ غَيْرُ مُشْتَهًى عِنْدَ الْعُقَلَاءِ – المبسوط

நோன்பு வைத்துக் கொண்டு செத்த பிணத்துடனோ, மிருகத்துடனோ ஒருவன் உடலுறவு கொண்டு விந்து வெளிப்பட்டாலும், வெளிப்படாவிட்டாலும் நோன்பை முறித்ததற்கான கப்ஃபாரா (பரிகாரம்) அவசியம் இல்லை.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய மப்சூத்

وَلَوْ جَامَعَ بَهِيمَةً فَأَنْزَلَ فَسَدَ صَوْمُهُ وَعَلَيْهِ الْقَضَاءُ وَلَا كَفَّارَةَ عَلَيْهِ لِأَنَّهُ وَإِنْ وُجِدَ الْجِمَاعُ صُورَةً وَمَعْنًى وَهُوَ قَضَاءُ الشَّهْوَةِ لَكِنْ عَلَى سَبِيلِ الْقُصُورِ لِسَعَةِ الْمَحَلِّ، وَلَوْ جَامَعَهَا وَلَمْ يُنْزِلْ لَا يَفْسُدُ - بدائع الصنائع

மிருகத்துடன் உறவுகொண்டு விந்து வெளிப்பட்டால் நோன்பு முறியும். அந்த நோன்பைக் களா செய்ய வேண்டும். உடலுறவு நடந்தாலும் அது பூரணமானதாக இல்லாமல் குறைபாடு உடையதாக உள்ளதால் நோன்பை முறித்ததற்கான பரிகாரம் தேவையில்லை. விந்து வெளிப்படாமல் மிருகத்துடன் உறவுகொண்டால் நோன்பு முறியாது.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய பதாயிவுஸ் ஸனாயிவு

செத்த பிணத்துடன் அல்லது மிருகத்துடன் ஒருவன் உறவு கொள்வானா? இவ்வாறு செய்தால் நோன்பு முறித்ததற்கான பரிகாரம் செய்யத் தேவை

இல்லை என்று சட்டமியற்றி பாவம் செய்யத்தூண்டும் மத்ஹபுகள் நமக்குத் தேவைதானா?

நோன்பாளியின் இறையச்சத்தைப் போக்கும் வகையில் கேடு கெட்டவர்கள் தான் மத்ஹபு சட்டத்தை எழுதியுள்ளனர் என்பது தெரிகிறதா?

இப்படி கேவலமாக உங்கள் புத்தி ஏன் வேலை செய்கிறது என்று நாம் கேட்டால் அதற்கு இவர்கள் சொல்லும் பதில் என்ன தெரியுமா? எங்கள் இமாம்கள் மட்டுமா ஆபாசமாகச் சட்டம் சொன்னார்கள்? நபிகள் நாயகமே சொல்லி உள்ளார்கள் என்று நெஞ்சமுழுத்தத்துடன் கூறுகின்றனர்.

سنن أبي داود 4464 - حَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ مُحَمَّدٍ النُّفَيْلِيُّ، حَدَّثَنَا عَبْدُ الْعَزِيزِ بْنُ مُحَمَّدٍ، حَدَّثَنِي عَمْرُو بْنُ أَبِي عَمْرٍو، عَنْ عِكْرِمَةَ، عَنِ ابْنِ عَبَّاسٍ، قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «مَنْ أَتَى بَهِيمَةً فَاقْتُلُوهُ وَاقْتُلُوهَا مَعَهُ»

மிருகத்துடன் புணர்பவனையும் அம்மிருகத்தையும் கொன்று விடுங்கள் என்று ரசூல் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

(நூல் அபூதாவூத்

ஒரு மனிதன் ஆசையின் உச்சக் கட்டத்தில் இவ்விதம் செய்து விட்டால் என்ன சட்டம் என்பதைச் சொல்ல வந்த இமாம்களின் சொற்கள் ஆபாசமென்றால் மேற்கூறப்பட்ட ஹதீஸிலும் அவ்விதமே வந்துள்ளது. ஆகையால் நபி (ஸல்) அவர்களின் சொல்லும் ஆபாசம் என்று சொல்ல முன்வருவார்களா? அதையும் மிருகத்தனமானது என்று சொல்வார்களா?

என்று மத்ஹபு வெறி தலைக்கேறிய ஆலிம்சாக்கள் கூறுகின்றனர்.

"மிருகத்துடன் உடலுறவு கொண்டால் குளிப்பு கடமையில்லை" என்று கூறுவதும், மிருகத்துடன் புணர்ந்தால் அவனைக் கொல்லுங்கள் என்பதும் சமமாக இந்த அயோக்கியர்களுக்குத் தெரிகிறது.

இதைச் செய்தால் குளிப்பு கடமையில்லை என்று கூறும் போது இது செய்யத்தக்க காரியம் என்ற கருத்து மறைந்துள்ளது. இது ஒரு பாவமான காரியம் என்ற கருத்து இதில் அடங்கியிருக்கவில்லை.

ஆனால் மேற்கண்ட ஹதீஸில் அவ்வாறு செய்பவனைக் கொல்லுங்கள் என்று கூறப்படுகின்றது. இவ்வாறு செய்ய நினைப்பவனுக்கு அச்சம் ஊட்டப்படுகிறது. இத்தகைய காரியத்தைச் செய்பவன் உலகில் வாழவே தகுதியற்றவன் என்று மேற்கண்ட ஹதீஸ் கூறுகின்றது.

இதைச் செய்தால் குளிக்கத் தேவையில்லை என்று கூறி காட்டுமிராண்டிகளுக்குச் சட்டம் வகுக்கும் அந்த மூடர்களின் கற்பனை எங்கே? இத்தகையோரை உலகில் வாழவே விடக் கூடாது என்ற அல்லாஹ்வின் தூதருடைய எச்சரிக்கை எங்கே?

பாவிகளா! உங்கள் ஆபாசக் கற்பனையையும், அல்லாஹ்வின் தூதருடைய அர்த்தமுள்ள அறிவுரையையும் உங்களால் எப்படிச் சமமாகக் கருத முடிகிறது?

இவர்கள் எடுத்துக் காட்டிய ஹதீஸ் இவர்கள் கற்பனை செய்த சட்டத்திற்கு எதிராக அமைந்துள்ளதைக் கூட இவர்கள் உணரவில்லை.

மிருகத்துடன் புணர்ந்தவன் உலகில் வாழவே கூடாது என்று மேற்கண்ட ஹதீஸ் கூறுவதால் இவனுக்குக் குளிப்பு கடமையா என்ற கேள்வியே அடிபட்டுப் போகின்றது. இவனுக்குக் குளிப்பு கடமையில்லை என்று எழுதிய இவர்கள் எந்த ஆதாரத்தின் அடிப்படையில் இந்த முடிவுக்கு வந்தனர் என்பதை விளக்கட்டும்.

சாதாரண நேரத்திலேயே மிருகத்துடன் புணர்பவன் தண்டிக்கப்பட வேண்டும்; கொல்லப்பட வேண்டும் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறுகிறார்கள். நோன்பு வைத்திருப்பவன் நிச்சயம் இப்படியெல்லாம் செய்ய மாட்டான். இது போன்ற தீய எண்ணங்களைத் தடுக்கத் தான் நோன்பு கடமையாக்கப்பட்டுள்ளது.

நோன்பு வைத்துக் கொண்டு இவ்வாறு செய்தால் பரிகாரம் தேவையில்லை என்று எழுதி வைத்ததன் மூலம் இவர்கள் சொல்ல வருவது என்ன? இந்தப் பாவத்தைச் சாதாரணமான காரியமாகச் சித்தரிக்கவில்லையா? நோன்பின் புனிதத்தைப் பாழாக்கவில்லையா?

## சிறுமியுடன் உறவு கொண்டால் குளிப்பு கடமை இல்லை

لَا يَجِبُ الْغُسْلُ بِوَطْءِ صَغِيرَةٍ غَيْرِ مُشْتَهَاةٍ وَلَا يَنْتَقِضُ الْوُضُوءُ – در المختار

ஆசைவைக்க முடியாத சிறுமியுடன் உடலுறவு கொண்டால் குளிப்பும் கடமையில்லை. உளூவும் முறியாது

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய ரத்துல் முஹ்தார்

இவ்வளவு ஆபாசமாகக் கூட கற்பனை செய்ய முடியுமா?

இதைச் செய்தால் குளிப்பு கடமையில்லை என்று கூறும் போது இது செய்யத்தக்க காரியம் என்ற கருத்து மறைந்துள்ளது. இது ஒரு பாவமான காரியம் என்ற கருத்து இதில் அடங்கியிருக்கவில்லை.

இப்படி நடக்கக் கூடியவர்கள் இருக்கிறார்கள் என்றே வைத்துக் கொண்டாலும் இதனால் குளிப்பு கடமையில்லை என்று எப்படிக் கூற முடியும்? அதற்கான ஆதாரம் என்ன?

## ஒரு நாள் வயதுக் குழந்தையைச் சீரழித்தல்

பிறந்து ஒரு நாளே ஆன ஆண் குழந்தையை காமவெறி கொண்ட பெண்கூட காமத்துடன் பார்க்க மாட்டாள். அது போல் பிறந்து ஒரு நாளே ஆன பெண் குழந்தையை காம வெறியன் கூட காமத்துடன் பார்க்க மாட்டான். ஆனால் அப்படிச் செய்தால் என்ன சட்டம் என்று மத்ஹபு சட்ட மடையர்கள் ஆய்வு செய்துள்ளதப் பாருங்கள்!

(وقوله: ذكر أو أنثى) أي ولو صغيرا فلو أولج مكلف ذكره في فرج صغيرة ولو بنت يوم فإنه يحد كما أن المرأة المكلفة لو أدخلت ذكر صبي ولو ابن يوم في فرجها فإنها تحد - إعانة الطالبين

ஒரு ஆண் தனது ஆணுறுப்பை பிறந்து ஒரு நாளே ஆன பெண் குழந்தையின் உறுப்பில் நுழைத்தால் தண்டிக்கப்படுவான். அது போல் ஒரு பெண், பிறந்து ஒரு நாளே ஆன ஆண் குழந்தையின் உறுப்பை தனது உறுப்புக்குள் நுழைத்தால் அவளும் தண்டிக்கப்படுவாள்.

நூல் : ஷாஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய ஃபத்ஹுல் முயீன்

தண்டிக்கப்படுவார்கள் என்று தான் எழுதப்பட்டுள்ளது என நல்லெண்ணம் வைக்க முடியாது. எந்த மனிதனுடைய மனதிலும் தோன்றாத காமவெறி தலைக்கேறியதால் தான் இப்படியெல்லம் கற்பனைச் சட்டங்களை வகுத்துள்ளனர் என்பதைத் தான் இங்கே கவனிக்க வேண்டும்.

## மிருகத்துடனும் செத்த பிணத்துடனும் உடலுறவு

மிருகத்துடனும், செத்த பிணத்துடனும் உடலுறவு கொள்வதைத் தூண்டும் வகையிலும் மத்ஹபுக் கயவர்கள் சட்டம் இயற்றி அதை மதரஸாவில் படித்துக் கொடுக்கின்றனர்.

(أَوْ أَدْخَلَ ذَكَرَهُ فِي بَهِيمَةٍ) أَوْ مَيْتَةٍ (مِنْ غَيْرِ إنْزَالٍ) أَوْ (مَسَّ فَرْجَ بَهِيمَةٍ أَوْ قَبَّلَهَا فَأَنْزَلَ أَوْ أَقْطَرَ فِي إحْلِيلِهِ) مَاءً أَوْ دُهْنًا وَإِنْ وَصَلَ إلَى الْمَثَانَةِ عَلَى الْمَذْهَبِ، وَأَمَّا فِي قُبُلِهَا فَمُفْسِدٌ إجْمَاعًا لِأَنَّهُ كَالْحُقْنَةِ. رد المحتار

ஒருவன் தன் ஆணுறுப்பை ஒரு மிருகத்திடமோ, பிணத்திடமோ இந்திரியம் வெளிப்படாதவாறு செலுத்தினாலும், மிருகத்தின் (பெண்) உறுப்பைத் தொட்டு அல்லது முத்தமிட்டு இந்திரியம் வெளிப்பட்டாலும், தன்னுடைய ஆணுறுப்பின் துவாரத்தில் தண்ணீரை அல்லது எண்ணையை சொட்டு விட்டு, அது உள்ளே இருக்கும் மூத்திரப் பையை அடைந்தாலும் நமது மத்ஹபின் படி நோன்பு முறியாது. ஆனால் நோன்பு வைத்துள்ள பெண் தனது பிறப்புறுப்பின் துவாரத்தில் எண்ணையை விட்டு அது மூத்திரப்பை வரை சென்றால் நோன்பு முறிந்து விடும்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

சாதாரண மனிதன் கூட பிணத்துடன் உடலுறவு கொள்ள மாட்டான். நோன்பு வைத்து இருப்பவன் இதுபோல் கேடுகெட்ட செயலைச் செய்ய மாட்டான். ஆனால் மத்ஹப் அறிஞர்கள் என்ற காமக்கொடூரர்கள் இப்படியெல்லாம் கற்பனை செய்துள்ளனர். அப்படி ஒருவன் மிருகமாக நடந்து கொண்டால் நோன்பு மூறியும் என்று சொல்லி இருந்தால் கூட ஓரளவு ஆறுதல் அடையலாம். இப்படியெல்லாம் செய்தால் நோன்பு முறியாது என்று இந்தக் கயவர்கள் எழுதி வைத்துள்ளனர்.

மனைவியுடன் உறவு கொண்டால் நோன்பு முறிந்து விடும்; ஒரு நோன்பை முறித்ததற்காக அறுபது நோன்பு நோற்க வேண்டும் என்று அல்லாஹ்வுக்குப்

பயந்து தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்பவனுக்கு இவர்கள் காட்டும் வழி என்ன?

மிருகத்துடன் உறவு கொள்! அல்லது பிணத்துடன் உறவு கொள்! உன் நோன்புக்கு பாதிப்பு வராது என்று சட்டம் கூறி மக்களை வழிகெடுக்கும் மத்ஹப் தேவையா? சிந்தித்துப் பாருங்கள்!

மேலும் நோன்பு வைத்துள்ள ஆண்களோ, பெண்களோ தமது உறுப்புக்குள் ஏன் எண்ணையை விட வேண்டும்? அது மூத்திரப்பை வரை எப்படிச் செல்லும்? அதை ஸ்கேன் செய்து பார்த்து இந்த மூடர்கள் கண்டுபிடித்தார்களா?

## ஹஜ் செய்யும் பெண்ணைக் கொச்சைப்படுத்துதல்

وَكَذَا لَوْ اسْتَدْخَلَتْ ذَكَرَ حِمَارٍ أَوْ ذَكَرًا مَقْطُوعًا فَسَدَ حَجُّهَا إجْمَاعًا رد المحتار

இவ்வாறே ஒருத்தி தன் பெண்ணுறுப்பில் கழுதையின் ஆணுறுப்பைத் திணித்தாலோ, அல்லது துண்டிக்கப்பட்ட ஆணுறுப்பைத் திணித்தாலோ ஏகோபித்த முடிவின் படி அவளது ஹஜ் வீணாகி விடும்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய ரத்துல் முஹ்தார்

மிருகத்துடன் ஆண் உறவு கொண்டால் அவனது ஹஜ் முறியாது என்றும், மிருகத்துடன் பெண் உறவு கொண்டால் அவளது ஹஜ் முறியும் என்றும் முரண்பாடாகச் சட்டம் வகுத்தது ஏன் என்பதற்கு காமுகர்களான மத்ஹப் சட்ட நிபுணர்கள் அளிக்கும் விளக்கத்தைப் பாருங்கள்!

(قوله وكذا لو استدخلت ذكر حمار) والفرق بينه وبين ما إذا وطئ بهيمة حيث لا يفسد حجه أن داعي الشهوة في النساء أتم فلم تكن في جانبهن قاصرة، بخلاف الرجل إذا جامع بهيمة ط (رد المحتار)

மிருகத்துடன் ஆண் உறவு கொண்டால் அவனது ஹஜ் முறியாது என்பதற்கும், மிருகத்துடன் பெண் உறவு கொண்டால் அவளது ஹஜ் முறியும் என்பதற்கும் வித்தியாசம் உள்ளது. ஆண்கள் மிருகத்துடன் உறவு கொண்டால் பூரண இன்பம் கிடைக்காது. ஆனால் பெண்கள் தமது உறுப்பில் எதை விட்டாலும் பூரண இன்பம் கிடைத்து விடும். இதுதான் வித்தியாசம்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய ரத்துல் முஹ்தார்

மஞ்சள் பத்திரிகையில் எழுதத் தகுதியானவர்கள் தான் இமாம்கள் என்ற போர்வையில் இச்சட்டங்களை எழுதியுள்ளனர் என்று தெளிவாகத் தெரிகின்றது.

புனிதமான ஹஜ்ஜுக்குச் செல்லும் பெண்களை இவ்வளவு கேவலமாகவும், அசிங்கமாகவும் சித்தரித்து எழுதியுள்ள இந்த மத்ஹபுச் சட்டங்களை குறைந்த பட்ச மார்க்கப் பற்று உள்ள எவரும் ஏற்றுக் கொள்ள முடியுமா?

### சுவனத்தில் ஹோமோ செக்ஸா

( وَلَا تَكُونُ) اللِّوَاطَةُ (فِي الْجَنَّةِ عَلَى الصَّحِيحِ) لِأَنَّهُ تَعَالَى اسْتَقْبَحَهَا وَسَمَّاهَا خَبِيثَةً، وَالْجَنَّةُ مُنَزَّهَةٌ عَنْهَا فَتْحٌ . (رد المحتار -

சரியான கருத்துப்படி, சுவனத்தில் ஆணுக்கு ஆண் உறவு கொள்தல் இல்லை. ஏனெனில் அல்லாஹ் அதை அருவருக்கத் தக்கதாக ஆக்கி, அதை அசிங்கம் என்று குறிப்பிடுகின்றான். சுவனம் இத்தகைய அசிங்கத்தை விட்டும் தூய்மையாக்கப் பட்டதாகும்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

சரியான கருத்துப்படி என்று சொல்வதன் மூலம் இவர்களின் மத்ஹபில் சொர்க்கத்தில் ஓரினச்சேர்க்கை உள்ளது என்ற கருத்தும் உள்ளது என்று தெரிகிறது.

நல்லடியார்களுக்கு இறைவன் பரிசாக வழங்கும் சுவனத்தைப் பற்றிக் கூறும் போது கூட இந்த மத்ஹபு நூலாசிரியர்கள் தங்கள் வக்கிரப் புத்தியை விடவில்லை. சொர்க்கத்தில் ஹோமோ செக்ஸ் உண்டா? என்ற ஆராய்ச்சி செய்ய வேண்டிய அவசியம் என்ன? இந்த உலகத்தில் அதில் ஆர்வம் உள்ளவர்கள் தான் மறுமையில் அதற்கு அனுமதி உள்ளதா? என்று ஆய்வு செய்வார்கள். மத்ஹபு நூலாசிரியர்கள் காமக் கொடூரர்கள் என்பது இதிலிருந்து தெரிகின்றது.

## பெற்ற மகளைக் காமக்கண் கொண்டு பார்க்கும் தந்தை

وَفِي الْخَانِيَّةِ إنَّ النَّظَرَ إلَى فَرَجِ ابْنَتِهِ بِشَهْوَةٍ يُوجِبُ حُرْمَةَ امْرَأَتِهِ وَكَذَا لَوْ فَزِعَتْ فَدَخَلَتْ فِرَاشَ أَبِيهَا عُرْيَانَةً فَانْتَشَرَ لَهَا أَبُوهَا تَحْرُمُ عَلَيْهِ أُمُّهَا (الدر المختار -

தந்தை தனது மகளின் பெண்ணுறுப்பை இச்சையுடன் பார்ப்பதால் அவருடைய மனைவி அவருக்கு ஹராமாகி விடுவாள். இது போலவே மகள், திடுக்கிட்டுத் தனது தந்தையின் படுக்கை நோக்கி நிர்வாணமாகச் சென்று அதனால் தந்தைக்கு இச்சை கிளம்பி விடுமாயின் அவளது தாய் இவருக்குத் ஹராமாகி விடுவாள்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

மிருகங்களுக்குக் கூட தோன்றாத இந்தச் செயலை, மார்க்கச் சட்டங்கள் என்ற பெயரில் எழுதி வைத்துள்ளனர். குர்ஆன், ஹதீஸில் இதற்கு ஆதாரம் உள்ளதா? என்று கூடக் கேட்க முடியாத அளவுக்குக் கொச்சையான, அருவருக்கத்தக்க, ஆபாசக் களஞ்சியங்களாகத் திகழும் இந்த மத்ஹபு நூல்களைக் குப்பையில் கொண்டு போய் போட வேண்டாமா?

ஒரு தந்தை பெற்ற மகளின் பெண்ணுறுப்பைப் பார்க்கிறான் என்று வைத்துக் கொள்வோம். இதை அவன் வந்து தண்டோரா போடுவானா?

பெற்ற மகளையே காமத்துடன் அணுகியவன் னைவி அவனுக்கு ஹராமாகி விடுவாள் என்ற சட்டத்தை மட்டும் மதித்து நடப்பானோ? சரியான வடிகட்டிய முட்டாள்கள் தான் இது போல் சட்டம் எழுத முடியும் என்று தெரிகிறதா?

## பன்றி நாய்களையும் விட்டு வைக்காத நாதாரிகள்

لو نَزَا كلبٌ أو خنزيرٌ على آدمِيّة فولَدَت آدَمِياً كان الوَلَدُ نَجِساً، ومع ذلك هو مُكلَّفٌ بالصلاة وغيرها. (فتح المعين -

ஒரு நாய் அல்லது பன்றி, மனித இனத்தைச் சார்ந்த பெண்ணுடன் உடலுறவு கொண்டு அவள் ஒரு மனிதக் குழந்தையைப் பெற்றால் அந்தக் குழந்தை அசுத்தமானவன் ஆவான். இவ்வாறு அசுத்தமாக இருப்பதுடனே தொழுகை மற்றும் இதர கடமைகள் அவன் மீது கடமையாக்கப்பட்டு உள்ளன.

நூல் : ஷாஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய பத்ஹுல் முயீன்

فإن نزا مأكول على مأكولة فولدت ولدا على صورة الآدمي فإنه طاهر مأكول فلو حفظ القرآن وعمل خطيبا وصلى بنا عيد الأضحى جاز أن يضحى به بعد ذلك (إعانة الطالبين

ஒரு உண்ணத்தக்க ஆண்பிராணி ஒரு உண்ணத்தக்க பெண்பிராணியிடம் உடலுறவு கொண்டு மனித வடிவத்தில் ஒரு ஆண்குழந்தையை அது பெற்றெடுத்தால் அந்தக் குழந்தை பரிசுத்தமானதாகும். உண்ணத்தக்கதாகும். அவன் குர்ஆனை மனப்பாடம் செய்து, கத்தீபாக பணிசெய்தாலும் சரியே. அவன் நமக்கு ஹஜ்ஜுப் பெருநாள் தொழுகையை தொழவைத்தால் அதற்குப் பிறகு அவனை குர்பானி கொடுப்பதும் கூடும்.

நூல் : ஷாஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய இஆனதுத்தாலிபீன்

ஆடும் ஆடும் சேர்ந்தால் மனித வடிவில் குழந்தை பிறக்குமா? அப்படி பிறந்தாலும் மனிதனைப் போல் பகுத்தறிவுடனும் மனிதத் தன்மையுடனும் பிறக்குமா?

மத்ஹபு இமாம்கள் எனப்படும் இவர்களுக்கு காமவெறிதான் மேலோங்கி இருந்ததே தவிர பொது அறிவு அறவே இல்லை என்பதற்கு இந்த மடமை தக்க ஆதாரமாக அமைந்துள்ளது.

இந்த மடையர்களைப் பின்பற்றினால் வெற்றி பெற முடியுமா என்று சிந்தியுங்கள்!

பெண்ணுறுப்பில் பஞ்சை நுழைத்தால் நோன்பு முறியுமா?

இறையச்சத்தை அதிகரிப்பதற்காக அல்லாஹ் கடமையாக்கிய நோன்பையும், நோன்பாளிகளையும் இந்தக் காமக் கொடூர மத்ஹபினர் எந்த அளவுக்கு இழிவுபடுத்தியுள்ளனர் என்பதைப் பாருங்கள்!

)أَوْ أَدْخَلَ أُصْبُعَهُ الْيَابِسَةَ فِيهِ) أَيْ دُبُرِهِ أَوْ فَرْجِهَا وَلَوْ مُبْتَلَّةً فَسَدَ , وَلَوْ أَدْخَلَتْ قُطْنَةً إنْ غَابَتْ فَسَدَ وَإِنْ بَقِيَ طَرَفُهَا فِي فَرْجِهَا الْخَارِجِ لَا (الدر المختار -

ஒருவன் ஈரமில்லாத தன்னுடைய விரலை தன்னுடைய பின்துவாரத்திலோ, மனைவியின் பெண்ணுறுப்பிலோ நுழைத்தால் நோன்பு முறியாது. அது ஈரமானதாக இருந்தால் நோன்பு முறிந்து விடும். ஒரு பெண் பஞ்சை தன் உறுப்பில்

நுழைத்து அது முழுவதும் மறைந்து விட்டால் நோன்பு முறிந்து விடும். அவளது வெளிப்புற உறுப்பில் அந்தப் பஞ்சின் நுனிப்பகுதி தெரிந்தால் நோன்பு முறியாது.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முஹ்தார்

காமக்கடலில் மூழ்கித் திளைத்தவனுக்குத் தான் இது போல் கற்பனை செய்யத் தோன்றும். அல்லாஹ்வை அஞ்சி மறுமையை நம்பும் நன்மக்களுக்கு இது போல் கற்பனை செய்யத் தோன்றுமா? சிந்தித்துப் பாருங்கள்!

## அடிமைப் பெண் முன்னிலையில் உடலுறவு

மனைவியியுடன் உடலுறவு கொள்வது யாரும் பார்க்காத வகையில் தனிப்பட்ட முறையில் இருக்க வேண்டும் என்பதை அனைவரும் அறிந்து வைத்துள்ளோம். நாகரீகமுள்ள எந்த மனிதனும் மற்றவர்கள் முன்னிலையில் மனைவியுடன் உடலுறவு கொள்ள மாட்டான்.

ஆனால் மத்ஹப் கூறுவதைப் பாருங்கள்!

لَا بَأْسَ بِوَطْءِ الْمَنْكُوحَةِ بِمُعَايَنَةِ الْأَمَةِ دُونَ عَكْسِهِ - رد المحتار -

அடிமைப் பெண் நேரடியாகப் பார்க்கும் விதத்தில் ஒருவன் தன் மனைவியுடன் உடலுறவு கொள்வதில் தவறில்லை.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

வெட்கம் ஈமானில் உள்ளது என்று சொன்ன இஸ்லாமிய மார்க்கத்தில் இப்படி ஒரு சட்டத்தை எழுதி வைத்துள்ளார்கள். ஆனால் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறுவதைப் பாருங்கள்.

صحيح مسلم 74 - (338) حَدَّثَنَا أَبُو بَكْرِ بْنُ أَبِي شَيْبَةَ، حَدَّثَنَا زَيْدُ بْنُ الْحُبَابِ، عَنِ الضَّحَّاكِ بْنِ عُثْمَانَ، قَالَ: أَخْبَرَنِي زَيْدُ بْنُ أَسْلَمَ، عَنْ عَبْدِ الرَّحْمَنِ بْنِ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ، عَنْ أَبِيهِ، أَنَّ رَسُولَ اللهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ: «لَا يَنْظُرُ الرَّجُلُ إِلَى عَوْرَةِ الرَّجُلِ، وَلَا الْمَرْأَةُ إِلَى عَوْرَةِ الْمَرْأَةِ، وَلَا يُفْضِي الرَّجُلُ إِلَى الرَّجُلِ فِي ثَوْبٍ وَاحِدٍ، وَلَا تُفْضِي الْمَرْأَةُ إِلَى الْمَرْأَةِ فِي الثَّوْبِ الْوَاحِدِ»

ஓர் ஆண் மற்றொரு ஆணின் மர்ம உறுப்பைப் பார்க்க வேண்டாம். ஒரு பெண் மற்றொரு பெண்ணின் மர்ம உறுப்பைப் பார்க்க வேண்டாம் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: ஸஅத் பின் மாலிக் (ரலி)

நூல்: முஸ்லிம் 512

இந்த நபிமொழிகளுக்கும், பொதுவான மனித நாகரிகத்துக்கும் முரணாக இன்னொரு பெண்ணின் முன்னிலையில் மனைவியுடன் உடலுறவு கொள்ளலாம் என்று எழுதி வைத்த இவர்கள் மார்க்க அறிஞர்களா? இப்லீசின் உடன்பிறப்புக்களா? சிந்தித்துப் பாருங்கள்!

## கன்னியை அறியும் சோதனை

திருமணத்துக்குப் பின் மனைவியுடன் உடலுறவு கொள்ளவில்லை என்றோ திருமணத்தின் போது மனைவி கன்னித்தன்மையுடன் இருக்கவில்லை என்றோ கணவன் வாதிட்டால் அவனது மனைவிக்கு கன்னிப் பரிசோதனை நடத்த வேண்டும் என்று மத்ஹபு சட்ட வல்லுனர்கள் சட்டமியற்றியுள்ளதைப் பாருங்கள்!

ثُمَّ كَيْفَ يَعْرِفُ أَنَّهَا بِكْرٌ أَوْ ثَيِّبٌ؟ قَالُوا: يَدْفَعُ فِي فَرْجِهَا أَصْغَرَ بَيْضَةٍ مِنْ بَيْضِ الدَّجَاجِ، فَإِنْ دَخَلَ بِلَا عُنْفٍ فَثَيِّبٌ وَإِلَّا فَبِكْرٌ. وَقِيلَ إنْ أَمْكَنَهَا أَنْ تَبُولَ عَلَى الْجِدَارِ فَبِكْرٌ وَإِلَّا فَثَيِّبٌ، وَقِيلَ تُكْسَرُ الْبَيْضَةُ فَتُصَبُّ فِي فَرْجِهَا فَإِنْ دَخَلَتْ فَثَيِّبٌ وَإِلَّا فَبِكْرٌ العناية شرح الهداية

அவளது பிறப்பு உறுப்புக்குள் சின்ன கோழி முட்டையை நுழைக்க வேண்டும். அது எளிதாக உள்ளே சென்றால் அவள் கன்னித்தன்மை இழந்தவள். அவ்வாறு இல்லாவிட்டால் அவள் கன்னிப்பெண்ணாவாள். ஒரு சுவற்றை நோக்கி அவளை சிறுநீர் கழிக்கச் செய்ய வேண்டும். அவள் சுவற்றில் சிறு நீர்ர் கழித்தால் அவள் கன்னியாவாள். அவ்வாறு இல்லாவிட்டால் அவள் கன்னித்தன்மை இழந்தவளாவாள் என்று மற்றொரு வழியும் சொல்லப்பட்டுள்ளது. அல்லது முட்டையை உடைத்து உள்ளே ஊற்ற வேண்டும். அது உள்ளே போய்விட்டால் அவள் கன்னித்தன்மை இழந்தவள். உள்ளே போகாவிட்டால் அவள் அவள் கண்ணியாவாள் என்று மற்றொரு சோதனை முறையும் உள்ளது.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய இனாயா

சரியான காமவெறியர்கள் தான் உலமாக்கள் என்ற பெயரில் இது போல் சட்டம் இயற்றியுள்ளனர் என்று தெரிகிறதா?

## ஹஜ்ஜைக் களங்கப்படுத்திய கயவர்கள்

இறையச்சத்தை அதிகரிப்பதற்காக ஹஜ் செய்பவர் தனது ஆசாபாசங்களை அடக்கிக் கொண்டு பேணுதலைக் கடைப்பிடிப்பார். மனைவியுடன் சேர்ந்து ஹஜ் செய்பவர் கூட மனைவி அருகில் இருந்தும் அதிகக் கட்டுப்பாட்டுடன் நடந்து கொள்வார்.

ஆனால் காமவெறியர்களான மத்ஹபு இமாம்கள் எவ்வளவு கேவலமாக சட்டம் இயற்றியுள்ளனர் என்று பாருங்கள்.

)أَوْ أَدْخَلَ ذَكَرَهُ فِي بَهِيمَةٍ) أَوْ مَيْتَةٍ (مِنْ غَيْرِ إنْزَالٍ) أَوْ (مَسَّ فَرْجَ بَهِيمَةٍ أَوْ قُبُلَهَا فَأَنْزَلَ أَوْ أَقْطَرَ فِي إحْلِيلِهِ) مَاءً أَوْ دُهْنًا وَإِنْ وَصَلَ إلَى الْمَثَانَةِ عَلَى الْمَذْهَبِ، وَأَمَّا فِي قُبُلِهَا فَمُفْسِدٌ إجْمَاعًا لِأَنَّهُ كَالْحُقْنَةِ. الدر المختار

ஹஜ்ஜின் போது தனது ஆணுறுப்பை மிருகத்திடமோ, செத்த பினத்திடமோ விந்து வெளிப்படாத வகையில் நுழைத்தால், அல்லது மிருகத்தின் பெண்ணுறுப்பைத் தொட்டு, அல்லது அவளது பிறப்புறுப்பை முத்தமிட்டு விந்து வெளிப்பட்டால், அல்லது தனது ஆணுறுப்புக்குள் தண்ணீரையோ எண்ணையையோ விட்டு அது சிறுநீர்ப்பை வரை சென்றால் இக்காரியங்களால் ஹஜ் முறியாது. ஒரு பெண் தண்ணீரையோ, எண்ணையையோ தனது உறுப்புக்குள் விட்டால் அவளது ஹஜ் முறியும். இது ஏகாபித்த முடிவாகும்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

وَلَوْ جَامَعَ بَهِيمَةً وَأَنْزَلَ لَمْ يَفْسُدْ حَجُّهُ وَعَلَيْهِ دَمٌ، وَإِنْ لَمْ يُنْزِلْ فَلَا شَيْءَ عَلَيْهِ، وَالِاسْتِمْنَاءُ بِالْكَفِّ عَلَى هَذَا - فتح القدير

மிருகத்துடன் உடலுறவு கொண்டு விந்து வெளிப்பட்டாலும் ஹஜ் முறியாது. ஒரு ஆட்டை அறுப்பது அவன் மீது கடமையாகும். விந்து வெளிப்படாமல் மிருகத்துடன் உடலுறவு கொண்டால் அதுவும் தேவையில்லை. சுய இன்பம் அனுபவிப்பதும் இப்படித்தான். (அதாவது ஹஜ் முறியாது, எந்தப் பரிகாரமும் தேவையில்லை.)

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய ஃபத்ஹுல் கதீர்

وَكَذَا لَوْ اسْتَدْخَلَتْ ذَكَرَ حِمَارٍ أَوْ ذَكَرًا مَقْطُوعًا فَسَدَ حَجُّهَا إجْمَاعًا الدر المختار

ஹஜ்ஜுக்குச் சென்றவள் கழுதையின் ஆணுறுப்பையோ, வெட்டி எடுக்கப்பட்ட ஆணுறுப்பையோ தனது பெண்ணுறுப்பில் நுழைத்தால் அவளது ஹஜ் முறியும். இது ஏகோபித்த முடிவாகும்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

மிருகத்துடன் ஆண் புணர்ந்தால் ஹஜ் முறியாது என்றும், பெண்ணுக்கு முறியும் என்றும் வேறுபடுத்தி சட்டம் இயற்றிய காரணத்தை காமவெறி சட்ட வல்லுனர்கள் எப்படி விளக்குகிறார்கள் என்று பாருங்கள்!

(قَوْلُهُ وَكَذَا لَوْ اسْتَدْخَلَتْ ذَكَرَ حِمَارٍ) وَالْفَرْقُ بَيْنَهُ وَبَيْنَ مَا إذَا وَطِئَ بَهِيمَةً حَيْثُ لَا يَفْسُدُ حَجُّهُ أَنَّ دَاعِيَ الشَّهْوَةِ فِي النِّسَاءِ أَتَمُّ فَلَمْ تَكُنْ فِي جَانِبِهِنَّ قَاصِرَةً، بِخِلَافِ الرَّجُلِ إذَا جَامَعَ بَهِيمَةً ط رد المحتار

பெண்கள் மிருகத்துடன் சேர்ந்தாலும் அவர்களுக்குப் பூரண இன்பம் கிடைத்து விடும். அவர்களின் இன்பத்துக்கு எந்தக் குறைவும் ஏற்படாது. ஆனால் ஆண்கள் மிருகத்துடன் சேர்ந்தால் அவர்களுக்குப் பூரண இன்பம் கிடைக்காது. எனவே மிருகத்துடன் சேரும் பெண்ணின் ஹஜ் முறியும். ஆணின் ஹஜ் முறியாது

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

وَعَنْ أَبِي حَنِيفَةَ أَنَّهُ لَا يَفْسُدُ بِالْجِمَاعِ فِي الدُّبُرِ لِقُصُورِ مَعْنَى الْجِمَاعِ فِيهِ؛ وَلِهَذَا لَا يَجِبُ بِهِ الْحَدُّ عِنْدَهُ، وَلَا فَرْقَ فِي ذَلِكَ بَيْنَ أَنْ يَكُونَ عَامِدًا، أَوْ نَاسِيًا طَائِعًا أَوْ مُكْرَهًا لِمَا ذَكَرْنَا فِي الصَّوْمِ. تبيين الحقائق

ஹஜ்ஜுக்குப் போய் மலத்துவாரத்தில் உறவு கொண்டால் ஏகோபித்த கருத்துப்படி ஹஜ் முறியாது; ஏனெனில் இதில் பூரண இன்பம் இல்லை என்று அபூஹனீஃபா கூறுகிறார். வேண்டுமென்று செய்தல், மறதியாகச் செய்தல், விரும்பிச் செய்தல், கட்டாயப்படுத்திச் செய்தல் ஆகியவற்றுக்கிடையே எந்த வேறுபாடும் இல்லை என்பதும் அபூஹனீஃபாவின் கருத்தாகும்.

وَلَوْ وَطِئَ بَهِيمَةً لَا يَفْسُدُ حَجُّهُ ؛ لِمَا قُلْنَا وَلَا كَفَّارَةَ عَلَيْهِ إلَّا إذَا أَنْزَلَ لِأَنَّهُ لَيْسَ بِاسْتِمْتَاعٍ مَقْصُودٍ بِخِلَافِ الْجِمَاعِ فِيمَا دُونَ الْفَرْجِ - بدائع الصنائع في ترتيب الشرائع

ஹஜ்ஜுக்குச் சென்றவன் மிருகத்துடன் உடலுறவு கொண்டால் அவனது ஹஜ் பாழாகாது. விந்து வெளிப்படாவிட்டால் அதற்கு பரிகாரமும் தேவை இல்லை. விந்து வெளிப்பட்டால் பரிகாரம் தேவை.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய பதாயிவுஸ் ஸனாயிவு

## வாடகை கொடுத்து விபச்சாரம் செய்வது குற்றமாகாது

விபச்சாரம் செய்பவன், விபச்சாரிக்கு உரிய வாடகையைக் கொடுக்காமல் விபச்சாரம் செய்தால் அதற்குத் தண்டனை உண்டாம். வாடகை பேசி விபச்சாரம் செய்தால் அதற்குத் தண்டனை இல்லையாம். இதோ காமவெறி தலைக்கு ஏறிய மத்ஹபு சட்ட வல்லுனர்கள் கூறுவதைப் பாருங்கள்!

(وَلَا) حَدَّ (بِالزِّنَا بِالْمُسْتَأْجَرَةِ لَهُ) أَيْ لِلزِّنَا. وَالْحَقُّ وُجُوبُ الْحَدِّ كَالْمُسْتَأْجَرَةِ لِلْخِدْمَةِ فَتْحٌ- الدر المختار

விபச்சாரம் செய்வதற்காக கூலி பேசிய பெண்ணிடம் விபச்சாரம் செய்பவனுக்கு விபச்சாரத்திற்கான தண்டனை இல்லை. சரியான கருத்துப்படி தண்டனை உண்டு என்று ஃபத்ஹுல் கதீர் ஆசிரியர் கூறுகிறார்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

சரியான கருத்துப்படி தண்டனை உண்டு என்று சொல்லி விட்டார்களே என்று மதிமயங்கிட வேண்டாம். இதையும் பாருங்கள்!

(قَوْلُهُ وَالْحَقُّ وُجُوبُ الْحَدِّ) أَيْ كَمَا هُوَ قَوْلُهُمَا، وَهَذَا بَحْثٌ لِصَاحِبِ الْفَتْح، وَسَكَتَ عَلَيْهِ فِي النَّهْرِ وَالْمُتُونِ وَالشُّرُوح عَلَى قَوْلِ الْإِمَامِ - الدر المختار

அபூயூசுப், முஹம்மத் ஆகியோரின் கருத்துப்படி ஃபத்ஹுல் கதீர் ஆசிரியர் தண்டனை உண்டு என்று கூறுகிறார். ஆனால் வாடகை கொடுத்து விபச்சாரம் செய்தால் தண்டனை இல்லை என்ற இமாம் அபூஹனீபாவின் கருத்தை எடுத்துக்காட்டிய நஹ்ர், மற்றும் மூல நூல்கள், விரிவுரை நூல்களில் அபூஹனீபா கூறியதை எதிர்த்து எதுவும் கூறவில்லை. (எனவே ஃபத்ஹுல் கதீர் ஆசிரியரின் கருத்து அவரது தனிப்பட்ட கருத்தாகும்.)

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துர்ருல் முக்தார்

ஹனஃபி மத்ஹப் சட்டப்படி ஓசியாக விபச்சாரம் செய்வதுதான் தண்டனைக்குரிய குற்றமாகும். முன்னரே வாடகை பேசிக் கொண்டு விபச்சாரம் செய்பவனுக்குத் தண்டனை இல்லை.

அல்லாஹ்வைப் பற்றிய அச்சம் உள்ள ஒருவன் இப்படி அல்லாஹ்வின் சட்டத்தைக் கேலிக்கூத்தாக்குவானா? இந்த மூடர்களின் சட்டப்படி விபச்சாரம்

செய்யும் யாரையும் தண்டிக்க முடியாது. ஏனெனில் விபச்சாரம் செய்து மாட்டிக் கொள்பவன் வாடகையைக் கொடுத்து விட்டேன் என்று சொன்னால் அவனைத் தண்டிக்க முடியாது.

## பைத்தியத்துடன் விபச்சாரம் செய்தால் தண்டனை இல்லை

தண்டிக்கப்படாமல் விபச்சாரம் செய்யும் வழியை மத்ஹபுகள் எவ்வாறு கற்றுத் தருகின்றன என்று பாருங்கள்!

فَإِذَا دَعَتْ الْعَاقِلَةُ الْبَالِغَةُ مَجْنُونًا أَوْ صَبِيًّا إلَى نَفْسِهَا فَزَنَى بِهَا لَا حَدَّ عَلَيْهَا عِنْدَنَا، المبسوط

ஒரு பெண் சிறுவனையோ, பைத்தியக்காரனையோ தன்னிடம் அழைத்து அவர்களுடன் விபச்சாரம் செய்தால் அவளுக்குத் தண்டனை இல்லை.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய மப்ஸூத்

இந்தச் சட்டத்துக்கான ஆதாரம் என்ன? மத்ஹப் சட்ட வல்லுனர்கள் கூறுவதைப் பாருங்கள்!

(وَحُجَّتُنَا) فِي ذَلِكَ أَنَّهَا مَكَّنَتْ نَفْسَهَا مِنْ فَاعِلٍ لَمْ يَأْثَمْ وَلَمْ يُحْرَجْ فَلَا يَلْزَمُهَا الْحَدُّ كَمَا لَوْ مَكَّنَتْ نَفْسَهَا مِنْ زَوْجِهَا وَبَيَانُ الْوَصْفِ ظَاهِرٌ - المبسوط

இச்சட்டத்துக்குரிய ஆதாரம் என்னவென்றால் விபச்சாரக் குற்றம் யாரிடம் ஏற்படாதோ அத்தகையவனுக்கு அவள் இடமளித்துள்ளாள். (சிறுவனுக்கும், கிறுக்கனுக்கும் எந்தக் குற்றமும் வராது.) எனவே தன் கணவனுக்கு இடமளித்தால் அது எப்படி குற்றமாகாதோ அது போல் இதுவும் குற்றமில்லை என்பதால் அவளுக்குத் தண்டனை இல்லை. இது தெளிவான விஷயமாகும்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய மப்ஸூத்

விபச்சாரம் செய்ய விரும்புபவள் பைத்தியக்காரனையோ, சிறுவனையோ பயன்படுத்திக் கொள்ள இந்தச் சட்டம் தூண்டுகிறது. எவ்வளவு கேவலமான பிறவிகளாக இந்தச் சட்ட வல்லுனர்கள் இருந்துள்ளனர் என்பது தெரிகிறதா?

## ஆட்டம் போட்டாலும் குளிப்பு கடமையில்லையாம்!

(و) منها (إيلاج بخرقة مانعة من وجود اللذة) على الأصح وقدمنا لزوم الغسل به احتياطا- مراقي الفلاح

இன்பத்தைத் தடுக்கும் வகையில் ஒரு துணியை ஆணுறுப்பில் சுற்றிக் கொண்டு உடலுறவு கொண்டால் குளிப்பு கடமை இல்லை. பேணுதலுக்காக குளித்துக் கொள்ளலாம்.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய மராகில் ஃபலாஹ்

(و) ومنها (وطء بهيمة أو) امرأة (ميتة من غير إنزال) مني لعدم كمال سببه- مراقي الفلاح

விந்து வெளிப்படாத வகையில் மிருகத்துடன் உடலுறவு கொண்டாலோ பெண் ஜனாஸாவுடன் உடலுறவு கொண்டாலோ குளிப்பு கடமையாகாது. ஏனெனில் இதில் பூரண இன்பம் கிடைக்காது.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய மராகில் ஃபலாஹ்

(و) منها (إصابة بكر لم تزل) الإصابة (بكارتها من غير إنزال) - مراقي الفلاح

கன்னிப்பெண்ணுடன் கன்னித்திரை கிழியாத வகையில் உடலுறவு கொண்டால் குளிப்பு கடமையாகாது.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய மராகில் ஃபலாஹ்

இதுபோன்ற சட்டங்கள் இறையச்சமுடையவர்களால் எழுதப்பட்டது என்று கருத முடியுமா?

## மிருகத்துடனோ, பிணத்துடனோ உடலுறவு கொண்டால் குளிப்பு கடமையாகாது

முஸ்லிம்களின் ஒழுக்கத்தில் எந்த அளவுக்கு காமக் கொடூர மத்ஹபினர் விளையாடியுள்ளனர் என்று பாருங்கள்!

(فِي أَحَدِ) مُتَعَلِّقٌ بِإِيلَاج (سَبِيلَيْ آدَمِيّ) احْتِرَازٌ عَنْ سَائِرِ الْحَيَوَانَاتِ فَإِنَّ إدْخَالَهَا فِي أَحَدِ سَبِيلَيْ الْبَهَائِمِ لَا يُوجِبُ غُسْلًا لِقِلَّةِ الرَّغْبَةِ (حَيٍّ) احْتِرَازٌ عَنْ إدْخَالِهَا فِي أَحَدِ سَبِيلَيْ مَيِّتٍ فَإِنَّهُ أَيْضًا لَا يَجِبُ الْغُسْلُ- درر الحكام شرح غرر الأحكام

மனிதனிடம் உடலுறவு கொண்டால் தான் குளிப்பு கடமையாகும். மிருகத்துடன் உடலுறவு கொண்டால் அதில் ஈடுபாடு குறைவு என்பதால் குளிப்பு கடமையாகாது. உயிருடன் உள்ளவரிடம் உடலுறவு கொண்டால் தான் குளிப்பு கடமையாகும். பிணத்துடன் உடலுறவு கொண்டால் குளிப்பு கடமையாகாது.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய துரருல் ஹுக்காம்

குளிப்பு கடமையாகாது என்பது மட்டுமல்ல. உளூவும் நீங்காதாம்

وَعَلَى هَذَا الْخِلَافِ إذَا أَتَى بَهِيمَةً فَأَنْزَلَ وَإِنْ لَمْ يُنْزِلْ لَا يَفْسُدُ صَوْمُهُ بِالِاتِّفَاقِ وَلَا يُنْتَقَضُ وُضُوءُهُ - تبيين الحقائق شرح كنز الدقائق

ஹனஃபி மத்ஹபைச் சேர்ந்த ஒருவன் மிருகத்துடன் உடலுறவு கொண்டு விந்து வெளிப்பட்டால் நோன்பு முறியும். இல்லாவிட்டால் நோன்பு முறியாது. உளூவும் முறியாது.

நூல் : ஹனஃபி மத்ஹபின் சட்ட நூலாகிய தப்யீனுல் ஹகாயிக்

## முடிவுரை

இந்த மார்க்கத்துக்கு உரிமையாளனாகிய அல்லாஹ்வின் சட்டம் எக்காலத்துக்கும் பொருந்தக் கூடியது. எளிதானது. யாருக்கும் அனீதி இழைக்காதது. நாகரீகமானது.

ஆனால் மத்ஹபுகள்

மடமைகளின் தொகுப்பாகவும்,

ஆபாசமாகவும் அருவருக்கத் தக்கவையாகவும்,

இஸ்லாத்தின் நற்பெயருக்கு களங்கம் ஏற்படுத்துவதாகவும்,

எல்லாவிதமான பாவங்களையும் மென்மைப்படுத்தி அவற்றைச் செய்யத் தூண்டக்கூடியதாகவும்,

நமது இறையச்சத்தையும் வணக்க வழிபாட்டையும் பாழாக்கக் கூடியதாகவும்,

பெண்களுக்கு கொடுமை இழைப்பதாகவும்,

குர்ஆனுக்கும் ஹதீஸுக்கும் எதிரான போர்ப் பிரகடணமாகவும்,

மறுமையில் நரகப்படுகுழியில் நம்மைத் தள்ளக்கூடியதாகவும்

அமைந்துள்ளதால் மத்ஹபுகளை சமுதாயத்தில் இருந்து ஒழித்துக் கட்டுவோம்.

அல்லாஹ்வும் அவனது தூதரும் காட்டிய நேர்வழியில் பயணிக்க அல்லாஹ் நமக்கு அருள்புரிவனாக!